
கல்கி
‘குண்டு’ நகரை வென்ற வேட்பாளர்!
– கோவை எம்.பி. சிறப்புப் பேட்டி
ஆஹா, அரண்மனை!
அடடா, சமையல்!
ஹா, கல்யாணம்!
வாவ், சரித்திரம்!
KALKI
15.3.98
ரூ. 4.50
செட்டிநாடு ஸ்பெஷல்!



• செட்டிநாடு

• குறைவற்ற அறப்பணிகள்

# சோழனின் கொடுமை... சோடை போகாத திறமை!



• அண்ணாமலை செட்டியார்

• தேவகோட்டை அழகப்ப செட்டியார்

• எம். அழகப்பன்

தென் தமிழகத்தில், காரைக்குடியிலும் அதனைச் சுற்றியுள்ள சுமார் தொண்ணூற்று ஆறு கிராமங்களிலுமாக வாழ்ந்து வந்த நகரத்தார் எனப்படும் நாட்டுக் கோட்டை செட்டியார் சமூகத்தினர் இன்று உலகம் முழுவதிலுமாகச் சிதறிப் போய்விட்டார்கள். மொத்தமாகச் சுமார் இரண்டரை லட்சம் பேர், இச் சமூகத்தைச் சேர்ந்தவர்கள் இன்று இருக்கிறார்கள் என்று கணக்குச் சொல்கிறார்கள்.

சமூகக் கட்டுப்பாடுகளுக்கும் நெறியோடு இயைந்த வாழ்க்கை முறைக்கும் பேர் போனது இச்சமூகம். அபாரமான தெய்வ பக்திக்கும் நலப்பணிகளுக்கும் உதாரண புருஷர்களாக விளங்கியிருக்கிறார்கள். "எங்கள் சமூகத்தில் நாத்திகர்களே அநேகமாகக் கிடையாது!'' என்று அடித்துச் சொல்கிறார்கள் செட்டிநாட்டு முக்கியஸ்தர்கள். என்ன காரணம்?

'மகுட தன வைசியர்' என்று அழைக்கப்படும் இவர்களது பூர்வீகக் கதையில் இதற்கு விடை இருக்கிறது.

தமிழகத்தைப் பிற்காலச் சோழ மன்னர்கள் ஆண்டு கொண்டிருந்த சமயம், காவிரிப் பூம்பட்டணத்தில் (பூம்புகார்) இச் சமூகத்தினர் வாழ்ந்து, வணிகம் செய்து வந்ததாக 'நாட்டுக் கோட்டை நகரத்தார் வரலாறு' என்னும் நூல் சொல்கிறது. அரசன் பூவந்திச் சோழனின் கொடுமையினால் தொடர்ந்து சோழ நாட்டில் வசிக்க முடியாத நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ஆயிரக்கணக்கான பெண்கள், மன்னனுக்குப் பயந்து தற்கொலை செய்து கொள்ள, எஞ்சியவர்கள் பாண்டிய நாட்டுக்குத் (இளையாத்தங்குடிக்கு) தப்பிச் சென்று விட்டார்கள்.

இந்தத் தப்பிச் சென்றவர்களின் பரம்பரைதான் இன்று இருக்கிற நகரத்தார் சமூகத்தினர்.

அரச பயம் காரணமாகவும் கடல் வாணிபத்தில் இருந்த கஷ்டங்கள் காரணமாகவும் கடவுளுக்குக் கட்டுப்பட்டு வாழும் வாழ்க்கை முறையை ஏற்படுத்திக் கொண்டார்கள். தம் சமூகத்துப் பெண்கள் பெரும்பாலோர் கொடுங்கோல் அரசனுக்குப் பயந்து உயிரை விட்டதனால், வேளாளர் குலத்துப் பெண்களை மணந்து கொண்டு இளையாத்தங்குடியைச் சுற்றியுள்ள கிராமங்களில் இவர்கள் வாழத் தொடங்கியதாகச் சொல்கிறார்கள்.

"திருநெல்வேலிப் பகுதியில்தான் சைவ வேளாளர்கள் அதிகம். அச் சமூகத்திலிருந்தே எங்கள் முன்னோர்கள் பெண் எடுத்ததனால், எங்கள் மொழியில் நெல்லை வாசனையும் சற்றுத் தூக்கலாக வீசும்!'' என்கிறார் செட்டிநாட்டில் நாம் சந்தித்த எம். அழகப்பன். (அண்ணாமலை பாலிடெக்னிக்கின் முன்னாள் பிரின்ஸிபால்.)

ஆரம்பத்தில் உப்பு வியாபாரம், பிறகு நவரத்தின வியாபாரம் செய்து வந்த இச் சமூகத்தினர், பின்னாளில் வட்டித் தொழிலுக்குப் பேர் போனவர்களானார்கள்.

"கடல் கடந்து செல்வது தவறு என்று சொல்லப்பட்ட காலத்திலேயே, துணிந்து பர்மா, இந்தோனேஷியா, ஜப்பான் போன்ற நாடுகளுக்கு வர்த்தக ரீதியில் பயணம் செய்தவர்கள், நகரத்தார்கள். வெளிநாடுகளில் வாணிபம் செய்தவர்கள் தவிர, இலங்கை தேயிலைத் தோட்டங்களிலும் பர்மாவில் ரப்பர் தோட்டங்களிலும் கூலிப் பணிக்கும் சென்று, மெல்ல மெல்ல தோட்டங்களின் சொந்தக்காரர்களாகவே ஆகிற அளவுக்கு உழைப்பால் உயர்ந்திருக்கிறார்கள். அங்கு ஈட்டும் பணத்தை, நம் நாட்டுக்குக் கொண்டு வந்து வட்டித் தொழிலில் ஈடுபட்டார்கள். வட்டி வாங்குவது, தொழில் என்ற போதும், அது 'பாவம்' என்று கருதியதால்தான், மனத்திருப்திக்காகப் பல தரும காரியங்களிலும் ஈடுபட்டார்கள். பல கோவில்கள் எழுப்பினார்கள். பழைய கோவில்களைப் புதுப்பிப்பது, வேளைக்குப் பூஜைகள் தவறாமல் நடக்க வழி செய்வது, கல்வி நிறுவனங்களை உருவாக்குவது, சத்திரங்கள் கட்டுவது என்று தரும காரியங்களில் ஈடுபட்டார்கள்'' என்கிறார், தேவகோட்டையைச் சேர்ந்த தொழிலதிபர் அழகப்ப செட்டியார்.

• ஏவி.எம். ஸ்டுடியோ - அன்று



## அந்த நாள் அதிசயம்!

செட்டிநாட்டுக்குப் பெரும் புகழ் பெற்றுத்தந்த விஷயங்களில் ஒன்று, தேவகோட்டை ரஸ்தாவில் அமரர் ஏவி.எம். நிறுவி நடத்திய ஏவி.எம். ஸ்டுடியோ. ஏவி.எம்மின் ஆரம்ப காலப் படங்களெல்லாம் இங்கு

பர்மாவில் மட்டும் ராஜா (அண்ணாமலை செட்டியார்) குடும்பத்துக்கு ஒரு லட்சம் ஏக்கர் நிலம் (தோட்டம்) உள்ளது என்பதும் தனக்கு ஆயிரத்து எழுநூறு ஏக்கர் நிலம் உண்டு என்பதும் அழகப்ப செட்டியார் அளித்த கூடுதல் தகவல்கள்.

ஆனால் அந்தந்த நாடுகளில் ராணுவப் புரட்சி ஏற்பட்டு, உயிர் வாழ்தல் பற்றிய பிரச்னை வந்தபோது, சொத்துக்களை அப்படி அப்படியே விட்டு விட்டு, தாய்நாடு திரும்பி விட்டதாக, செட்டிநாட்டில் நாம் சந்தித்த பல வணிகர்கள் தெரிவித்தார்கள்.

"இங்கே எங்கள் சமூகத்தினர், வட்டித் தொழில் நடத்திப் பிழைத்து வந்தது கூட தனியார் வங்கிகள் யாவும் அரசுடைமை ஆக்கப்படும் வரைதான். அதன் பிறகு அந்தத் தொழிலும் நசித்துப் போய்விட்டது. ஆரம்பத்தில் கல்விக்கு அத்தனை முக்கியத்துவம் தராமல் வாணிபத்தில் மட்டும் கவனம் செலுத்திய நகரத்தார் சமூகத்தினர், 'படிக்க வேண்டும். படித்து உத்தியோகம் தேடிக் கொள்வதுதான் இனி பிழைப்புக்கு வழி' என்று தெளிந்து, கல்விக்கு முக்கியத்துவம் தரத் தொடங்கியது இதன் பின்தான்! இன்று வட்டித் தொழில் இங்கே குறைந்து, அருகிவிட்டது. பல டாக்டர்களும் இஞ்சினியர்களும் ஆசிரியர்களும் சார்டர்ட் அகவுண்டண்ட்களும் இச்சமூகத்திலிருந்து வரத் தொடங்கிவிட்டார்கள். பிழைப்புக்காக, ஊரை விட்டு, உலகமெல்லாம் பரவிச் சிதறிப் போய் விட்டனர். நகரத்தார் கிராமங்கள் என்று சொல்லப்படும் தொண்ணூற்று ஆறில் பல இல்லாமலே போய் இன்று சுமார் எழுபத்தைந்து கிராமங்கள்தாம் இருக்கின்றன. இக்கிராமங்களில் மொத்தமாக 2,500 புள்ளிகள் (குடும்பங்கள்)தாம் இப்போது உள்ளன. ஒன்றாக வாழ்ந்த காலமெல்லாம் போய், ஏதாவது விசேஷம் என்றால் மட்டும்தான் இன்று அவரவர் ஊருக்கு வருகிறார்கள். பத்து நாள் இருந்து விட்டுப் பறந்து விடுகிறார்கள்!'' என்கிறார் செட்டிநாடு மின் வாரிய அலுவலகத்தின் ரெவின்யூ சூபர்வைசராக உள்ள அண்ணாமலை செட்டியார்.

**கா**ரைக்குடியிலும் தேவகோட்டையிலும் கானாடு காத்தானிலும் பிற கிராமங்களிலும் நாம் சந்தித்த அத்தனை நகரத்தார்களும் வருத்தத்துடன் குறிப்பிட்ட ஒரு விஷயம்- இச்சமூகத்தவரை அரசு பின் தங்கிய வகுப்பாக அங்கீகரிக்காதது தான்!

"எங்கள் சமூகத்தவரின் எண்ணிக்கை மிகவும் குறைவு. ஒரே தொழில் (வட்டி) செய்து கொண்டிருந்தவர்கள், அதனைச் செய்ய இயலாமல் போய் பரவலாக அரசுப் பணிகளிலும் பிற பணிகளிலும் அமரத் தொடங்கியதும் சமீப காலமாகத்தான். ஆனால், 'எந்தத் துறையிலும் உங்கள் ஆள் யாராவது இருக்கத்தான் செய்கிறார்கள். நீங்கள் நன்கு வளர்ந்துவிட்டீர்கள். உங்களைப் பின் தங்கிய சமூகமாக அங்கீகரிப்பது இயலாது' என்றே அரசுத் தரப்பில் கூறி வருகிறார்கள். இது மறு பரிசிலனைக்குட்படுத்தப்பட வேண்டியது!" என்கிறார்கள்.

**— ஔரங்கசீப்**

செட்டிநாடு ஸ்பெஷல் கட்டுரைகளுக்கான படங்கள்: **யோகா**


• ஸ்டூடியோ இருந்த இடம் - இன்று!

எடுக்கப்பட்டவைதான்!

இன்று, ஸ்டூடியோ இருந்த இடம் எப்படி உள்ளது?

பொட்டல் வெளியாக!

தேவகோட்டையைச் சேர்ந்த சில ரியல் எஸ்டேட்காரர்கள் நிலத்தை வாங்கிவிட்டதாகவும் விரைவில் அடுக்குமாடி வீடுகள் வந்து விடும் என்றும் அந்தப் பகுதிவாசிகள் சிலர் சொன்னார்கள்.

**— ஜிண்டு**



• அரண்மனை முகப்பு



• மாடிக்குப் போகும் வழி

கட்டடக் கலை என்றால், உடனே முகலாயச் சக்கரவர்த்திகளும் பல்லவ மன்னர்களும் ஞாபகத்துக்கு வருவார்கள். நியாயமாக நகரத்தார் ஞாபகமும் வர வேண்டும்.

சாதாரண வீடுகளைக்கூட, கோவில் போன்ற பிரும்மாண்டத்துடன் கட்டியிருக்கிறார்கள். பொதுவாகவே எல்லா வீடுகளும் தரையிலிருந்து ஏழெட்டு அடி உயரத்தில்தான் இருக்கின்றன உயரப் படிகளில் ஏறி வாசலைத் தொட்டால் திண்ணை. ரயில் கம்பார்ட்மெண்ட் மாதிரி ஒன்றன்பின் ஒன்றாக அறைகள், அறைகள், தாழ்வாரங்கள், தாழ்வாரங்கள், முற்றங்கள், முற்றங்கள். வாசலிலிருந்து பார்த்தால், கொல்லைப்புறம் தெரியும் நேர்க்கதவுகள். எல்லா வீடுகளுமே நாலு கட்டு. எல்லா வீடுகளுமே முட்டை+சுண்ணாம்புக் கலவை அடித்த சுவர்கள். எல்லா வீடுகளுமே பிரும்மாண்டம்!

சமீப காலமாகச் சில வீடுகள் இடிக்கப்பட்டு, நவீன மோஸ்தரில் கட்டப்பட்டு வருகின்றன. என்றாலும் செட்டி நாட்டிலும் தேவகோட்டையிலும் நாம் பார்த்த புராதன வீடுகள், நகரத்தாரின் கலை

• திண்ணை



• டைனிங் ஹால்





• யானைத் தந்த அற்புதம்

யுணர்வுக்குச் சிறந்த உதாரணங்களாகத் திகழ்கின்றன.

**கா**னாடுகாத்தானில் உள்ள ராஜா அண்ணாமலைச் செட்டியாரின் வீடு - அல்ல - அரண்மனை பிரும்மாண்டமானதல்ல! **பிரும்மாண்டமானது!**

இருபதடி தூரத்திலுள்ள குளக்கரையிலிருந்து பார்த்தால் இது வீடா? தேவலோகமா? என்ற சந்தேகம் யாருக்கும் எழும்!

வெளேரென்ற முகப்பும் இன்னும் கொஞ்சம் எட்டினால் பறக்கிற விமானத்தைப் பிடித்து விடலாம் என்பது போன்ற



• மாடித் தோற்றம்

# ராஜா இல்லாத அரண்மனை!



• கோட்டை அல்ல; வீடுதான்!

உயரமும் முகலாயப் பாணியில் ஆங்காங்கே பிரும்மாண்டத்தைக் கூட்டிக் காண்பிக்கும் உயரக் கொழுக்கட்டை 'டூம்'களும் வெட்ட வெளியில் தனித்து நிற்கிற அந்த கம்பீரமும் வாய் பிளக்கச் செய்பவை.

வீட்டு வாசலில் டவுன் பஸ் வந்து ஒரு நிமிடம் நின்று 'மரியாதை செலுத்தி' விட்டுப் போகிறது. எட்டுப் படி ஏறி மேலே போனால் அகல போர்டிகோ. கிட்டத்தட்ட ஒன்றரை கிரவுண்ட் பரப்பில் இருபுறமும் திண்ணைகள். இத்தாலிய மார்பிள் பதித்து சற்றே நவீனமாக்கி, அங்கே பணியாளர்களுக்கென்று ஒரு டீ.வி வைத்திருக்கிறார்கள். பகல் முழுக்க அது ஓடிக் கொண்டிருக்கிறது. திண்ணையைக் கடந்து உள்ளே போனால் இருபதடி விஸ்தாரத்துக்கு ஒரு வரவேற்பறை. அபாரமான குஷன் வைத்த பல சோபாக்களும் யானைத் தந்த அலங்காரங்களும் ராஜா, அவர்தம் மகன், மனைவி, புகைப்படங்களும் ஆளுயரத்துக்கு நிற்கின்றன.



• தேவகோட்டை வீடு

இடது மூலையில் ஒரு ஷோ கேஸ். அதில் ராஜாவின் காலணிகள். அவர் உபயோகித்த பொருட்கள், கூஜா, தம்ளர் இன்ன பிற. நினைவுச் சின்னங்கள் இன்னும் நிறைய.

• தேவகோட்டையில் 100 வருட வீடு!



இன்னும் கடந்து உள்ளே போனால், செவ்வகம் செவ்வகமாக இரண்டு மூன்று தளங்கள். 'சுத்து பத்து' என்கிறார்கள். பெண்கள் ராஜாங்கம். சுவரை ஒட்டிய குட்டிக்குட்டி அறைகளில் தட்டு முட்டு சாமான்கள். பளிச்சென்று பூஜையறை. தலை குனிந்து வெளியே வந்தால் (உயரம் அப்படி) பளீரென்று முகத்தில் அறையும் வெளிச்சம்.

இது முற்றம். சூரியனின் இலவச விசிட்.

முற்றத்தைச் சுற்றிய தாழ்வாரங்களிலும்கூட மிடுக்குக் குலையாத சுத்தம். (பெருக்கிக் கொண்டே இருக்க நாலைந்து பெண்கள் இருக்கிறார்கள்.)

கொஞ்ச தூரம் நடந்தால் பின் கட்டு. அங்கே ராணி மெய்யம்மையின் அறையை அவர் விட்டுச் சென்ற வண்ணமே நினைவகமாக்கி ஏஸி பண்ணியிருக்கிறார்கள்.



• சுத்து பத்து

அதனை ஒட்டிய ஸ்டோர்ரூம், சமையலறைகள். குவிந்திருக்கும் கறிகாய்கள், புகையும் விறகடுப்பு.



ராஜா வீட்டு மாடிக்குச் செல்ல லிஃப்ட் இருக்கிறது. எம்.ஏ.எம்., மீனா முத்தையா, எம்.ஏ.எம்.மின் மகன், பிற உறவினர்கள், யாவருக்குமான தனித் தனி அறைகள் இங்கேதான்.

கீழ்தளத்தில் பட்டொளி வீசிப் பறக்கும் புராதன வாசனை மேலே இல்லை. மாறாக, எல்லா அறைகளும் ஏ.ஸி. எல்லா அறைகளிலும் ஃபிரிட்ஜ், கலர் டீ.வி, டெலிபோன் பிற சொகுசு வசதிகள்.

மகன் முத்தையாவின் அறையிலும் குமாரராணி என்றழைக்கப்படும் எம்.ஏ. எம்.மின் மறைந்த அண்ணனின் மனைவி மீனா முத்தையாவின் அறையிலும் மட்டும் உடற்பயிற்சிக் கருவிகள் இருக்கின்றன.

மேலும் மூச்சு வாங்கி மொட்டை மாடிக்குப் போனால் விண் பார்த்து விரிந்திருக்கும் சாடிலைட் சிக்னல் ரிசீவர் கிண்ணம். முன்புறம் உழைப்பாளர்களின் உறைவிடம்.

மொத்தமாக ஒரு நடை சுற்றிவர, இரண்டு மணி நேரம் ஆகிறது.

கூட்டிப் பெருக்க, சமைக்க, கணக்கு வழக்குப் பார்க்க, கார் ஓட்ட, காவல் காக்க என்று சுமார் இருபது பேர்கள் எப்போதும் தயாராகக் காத்திருக்கிறார்கள்.

ஆனால், ''யாரும் இங்க இல்லை. ராஜா வீட்டுக்காரங்க எல்லாம் மெட்ராஸுலதான் இருக்காங்க. எப்பவாச்சும் வருவாங்க. ஏதாவது விசேஷம்னா வருவாங்க. ஒரு. ரெண்டு நாள்ல போயிடுவாங்க!'' என்கிறார்



• முற்றம்

மானேஜர் சிங்காரம் செட்டியார்.

''ஐயா (எம்.ஏ.எம்) வந்தாருன்னா எங்களுக்கெல்லாம் கொண்டாட்டம்தான்! ஐநூறு, ஆயிரம்னு இனாம் குடுக்காம போகவே மாட்டாரு!'' என்கிறார் சமையலறை ஊழியர் மணி.

— ஜிண்டு

# தொலைக்காட்சியில் சிம்ம கர்ஜனை!

கலைஞரின் முக்கியமான படைப்பான தென்பாண்டிச் சிங்கம் சென்னை தொலைக்காட்சியில் சீரியலாக ஒளிபரப்பாகவிருக்கிறது. ஒரு நாவல் திரை வடிவம் பெறும்போது சில விஷயங்கள் கேமராவுக்குப் பிடிபடாமல் நழுவி விடும். அந்தச் சிக்கல் தென்பாண்டிச் சிங்கத்தில் நிகழா வண்ணம் இதன் இயக்குனர் இளையபாரதி உழைத்திருக்கிறார்.

கதை, பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நடக்கிறது. மருதுபாண்டியரிடம் தஞ்சம் புகுந்த ஊமைத்துரையை ஆங்கில அரசு பிடிக்க முயல்கிறது. அதற்கு பாகனேரி, பட்டமங்கலச் சிற்றரசுகளின் உதவியை நாடுகிறது. அம்பலக்காரர் என அழைக்கப்படும் மறவர் குலத் தலைவர்கள் காட்டிக் கொடுக்க மறுக்கின்றனர். இந்த இரு அம்பலக்காரர்களுக்குள் பகையை மூட்டிவிட்டு, காரியம் சாதிக்கப் பார்க்கிறார் கர்னல் துக்னியூ.

கதை, சுதந்தரப் போராட்டத்தின் இந்த மெல்லிய பின்னணியை எடுத்துக் கொண்டு பாகனேரி, பட்டமங்கல அம்பலக்காரர்களின் உறவுச் சிக்கலில் விஸ்தாரமாகப் பயணமாகிறது.

விறுவிறுவென்று கதையை சினிமாத்தனமாக நகர்த்தாமல் ஏதோ ஒரு பொந்தில் பதினெட்டாம் நூற்றாண்டில் நடந்த மறவர் குல வாழ்க்கையை எடுத்து நம் முன் நிதானம் தவறாமல் விரித்துக் கொண்டு போவது, டீவியைப் பொறுத்தவரை புது முயற்சி.



• இளையபாரதி

நாசர், பாலாசிங், வினோதினி, கீதா, இப்படிப் பெரிய திரையின் அனுபவங்களும், மு. ராமசாமி, அ. ராமசாமி, இரா. ராஜு போன்ற தியேட்டர் ஆர்ட்ஸ் அனுபவசாலிகளையும் கதாபாத்திரங்களாகவே மாறியுள்ளனர்.

சுந்தரி என்ற நாட்டிய மங்கை பாத்திரத்தை ஏற்றிருக்கும் கீதா, வாளுக்கு வேலி என்ற அம்பலக்காரர் வடிவமாகவே வருகின்ற நாசர் இருவரும் நடிப்பில் முத்திரை பதிக்கின்றனர்.

ஒரு இனத்தாருக்கே உரிய பிடிவாதங்கள், மூர்க்க குணங்களை முன்னதாக



• தென்பாண்டிச் சிங்கம் தொடரில் ஒரு காட்சி

பாரதிராஜா 'கிழக்குச் சீமையிலே'வில் சித்திரித்திருக்கிறார். விருந்து உபசாரத்தில் பட்டமங்கலத்தான் தன் போலி கௌரவங்களுக்காகப் பிகு பண்ணும் சேட்டைகள், தென் பாண்டிச் சிங்கத்தில் கை தட்ட வைக்கிறது. தேர்த் திருவிழா ஒரு செய்தியாக இல்லாமல் நாமும் வடம் பிடித்து இழுப்பது போன்ற உணர்வைத் தருகிறது!

• 'வாளுக்கு வேலி' நாசர்



முதன் முதலாக கலைஞர் – இளையராஜா என்ற இரண்டு பெரிய கைகள் டீ.வி. மூலம் இணைந்திருக்கின்றன. தென்பாண்டிச் சிங்கத்தில் இசை மரபு ஒரு பகுதியாக இருப்பதால் இளையராஜா ரொம்பவும் சாவகாசமாக அமர்ந்து சுருதி சேர்த்திருக்கிறார். ஒரு டீ.வி. சீரியலின் பாடல்கள் கேசட்டாக வெளிவந்திருப்பதும் இதுவே முதன் முறை!

காரைக்குடி, கோவிலூர், திருவாலங்காடு, ராயபுரம், மதுரை என படப்பிடிப்புகளை நிகழ்த்தியுள்ளார், இளையபாரதி. பாகனேரி அரசர் மாளிகையாக வருவது மதுரை நாயக்கர் மஹால். மஞ்சள் ஒளியில் அரண்மனை மின்னுகிறது!

- சு. வேணு

# புண்ணிய காரியங்களை ஸங்கிராந்தியில் ஏன் அனுஷ்டிக்க வேண்டும் ?



மேஷம் முதலிய பன்னிரெண்டு ராசிகளில் கிரமமாக மாதந்தோறும் சஞ்சரிக்கும் சூரிய பகவான்.

ஒரு ராசியிலிருந்து வேறு ராசிக்கு பிரவேசிக்கின்ற சமயம் ஸங்கரமணம் ஸங்கிராந்தி என்று சொல்லப்படுகிறது. அந்தப் புண்ணிய காலங்களில் செய்கிற ஸ்நானம், தானம், ஹவ்யம், கவ்யம், முதலிய புண்ணிய காரியங்களுக்கு ஏழு வருஷம் சூரியன் நல்ல பலன்களைக் கொடுக்கிறார். ஆகையால் புண்ணிய காரியங்களை அவசியம் அனுஷ்டிக்க வேண்டும்.

தேவலர் : ஸங்கராந்தி சமயம் சூட்க்ஷமமானது. நம்மால் அறிய முடியாதது. ஆகையால் ஸங்கரமணத்திற்கு முன்பு முப்பது பின்பு முப்பது நாழிகைகள் புண்ணிய காலமாகும்.

| ராசி | ஸங்கிரமணத்தின் நாமதேயம் | (ப்ருஹஸ்பதி வாக்குப்பலன்) புண்ணிய காலம் | புண்ணிய பலன் |
|---|---|---|---|
| மகரம் | உத்திராயணம் | பின் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| கும்பம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மீனம் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மேஷம் | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| ரிஷபம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மிதுனம் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கர்கடகம் | தக்ஷிணாயனம் | முன் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| சிம்மம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கன்னி | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| துலா | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| விருச்சிகம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| தனுசு | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |

- ஸம்க்ஷேப தர்மசாஸ்திரம்

**49**

'ஒருவன் பிறந்தான்' என்று சொன்னால் அவன் இறப்பான் என்பதும் நிச்சயமாகி விடுகிறது. எது எது உண்டாயிற்றோ அதற்கெல்லாம் அழிவு உண்டு. உண்டாகாத வஸ்துவுக்கு அழிவு கிடையாது. பரமாத்மா உண்டாகவில்லை. ஆகவே, அவனுக்கு அழிவு கிடையாது.

ஜீவாத்மா உண்டாகவில்லை; ஆகவே அதற்கும் அழிவு கிடையாது. ஆனால், இந்த உலகத்திலே காணும்படியான வஸ்துக்களெல்லாம் உண்டாயின. அதனால் அவற்றுக்கு அழிவு என்பது உண்டு.

ஆகையினாலே ஒருவன் பிறக்கிறான் என்றால் அவன் இறக்கிற வரையிலான வாழும் காலத்திலே, மறுபடியும் பிறவாமலிருப்பதற்காகவே, வாழ்ந்து இறக்க வேண்டும். இறப்பதற்கு முன் அந்த உயர்நிலையை அடைந்து விட்டால் மறுபடியும் பிறக்காமல் இருக்கலாம்.

அப்படிப்பட்ட உயர்நிலையை அடைந்தவர், இறக்கும்போது ஏற்படுகிற மகிழ்ச்சியைப் போலிருந்ததாம், சீதையின் மகிழ்ச்சி. ஆஞ்சநேயன் கொடுத்த அங்குலியகம் சீதைக்கு என்ன ஆனந்தத்தைக் கொடுத்தது என்று கேட்டால், மோக்ஷானந்தத்தைக் கொடுத்தது!

மறுபடியும் நாம் பிறவாமல் இருக்க வேண்டும் என்பதற்காக அந்த மஹாவிஷ்ணுவை நினை! பிறப்பு - இறப்பு அற்றவனான ஜ்வர பயம் அற்றவனாக, ம்ருத்யு பயம் அற்றவனான அந்த சர்வாத்மா, பூதாத்மா, சுந்தராத்மா, ஏகாத்மா, அனேகாத்மா... இப்படி

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

எத்தனைவிதமாகச் சொன்னாலும் அவன் விஷ்ணுதான் - விஷ்ணு என்கிற சப்தத்தினால் அழைக்கப்படுகிறவன். விஷ்வரத்வம் என்கிற குணத்துக்கு உரியவன்.

அடுத்ததான குணம் சத்யகாமத்வம்.

காமம் என்றால் எண்ணம். எண்ணம் ஒருநாளும் பழுதுபடுவதில்லை என்கிற நிலைதான் சத்யகாமத்வம்.

பகவான், மனத்திலே ஒன்றை நினைப்பானானால் அதை அப்படியே நடத்திக் காட்டி விடுவான். அந்த நினைவு ஒரு நாளும் அழிவதில்லை; பழுதுபடுவதில்லை; கெட்டுப் போவதில்லை.

ஒரு பழமொழி உண்டு... நாம் ஒன்று நினைக்க, தெய்வம் ஒன்று நினைத்தது... என்று!

நம் நினைவு வேறாகவும் அவன் நினைவு வேறாகவும் இருந்தால் நம்முடையது நிறைவேறுமா? நடக்காது! தெய்வத்தின் நினைவுதான் முக்கியம்!

அவன் நினைவு ஒருநாளும் பழுதுபடுவதில்லை. அதைப் பரமாத்மா பல சரித்திரங்களிலே காட்டியிருக்கிறான்.

அர்ஜுனனுடைய தேர்த்தட்டிலே உட்கார்ந்திருக்கிறானே... அவன் யார்?

எண்ணம் பழுதுபடாத வாசுதேவன் அவன்.

அது எங்கே தெரிகிறது...?

தேர்த் தட்டிலே அமர்ந்தபடி குதிரைகளை அடித்து ஓட்டக்கூடிய அந்தக் கோலைக் கையிலே வைத்துக் கொண்டிருக்கிறான்.

மன்னார்குடி க்ஷேத்திரத்திலே அழகாக கோல் வைத்துக் கொண்டு நிற்கிற தோற்றத்தைப் பார்க்கலாம். யாரையும் கொல்லாத

கோலம் இது. கோலினால் ஒருத்தரையும் அவன் அடிக்கவில்லை. ஆனால் கோலை வைத்துக் கொண்டே எல்லா காரியத்தையும் பண்ணி விட்டான்.

என்ன பண்ணினான்...? சத்ய காமத்வம் என்கிற குணம் தெரியும்படி பண்ணினான். எப்படி...?



பாரதப் போர் நடந்த போது, துரியோதனன் பீஷ்மாச்சார்யாரிடம் போனான். அவர் கவசத்தை எடுத்துப் போட்டுக் கொள்கிறார்; உடைவாளை இடுப்பிலே செருகிக் கொண்டிருக்கிறார்... முதல் பத்து நாட்கள் போரை நடத்திய மகான் அவர். சேனை நாயகனாக இருந்து சகலத்தையும் ரக்ஷித்தவர்.

அவரிடம் போய் துரியோதனன் கேட்கிறான்: "பிதாமகரே! பஞ்ச பாண்டவரை நீர் எத்தனை நாளில் கொல்வீர்? அவர்களைக் கொல்வதற்கு உமக்கு எத்தனை நாள் ஆகும்? எவ்வளவு அவகாசம் பிடிக்கும்?"

இவருக்கு - பீஷ்மருக்கு - ரொம்ப வலி ஏற்பட்டதாம் உள்ளத்திலே...

'ஐயோ மஹா பாவி! பஞ்ச பாண்டவர்களைக் கொல்ல வேண்டும் என்று நினைக்கிறானே...' என்று மனத்திலே நினைத்துக் கொண்டு, அவர்,

''நீ கேட்ட கேள்வியை மறுபடியும் கேள்...'' என்றாராம் துரியோதனனிடம்.

அவனும் மறுபடியும் கேட்டான்:

''பஞ்ச பாண்டவர்களை எத்தனை நாளில் கொல்வீர்?''

அதற்கு அவர் சொல்கிறார்:

''ஏனடா! எனக்கு நாட்கள் எதற்கடா! ஒரு நிமிஷத்துக்குள்ளே, ஒரு சிட்டிகை போடுகிறதுக்குள்ளே, அந்த பஞ்சபாண்டவர்களை ஒரே பாணத்தினாலே முடிப்பேன்...''

அவர் இப்படிச் சொல்லிக் கொண்டேயிருக்கையிலே துரியோதனன் அவ்வளவு உயரம் எகிறி, பொத்தென்று குதித்தான்! அவ்வளவு சந்தோஷம் அவனுக்கு... அவரானால் இன்னும் அந்த வாக்கியத்தையே முடிக்கவில்லை!

''.... ஆனால்...'' என்கிற ஒரு பதத்தைப் போட்டு நிறுத்தினார் பீஷ்மாசாரியர்.

இந்த 'ஆனால்' என்கிற பதத்தைப் போட்டாலே, அது முன் சொன்னதை அடித்து விடும்!

'ஆனால்' என்று அவர் சொன்னவுடனேயே, எகிறிக் குதித்த துரியோதனன் அப்படியே நின்று விட்டான்!

''அவர்கள் பக்கம் சர்வ காரணபூதனான வாசுதேவன் சகாயம் பண்ணாமலிருந்தால் ஒரே க்ஷணத்திலே, ஒரே பாணத்திலே முடிப்பேன்...'' என்றார் பீஷ்மர்.

துரியோதனன், அவரைத் திரும்பிக் கூடப் பார்க்காமல் புறப்பட்டுப் போய் விட்டான்!

ஏன்...?

'யானையை அடிப்பது; பூனையை அடிப்பது... இதெல்லாம் யாருக்கு வேண்டும்?! பஞ்ச பாண்டவர்களை அடிக்க வேண்டும்... அது உம்மால் முடியாவிட்டால் உம்மை வைத்திருந்து என்ன பயன்? நீர் இருந்தால் என்ன? போனால் என்ன...?' என்று போய் விட்டான் அவன்!

''வாசுதேவன் பாண்டவர்களை ரக்ஷிக்காமல் இருந்தால் அடிப்பேன்...' என்று பீஷ்மர் சொன்னாரே...? அவன் அப்படி ரக்ஷிக்காமல் இருப்பானா?

கிருஷ்ணனையே ஆச்ரயித்தவர்கள் அந்த பஞ்ச பாண்டவர்கள். அவர்களை அவன் விட்டு விடுவானா? அதனால்தான் அவன் 'நான் ஆயுதம் எடுக்க மாட்டேன்; யுத்தத்தை நடத்துவேன்' என்றான். ஆனால் பீஷ்மாசார்யாரை 'ஆயுதம் எடுக்கப் பண்ணுகிறேன்...' என்றான்.

பரமாத்மாவுடைய சத்யகாமத்வத்தை இங்கே கவனிக்க வேண்டும். தன்னுடைய வாக்கைக் குறைத்துக் கொண்டு



## அருள்வாக்கு



ஸங்கமாகச் சேர்ந்து தொண்டு செய்கிறவர்களுக்கு அத்யாவசியமாயிருக்க வேண்டிய யோக்யதாம்சங்கள், அவர்களுக்குக் கட்டுப்பாடு (நியமம்) ரொம்பவும் தேவை. எடுத்துக் கொண்ட வேலையில் கொஞ்சம்கூடப் பொறுப்பு குறையக் கூடாது. ஸத்தியமும், அந்தரங்க சுத்தமும் இதே போலத் தேவை. அன்போடு மதுரமாகப் பேசவும் பழகவும் வேண்டும். பணத்தைக் கையாளுவதில் அப்பழுக்கில்லாதவர்கள் என்ற நம்பிக்கையை உண்டு பண்ணக் கூடியவர்களாக இருக்கணும். நியாயமாக ஸந்தேஹப்படுபவர்களிடம் பொறுப்பில்லாமலோ, பொறுமையிழந்தோ பதில் சொல்லக் கூடாது. அதே மையத்தில் அநேக ஸந்தேஹப் பிராணிகள் ஏதாவது 'ரூமர்' கிளப்பிக் கொண்டிருக்கிறார்களே என்பதற்காக, ''நமக்கென்னத்துக்கு ஊரான் பாடு?'' என்று பொதுத் தொண்டை விட்டு விடவும் கூடாது. அதாவது ஸ்வயமான அவமானங்களைப் பாராட்டிக் கொண்டிராத மனப்பான்மை வேண்டும். நகரமானால் ஒரு பேட்டையில் இருப்பவர்களெல்லாம் சேர்ந்து செய்யலாம். க்ராமமானால் நாலு க்ராமத்து ஜனங்கள் ஒன்றுகூடிப் பண்ணலாம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

பாகவதோத்தமர் வாக்கைப் பெரிதுபடுத்திக் காட்டுகிறேன். அதுதான் முக்கியம் என்பதை வலியுறுத்திக் காட்டுகிறான்.

சத்யகாமத்வத்துக்கு பாகவதோத்தமர்கள் அர்த்தம் சொல்லும்போது, 'பகவான் ஒரு பிடியாய் தன்னுடைய இச்சையிலே இருக்க மாட்டான். தன்னுடைய திருவடியைப் பற்றிக் கொண்டவர்களுடைய வாக்கை, தன் வாக்கை விட்டாவது காப்பாற்றுவான்' என்கிற அளவுக்கு சத்யகாமத்வத்துக்கு அர்த்தமேயொழிய தன் வாக்கிலேயே நிற்பான்; அதனால் பாகவதோத்தமர்களுடைய வாக்கைப் புறக்கணித்து விடுவான்' என்று நாம் தப்பாக கிரஹிக்கக் கூடாது என்கிறார்கள்.

அதனால்தான் பீஷ்மாச்சார்யர், பீஷ்ம ஸ்துதியிலே, 'உன் வாக்கை விட்டு என் வாக்கை நிஜமாக்கினாயே..' என்கிறார். அவருடைய அந்திம காலத்திலே பகவான் சக்ராயுதத்தை ஏந்தி வேகமாக ஓடி வருகிறான்!

'என்னுடைய அந்திமப் பிரயாணத்தின் போது எவனைப் பார்த்தால் மோக்ஷமோ, அவன் காட்சி தரட்டும். அதர பல்லவத்திலே முரளியும், தலையிலே மயில் பீலியும், நீருண்ட மேகம் போன்ற திருமேனியுமாக அந்த வாசுதேவன் காட்சி கொடுக்கட்டும்' என்றார் சுவாமி தேசிகன். 'மம அந்திம பிரயாணே' என்று அவர் சொன்னது நமக்கும் ஆகும். நம்முடைய அந்திமப் பிரயாணத்தின்போதும் வாசுதேவன் அப்படித் தென்பட வேண்டும். அப்படித் தென்பட்டு விட்டானென்றால் நமக்குப் பிறவி உண்டோ..? மோக்ஷம் சித்தம்!

பீஷ்மாசார்யாருக்கு அப்படி மோக்ஷம் கொடுத்தான்.

அர்ஜுனனை நிமித்தமாக வைத்துக் கொண்டு, தன்னுடைய காமத்தை (கௌரவர்களை அழிக்கும் எண்ணத்தை) ஈடேற்றினான். அந்த கொல்லா மாக்கோலை (கையிலிருக்கும் கோல்) வைத்துக் கொண்டு, சுட்டிக் காண்பித்துக் காண்பித்தே சர்வத்தையும் முடித்தான்.

அர்ஜுனனை நிறுத்தி பரமாத்மா என்ன காண்பித்தான்..?

"அதோ இருக்கிறாரே, அவர்தான் துரோணர்; அதோ இருக்கிறாரே அவர்தான் பீஷ்மர்; அதோ இருக்கிறாரே அவர் கிருபாசார்யார்; அவர் அச்வத்தாமா.. அதோ இருக்கிறாரே அவர்தான் துரியோதனன்... இப்படியே ஒவ்வொருத்தரையும் காண்பிக்கிறான்.

அர்ஜுனனுக்குத் தெரியாதா அவர்களையெல்லாம்...? ஆசார்யர் துரோணரை அவனுக்குத் தெரியாதா? பீஷ்மரைத் தெரியாதா?

'இதுதான் துரோணர்' என்று அவன் சுட்டிக் காட்டினால் அவர் 'போய் விட்டார்' என்று அர்த்தம்.

இப்படியே காட்டி, காட்டி, 'நீ என்னடா முடிப்பது? நீ வெறுமே உட்கார்ந்திருக்கிறாய்.. உன்னை வைத்துக் கொண்டு நான் முடிக்கிறேன்..' என்கிறான் பரமாத்மா.

அவனுடைய இச்சை, காமம் அது. 'மாட்டேன்' என்று அர்ஜுனன் சொல்வதால் நின்று விடுமா? தடையாய் ஆயிரம் பேர் வந்தாலும் நின்று விடுமா?

தன்னுடைய காமத்தினாலேயே, இச்சையினாலேயே பரமாத்மா சர்வத்தையும் முடிக்கிறான் என்பதற்கு துரோணாசார்யர் ஒரு உதாரணம்.

(தொடரும்)



• லட்சுமி ஆச்சி

# "அவுக கட்டாயம் ஜெயிப்பாக!"

லட்சுமி ஆச்சியைத் தெரியாதவர்கள், காரைக்குடி வட்டாரத்தில் யாரும் இருக்க மாட்டார்கள். மெலிந்த தேகமும் மூக்குக் கண்ணாடியும் மாறாத மண் மணம் கமழும் மொழியும் இடையிடையே எட்டிப் பார்க்கும் ஆங்கிலமுமாக நம்மை அன்புடன் வரவேற்ற ஆச்சி, ராஜா அண்ணாமலை செட்டியாரின் கடைசி மகள். பிறந்த வீட்டுப் பெருமையெல்லாம் பதினைந்து வயது வரைதான். திருமணமானதும் கணவர் ஊரான கண்டனூருக்கு வந்து விட்டார். ஆச்சி, ஒரு இலவச மருத்துவமனையை நடத்தி வருகிறார். அதனால் அந்தப் பகுதியில் பிரபலம். ஆச்சியின் மகனோ, நாடு முழுக்கப் பிரபலம்.

ஒரு நிதியமைச்சரின் தாய் என்கிற பெருமையோ, பந்தாவோ இல்லாமல் படு சிம்பிளாகத் தம் மருத்துவமனையில் மாத்திரைகள் மடித்துத் தர, பழைய பேப்பர்களை ஒரே அளவாகக் கத்தரித்துக் கொண்டிருந்த ப. சிதம்பரத்தின் தாய் லட்சுமி ஆச்சி, நம்மைக் கண்டதும் வேலையை வேறு சில பெண்களிடம் விட்டு விட்டு எழுந்து வந்து பேசினார்.

எடுத்த எடுப்பிலேயே "எனக்கு அரசியலெல்லாம் தெரியாதுய்யா. என் மகன்தான் சின்ன வயசுலேயே பாலிடிக்ஸ் பேசுவார்!" என்று கவனமாக 'ர்' விகுதி சேர்த்து ஆரம்பித்தார்.

"எங்க குடும்பத்துப் பெண்களிலேயே நான்தான் முத முத எஸெஸெல்ஸி படிச்சவ. அந்தக் காலத்துல பொம்பளபுள்ளைகளைப் படிக்கவிட மாட்டாக. ஆனா எங்கண்ணன் முத்தையாதான் மொனஞ்சு என்னைப் படிக்க வெச்சாக. இன்னும் கூடப் படிச்சிருப்பேன். பதினஞ்சு வயசுல கல்யாணம் பண்ணீட்டாக. என்னா பண்ண முடியும்?"

ஆச்சிக்கு இப்பவும் ஏக்கம் இருக்கிறது!

"அவருக்கு (கணவர் - பழனியப்ப செட்டியார்) அரசியலெல்லாம் தெரியாது. யாபாரம்தேன்! கடவுள் பக்தி ரொம்ப சாஸ்தி! அவருண்டு, வேலையுண்டுன்னு இருப்பாக. என் மூத்த பிள்ளைக்குக் கூட (ப. லட்சுமணன்) அரசியல் ஆர்வம் அத்தனை கிடையாது. இவருதேன் எப்படியோ இதுல வந்துட்டாரு! எங்க அண்ணன் மினிஸ்டரா இருந்திருக்காக. அப்பா கூட ராஜ்ய சபாவுல இருந்திருக்காரு. அந்த வாசனை போல!" என்று சிரிக்கிறார்.

நாம் கண்டனூர் சென்றிருந்த சமயம் சிதம்பரமும் அங்குதான் பிரசாரத்தில் இருந்தார். தேர்தல் பற்றி ஆச்சியிடம் கேட்டோம்.

"நான் என்னத்த கண்டேன்? தேர்தல் முடிவெல்லாம் ஆண்டவன் செயல்! பேப்பர் படிச்சித்தான் தெரிஞ்சிக்கோணும். இவரு ஒண்ணுஞ் சொல்லமாட்டாரு. நிச்சயமா



* மாத்திரை மடிக்க பேப்பர் வெட்டுகிறார்கள்...

செயிச்சிருவாகன்னு நம்பிக்கை இருக்கு. (ஜெயிச்சிட்டாரே ஆச்சி!) வோட்டு வித்தியாசம் பத்தி ஒண்ணும் சொல்ல முடியாது. வேண்டாத தேர்தல்... ம்... பிரசாரத்துக்குப் போயிருக்காரு. நைட்டு பதினொண்ணு, பதினொன்னரை ஆயிடும், திரும்பி வாரதுக்கு! இப்பப் பரவாயில்லையே! பத்து மணியோட பிரசாரம் முடிஞ்சுடுது இல்லே! முன்னெல்லாம் போனா, நடு ராவு ஒண்ணு, ரெண்டு கூட ஆவும் வாரதுக்கு. விடிஞ்சிரக் கூடாது! பொறப்பட்டுப் போயிடுவாக."

ஆச்சி, சென்னையில்தான் இருக்கிறார். மாதம் ஒரு முறை கண்டனூருக்கு - புகுந்த வீட்டுக்கு வந்து விடுகிறார். மாமனார், மாமியார், கணவர் இறந்த பின்பும் அந்த வீடுதான் தன் சொந்த வீடு என்கிற உணர்வில் இருக்கிறார்.

"எம் மாமியார பூப்போட்டுக் கும்பிடணும் ராசா! அந்தா பாருங்க, போட்டோவுல இருக்காகளே, அவுஹதான்! ரொம்பத் தங்கமானவஹ. என்னை சொந்த மக மாதிரி வெச்சிக்கிட்டாக..."

ஆச்சியின் கண்கள் பனிக்கின்றன.

"அந்தக் காலத்து மனுஷா மாதிரி இப்ப யாரு இருக்காக? ஆச்சிகளெல்லாம் மாறிட்டாக. மாடர்ன் ஆயிட்டாக! எங்க மாமியாரெல்லாம் ரொம்ப மடியா, பக்தி சிரத்தையா வாழ்ந்தவங்க. இப்ப? சாயரட்சை கோவிலுக்குப் போனா கூட்டமே இல்லை! எல்லாம் டீ.வி தான் கதின்னு ஆயிட்டாக. எம் மூத்த மவனுக்கு அஞ்சு வயசுல ராமாயணம் மொத்தமும் கத்துக் குடுத்தேன்! நல்லா சொல்லுவாரு..."

ஆச்சியின் நினைவுகள் எங்கெங்கோ பாய்கின்றன.

"ஒரு தேர்தலப்ப, ராஜீவ் காந்தி இங்க வந்திருந்தாஹ. அவரு சம்சாரமும்தேன். ராத்திரி பதினொண்ணரை மணிக்கு அப்புறம் வந்து ஒரு மணி நேரம் இருந்தாக. இதே வீடுதேன். இதே ஹால்தேன்! அந்தப் பொண்ணு சோனியாவுக்கு அப்ப நல்ல சுரம். பாவம். ஒண்ணுமே சாப்பிட முடியலை. இவரு, 'மதர், மதர்'னு ஆசையா கூப்புட்டுப் பேசி, போட்டோவெல்லாம் எடுத்துக்கிட்டாரு.

"செக்யூரிட்டி களேபரம். ரோடெல்லாம் அடைச்சுட்டாக. ஊட்டுக்குள்ள இருக்கறவங்க ராஜிவ் காந்திய பார்க்க 'நான் முந்தி, நீ முந்தி'ன்னு முட்டிக்கிட்டிருந்தாக. ஆனா அவுரு மொதல்ல இறங்கினதும் பார்த்துக் கும்பிட்டது யாரைத் தெரியுமா? சமையக்காரங்களைத்தேன்!"

அழகாகச் சிரிக்கிறார்.

"இங்க நெறய்ய சாமி படங்களா இருக்குதா? அவுஹ வந்ததும் 'ஷூவைக் கழட்டவா'ன்னுதான் கேட்டாஹ. ரொம்ப ஆசையா பேசினாக. வாசத்திண்ணையில மூப்பனாரு உக்காந்திருந்தாரு. எம்மவனுக்கோ, தலைகால் புரியாத சந்தோஷம்! ஊரே கூடி வேடிக்கை பாத்துது!

"அவுஹளெல்லாம் போனப்புறம் எம்மவன் சொன்னாரு, "ஆத்தா, ராஜிவ் காந்தி நம்ம வீட்டுல ரெண்டு நாளு இருந்தாரு!"

"எப்படிடான்னேன். 'ராத்திரி பதினொண்ணரைக்கு வந்தாரில்லை? அது ஒரு நா. பன்னெண்டரைங்கறது மறுநா காலை தானே! ஆக, ரெண்டு நாளுன்னாரு. சிரிச்சேன் பாரு ஒரு சிரிப்பு..!"

ஆச்சியின் சிரிப்பு, அடக்கமான, அழகான சிரிப்பு!

— ஆர்.பி.ஆர்.






1998 மார்ச் 15
ஈசுவர பங்குனி 1
மலர் : 56
இதழ் : 33

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## ஆட்டம் போடாதீர்கள்; ஆள விடுங்கள்!

"அரசியல் ரீதியாகவும் தார்மிக ரீதியிலும் அரசியல் சாசன அடிப்படையிலும்கூட பி.ஜே.பியை ஆட்சி அமைக்க அழைப்பதுதான் முறையாகும்..." - தேர்தல் முடிவுகள் வெளியானதும் ஒரு டீ.வி நிகழ்ச்சியில் இவ்வாறு பேசியவர் ஜெய்ராம் ரமேஷ். ஜெய்ராம் ரமேஷ் பி.ஜே.பிக்காரர் அல்ல! அனைத்திந்திய காங்கிரஸ் கமிட்டியின் இணைச் செயலாளர்களுள் ஒருவர்! (இவ்வாறு பேசியதற்காக காங்கிரஸ் மேலிடத்தவர் சிலர் அவரைக் கண்டித்து அமைதி காக்கும்படிக் கூறியிருக்கின்றனர்!)

காங்கிரஸ் தரப்பிலேயே ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு நியாயத்தைக் குடியரசுத் தலைவர் நடைமுறைப்படுத்துவார் என்று நாடே எதிர்பார்க்கிறது.

இம்முறையேனும் வாஜ்பாய் முழு ஐந்தாண்டுகள் நீடித்து, நல்லாட்சி வழங்கட்டும்.

தேர்தல் அறிக்கையில் விளக்கம் பெற்ற கொள்கைகளைக் கடைப்பிடித்து, தேர்தல் வாக்குறுதிகளை நிறைவேற்றுவதைப் பொதுவாக நல்லாட்சி என்று குறிப்பிடுவதுண்டு.

ஆனால், பி.ஜே.பி. விஷயத்தில் கதையைச் சற்று மாற்ற வேண்டியிருக்கிறது. தேர்தல் அறிக்கையில் குறிப்பிட்டுள்ள சில அபாயகரமான அம்சங்களைக் கை விடுங்கள் என்று கோர வேண்டியிருக்கிறது.

அயோத்தியில் ராமர் கோயில் அமைப்பது;

அரசியல் சாசனத்தின் 370ஆவது பிரிவை நீக்குவது;




பொது சிவில் சட்டத்தைக் கொண்டு வருவது;

அணுகுண்டு தயாரிப்புக்கான முயற்சிகளில் ஈடுபடுவது.... ஆகியன அந்த அபாயகரமான அம்சங்கள்.

இந்த நான்கு அம்சங்களிலும் பி.ஜே.பி. பிடிவாதத்தைக் கைவிட்டு பரந்த நோக்குடன் செயல்படுவதுதான் அரசியல் ரீதியாகப் பயன் தரும். தார்மீக ரீதியாகவும் சரியாக அமையும். சில நல்ல காரியங்களைச் செய்யக் கூட, காலம் கனிய வேண்டும். அவசரம் கூடாது. எனவே இவற்றில் தன் நிலையை மாற்றிக் கொள்ளாமல் பி.ஜே.பி. பிடிவாதம் பிடிக்குமேயானால், மக்களின் அதிருப்தியைத்தான் வெகு விரைவில் பெற முடியும்.

முஸ்லிம் வாக்காளர்கள் அதிகமுள்ள தொகுதிகள் உள்பட, நாடு தழுவிய பல இடங்களில் பி.ஜே.பிக்கு ஆதரவு இருந்திருக்கிறது.

சிறுபான்மையினரை அரவணைத்துப் போகாவிடில் இந்த ஆதரவைத் தக்க வைத்துக் கொள்ள முடியாது. ஹிந்துத்வ தீவிரவாதம் என்பது இஸ்லாமிய தீவிரவாதத்துக்கு பதில் ஆகாது. அது துவேஷத்தைத்தான் வளர்க்கும்.

கோவையில் வேரூன்றியது போன்ற தீவிரவாதம் வெகு விரைவில் நாடெங்கும் நங்கூரம் பாய்ச்சி விடும். அத்தகைய தீவிரவாதத்தை வளரவிடுவது, ஆட்சிக்கே உலை வைக்கும் என்பதை தி.மு.க. அடைந்த தேர்தல் பின்னடைவு உணர்த்தியிருக்கிறது.

எனவே பி.ஜே.பி. ஆட்சி, அர்த்தமுள்ள சாதனைகளை நிகழ்த்த வேண்டுமானால், அடிப்படை வாதத்தை முதலில் கைவிட வேண்டும்.

பி.ஜே.பி தலைமை இந்த உண்மையை ஏற்காதபோதிலும் கூட்டணிக் கட்சிகளின் திருப்திக்காக தேசிய செயல்திட்டத்தில், மேலே குறிப்பிட்ட நான்கு அம்சங்களுள் முதல் மூன்றைச் சேர்க்காமல் விடுத்திருப்பது ஒரு நல்ல அறிகுறி.

எதிரணியினரும் பொறுப்புடன் செயல்பட வேண்டியிருக்கிறது. தேர்தல் முடிவுகள், மக்கள்




பி.ஜே.பிக்கு ஒரு வாய்ப்புத் தர முன் வந்திருப்பதைத் தெளிவாகவே உணர்த்துகின்றன. இதை எதிர்க்க முயன்று, சௌகரியப்படி கூட்டி, குறைத்து கணக்குப் போட்டு காங்கிரஸ் - ஐக்கிய முன்னணி கூட்டணி ஆட்சிக்கு ஆசைப்படுவது அபத்தம்! இந்த ஆசையை அப்புறப்படுத்திவிட்டு, ஆளுங்கட்சியைத் திறம்பட விமர்சித்து, திணறடிக்கவல்ல, கண்ணியமான எதிரணியாகச் செயல்படுவதே அக்கட்சிகளுக்குக் கௌரவத்தையும் நாட்டுக்கு நன்மையையும் தேடித் தரும்.

தமிழகத்தில் தேர்தல் முடிவுகள் பேரதிர்ச்சியை ஏற்படுத்தியிருக்கின்றன. 'இவ்வளவு மோசமாகத் தோற்போம் என்று எதிர்பார்க்கவில்லை' என மூப்பனாரே சொல்லியிருக்கிறார்.

தி.மு.க. - த.மா.கா அணியின் பின்னடைவுக்கான காரணங்களையும் அவரே வரிசைப்படுத்தியிருக்கிறார்:

'ஸ்திரமான ஆட்சி' என்ற பி.ஜே.பி.யின் வாக்குறுதியை ஐ.மு. கட்சிகளால் அளிக்க இயலவில்லை.

கோவை குண்டுவெடிப்புச் சம்பவங்கள் - அவை அம்பலப்படுத்திய தீவிரவாத ஊடுருவல் மக்களை நம்பிக்கை இழக்கச் செய்தது.

பொதுவாகவே நாடெங்கும் நிலவிய ஆளுங்கட்சிக்கு எதிரான போக்கு...

இவற்றுள் மூன்றாவது காரணத்தை மூப்பனார் நாசூக்காக வெளிப்படுத்தியிருக்கலாம். ஆனால், தி.மு.க. ஆட்சியின் சுறுசுறுப்பின்மை, பொது விநியோக முறையில் மெத்தனம், கீழ் மட்டங்களில் சில்லறை ஊழல்கள், பஸ் கட்டண உயர்வு போன்றவை, சராசரி மக்களை மிக அதிகமாக பாதித்திருப்பது புரிகிறது.

'இடைத் தேர்தல் என்பது ஆளுங்கட்சிக்கு வைக்கப்படும் பரிசோதனை' என்பது அரசியலில் ஏற்கப்பட்ட விஷயம்.

இந்தப் பரிசோதனையில் தி.மு.க தோற்றிருக்கிறது. தோல்வியிலிருந்து மீள வேண்டுமானால் திட்டமிட்டு உயிரைக் கொடுத்து உழைக்க வேண்டும். ●

**ஸ்பாட் ரிப்போர்ட்**

# ஜுரம் பிடித்த மாலை...

**டிசம்பர்-6ம் தேதியை மக்கள் மறந்தாலும் இனி ஒரு போதும் மார்ச்-3ஐ மறக்க மாட்டார்கள். தேர்தல் முடிவுகள் வரத்தொடங்கிய அந்த அதிர்ச்சிகரமான தினம் தொடங்கி, மறுநாள் இரவுவரை சென்னையிலுள்ள கட்சி அலுவலகங்களில் தவம் கிடந்தார்கள், நமது நிருபர்கள். அவர்கள் கண்ட காட்சிகள் இங்கே:**

## அறிவாலயம்

**கா**லை பதினோரு மணிக்கெல்லாம் திருவிழாக் கூட்டம். வெளியே கட்டியிருந்த ஒலி பெருக்கிகள் கரகரத்த போதெல்லாம் விஸில் சப்தம் விண்ணைத் தொட்டது. காரணம், அப்போது மத்திய சென்னையில் மாறன் முன்னணியில் இருந்ததுதான். சற்று நேரத்துக்கெல்லாம் தென் சென்னையில் டி.ஆர். பாலுவும் சிவகங்கையில் சிதம்பரமும் முன்னிலையில் இருக்கிற தகவல் ஒலிபரப்பப்பட்ட, கூட்டத்தின் உற்சாக ஜுரம் பல மடங்கு ஏறிவிட்டது. "தலைவா! பின்னிட்ட தலைவா!" என்று தொண்டை கிழியக் கத்தினார்கள்.

நேரம் ஓடிக் கொண்டே இருக்க, மறுபடி மறுபடி இந்த மூன்று தொகுதிகளைப் பற்றி மட்டுமே அறிவித்துக் கொண்டிருந்ததால், கண்மணிகளுக்குச் சந்தேகம் வரத் தொடங்கி விட்டது. "மேல சொல்லுய்யா!" என்று குரல் கொடுக்க ஆரம்பித்தார்கள்.

ஒரு கட்டத்தில் அறிவிப்பாளர்கள் சமாளிக்க முடியாத நிலை உருவாகி விட்டதை உணர்ந்து, "சிவகாசியில் வைகோ முன்னணியில் இருக்கிறான், மதுரையில் சுப்பிரமணியசாமி முன்னணியில் இருக்கிறான்," என்று கோபம் கொப்பளிக்க, மரியாதையையெல்லாம் காற்றில் பறக்கவிட்டு, அறிவித்ததும் உடன்பிறப்புக்களுக்கு விஷயம் புரிய ஆரம்பித்து விட்டது.

"நம்ம தலைவர் கொஞ்சம் சொதப்பிட்டாரு. மார்க்ஸிஸ்டுக்கு ரெண்டு சீட்டு குடுத்திருக்கலாம். ராமதாசை வளைச்சிருக்கலாம். மதுரைல மார்க்ஸிஸ்டு நிக்காம இருந்திருந்தா ராம்பாபு (த.மா.கா)வோட வோட்டு பிரிஞ்சிருக்காதில்ல?" என்று புலம்ப ஆரம்பித்தார்கள்.

ஆறு மணிக்கு மேல் கூட்டம் மெள்ள மெள்ளக் குறைய ஆரம்பித்துவிட்டது. ஒலிபெருக்கி மறைத்த தகவல்களை, ரேடியோ மூலமும் வெளியிலிருந்து வந்தவர்கள் மூலமும் அறிந்து, அவரவர் இடிந்து போய்த் திரும்ப ஆரம்பித்து விட்டார்கள்.

அறிவாலயத்துக்குள்ளேயும் அமைச்சர் சற்குணபாண்டியன் தவிர வேறு யாரும் இல்லை. மயான அமைதியைச் சகிக்க முடியாமல் அவரும் சற்று நேரத்துக்கெல்லாம் எஸ்கேப் ஆகிவிட, ஒரு தொண்டர் மட்டும் நெடுநேரம் மணல்வெளியில் அமர்ந்து, குமுறிக்குமுறி அழுது கொண்டே இருந்தார்...



• தி.மு.க. தலைமையகம்: சோகமுடன் தொண்டர்கள்



• சத்யமூர்த்திபவன்: வெறிச்!

## சத்யமூர்த்தி பவன்

தொண்ணூற்றாறு தேர்தலின் போது இந்த இடம் கண்ட கோலாகலத்தை வார்த்தைகளால் விவரிக்க முடியாது.

ஆனால் இம்முறை?

ஒரு ஓரத்தில் ஆறுபேர் கூடிப் பேசிக் கொண்டிருந்தார்கள்: 'ராமதாஸ் மூணு தடவை இங்க வந்தாருங்க. அவரை அலைக்கழிச்சுட்டாங்க. அந்தச் சின்னப் பசங்க (ரஜினி ரசிகர்கள்) வேற ரொம்ப



• லாயிட்ஸ் ரோடில் தீபாவளி

கொழுப்புப் போட்டிருந்தாங்க. வெச்சானுங்களே குண்டு! தஞ்சாவூர் அரிசி கொடோன்ல வெச்ச போதே இவரு சுதாரிச்சிட்டு, ஆக்ஷன் எடுத்திருக்கணும். அப்பல்லாம் ஒப்பாரி பாடிட்டிருந்தாரு. இப்ப மங்களம் பாடிட்டானுங்க!''

பவனின் கீழ்த்தளம் வெறிச்சோடிக் கிடக்க, முதல் மாடியில் விநாயக மூர்த்தி, பீட்டர் அல்போன்ஸ், கோபண்ணா, சக்திவேல் போன்றோர் சோக முகத்துடன் ரகசியமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.



• பீட்டர் அல்போன்ஸ்: குண்டுதான் காரணம்!

நம்மைக் கண்டதும் சட்டென்று சகஜமானாற்போல், புன்னகையுடன் வரவேற்ற பீட்டர் அல்போன்ஸ், "வெடிகுண்டுதாங்க முக்கியக் காரணம்'' என்றார் அவசரமாக.

கருத்துக் கணிப்புகள் தவறாகிப் போனதைச் சுட்டிக் காட்டியபோது, "EXIT POLL கணிப்புகள் பெரும்பாலும் கமிட்டட் வோட்டர்ஸ் கருத்தாக இருந்திருக்கும்'' என்றார்.

மேற்கொண்டு விவாதிக்க மனமில்லாமல், "எங்க கட்சியைப் பத்தியே நிறையப் பேச வேண்டி இருக்குது!'' என்றார். அதற்குள் மூப்பனார் வருகிறார் என்ற தகவல் வர, கடுப்பேற்றிக் கொண்டிருந்த தொலைபேசித் தகவல்களை ஒதுக்கிவிட்டு, அனைவரும் கீழ்த்தளத்துக்கு வந்தார்கள்.

"மூப்பனார் இல்லை; சோ.பா. தான் வருகிறார்'' என்று ஒருவர் சொல்ல, அவரும் இல்லாமல், ஜெயந்தி நடராஜன்தான் இறுகிய முகத்துடன் காரில் வந்து இறங்கி, அவசரமாக உள்ளே நுழைந்தார்.

மிச்சமிருந்த நாலைந்து தொண்டர்கள் பஸ் பிடிக்க வெளியே விரைந்தார்கள்.

## அ.தி.மு.க. தலைமையகம்

ஒரு சீட் கிடைத்தாலும் போதும் என்கிற எதிர்பார்ப்பில் நகம் கடித்துக் குழுமியிருந்த ரத்தத்தின் ரத்தங்கள், முதல் முதலாக ராமராஜன் திருச்செந்தூரில் லீடிங்கில் இருக்கிறார் என்ற அறிவிப்பு வந்ததும் ஒரு குரல் கொடுத்தார்கள் பாருங்கள்! காது பிய்ந்து விட்டது!

உடனே சிலர் லாயிட்ஸ் சாலை நடுவே வந்து 'மாங்குயிலே பூங்குயிலே' என்று பாடி, ஆடத் தொடங்க, டூயட்டுக்கு மகளிர் அணி களத்தில் இல்லாததால், பல்லவியுடன் நிறுத்திக் கொண்டார்கள்.

படமெடுக்க வந்திருந்த போட்டோ கிராபர்கள் பாடு திண்டாட்டமாகிவிட்டது. "இப்ப போங்களேன்யா அங்க! அங்க போயி எடுக்க வேண்டியது தானே! அந்த மூஞ்சிய மட்டும் ப்ளோ-அப் பண்ணி போட்டுக்கங்க, போங்க!"

கழுத்தைப் பிடித்துத் தள்ளாத குறை.

"கருணாநிதி, எந்த வோட்டு வேணும்னு நினைச்சாரோ அது விழுந்திருக்கும்! இப்ப சந்தோஷமா இருப்பாரு!" என்று முஸ்லிம் சிறுபான்மையினரைச் சுட்டிக்காட்டி ஒருவர் பேச, "முன்னெல்லாம் தேர்தல் சமயத்துல மட்டும்தான் அவர் முஸ்லிம் அனுதாபியா மாறுவாரு. இப்ப மதமே மாறிட்டாரு போல! அதான் உடன் 'பிற்ற்றப்புகள்' கவுத்துட்டாங்க!" என்றார் இன்னொருவர்.

பல இடங்களில் அ.தி.மு.க. லீடிங் என்ற செய்தி வரவர, கூட்டத்தின் உற்சாகம் கட்டுப்படுத்த முடியாமல் போய்விட்டது. லாயிட்ஸ் சாலையில் ஒரே சந்தோஷ ரகளை!

பாதுகாப்புக்கு இருந்த போலீஸ்காரர்களை, "போய்யா போய் அங்க பாது காத்துக்க. எங்க அம்மாவை நாங்க பார்த்துப்போம்!"

தர்மசங்கட போலீஸார் சிரமப்பட்டு, அமைதிக்குக் கெஞ்சிக் கொண்டிருந்தார்கள்.

**மா**றன் ஜெயித்த செய்தி வந்ததும் ஒரு பெண்மணி அழத்தொடங்கி விட்டார். "ஜெயக்குமாரு கட்டாயம் ஜெயிப்பாருன்னு நம்பினேனே! எவ்ளோ ஒழைச்சோம்! படுபாவிங்க, கள்ளவோட்டு போட்டு தோக்கடிச்சுட்டானுங்க!"

"இந்தா பெரிசு! கள்ளவோட்டு போட நம்மவங்களும் ஆளு செட்டப் பண்ணித் தான் இருந்தாங்க. குடுத்த காசை ஒழுங்கா டிஸ்ட்ரிப்யூட் பண்ணாட்டா எப்படி போடுவான்?" என்று ஒரு போடு போட்டார் ஒரு மீசைக்காரர்.

வெற்றி அநேகமாக உறுதியாகி விட்ட போது சரவெடிகள் காதைப் பிளக்கத் தொடங்கின.

யாருமே இத்தனை பிரும்மாண்டமான வெற்றியை எதிர்பார்க்கவில்லை என்பதை ஒவ்வொருவரின் முகமும் சொன்னது...

"இன்னமே அம்மாவை மாநில அரசியல்ல வெச்சி குறுகிய கண்ணோட்டத்தோட பார்க்காதிங்கப்பா! இப்ப வாஜ்பாயியைப் பிரதமரா அம்மா அமர்த்தறாங்க(!) நாளைக்கு அவங்களைப் பிரதமரா நாம அமர்த்துவோம்!" என்று முத்தாய்ப்பு வைத்தார் ஒரு தொண்டர்.

- சிக்கல் சிவராமன், தில்லப்பா

# மசாலா சூட்சுமம்!



• மணி, சிதம்பரம்

**நா**ட்டின் எந்த மூலைக்குப் போனாலும் ஏதாவது ஒரு சந்தில் செட்டிநாடு மிலிட்டரி ஓட்டலைப் பார்க்கலாம். மதுரை முனியாண்டி விலாஸைப் போல ஊருக்குப் பெருமை சேர்க்கிற விஷயங்களில் - செட்டிநாட்டுக்கு அதன் சமையல்.

செட்டிநாட்டு ஸ்பெஷல் ஐட்டங்கள் பல இப்போது சென்னை போன்ற பெரு நகர ஓட்டல்களிலே அதிக விலைக்குக் கிடைக்கத்தான் செய்கின்றன. ஆனால் சுவை?

"செட்டிநாட்டு சமையலின் சுவை, அதில் சேர்க்கப்படும் பொருட்களால் மட்டும் வருவதல்ல; சமையல் செய்பவரின் ரசனை ரொம்ப முக்கியம்" என்கிறார்கள் இருபத்தைந்து வருடங்களாகச் செட்டிநாடு சமையல் ஸ்பெஷலிஸ்டுகளாக உள்ள மணியும் சிதம்பரமும். கானாடுகாத்தான் அரசர் மாளிகையில் இவர்கள் பிரதான நளன்கள்!

"வெள்ளைப் பணியாரம், கந்தரப்பம், மசாலா சீயம், ஆப்பம், உக்கரா - இவையெல்லாம் செட்டிநாட்டு ஸ்பெஷல் ஐட்டங்கள். வெள்ளைப் பணியாரமும் ஆப்பமும் யாரும் செய்யக்கூடியவைதான். ஆனால் இங்கு செய்யும்போது கிடைக்கிற சுவை மற்ற இடங்களில் வராது!" என்கிறார்கள்.

என்ன காரணம்?

"கைப் பக்குவம். மற்றும் மசாலாக்களின் தன்மை. செட்டி நாட்டு சமையலில் - சைவமோ, அசைவமோ - உபயோகிக்கப்படும் மசாலாக்கள் எதுவும் கடைகளில் ஹோல்ஸேலாக வாங்கப்படுபவை அல்ல! இருபத்தேழு வித மசாலா சேர்மானங்களை நாங்களே கையால் இடித்துத்தான் தயார் செய்வோம். இடிப்பதில் கூட ஒரு பதம் இருக்கிறது. அதெல்லாம் தொழில் ரகசியம்!"

அரிசியையோ, பருப்பையோ கிரைண்டரில் அரைத்தால், அதன் நிஜமான சுவை போய்விடும்; தவிர ஒருவித வாசனை கூடுதலாக வரும் என்கிறார்கள் இவர்கள்.

"மாவரைப்பதெல்லாம் இங்கே ஆட்டுக் கல்லில்தான். தவிர, கேஸ் அடுப்பையோ, மண்ணெண்ணெய் அடுப்பையோ உபயோகிக்காமல் விறகடுப்பில் சமைத்தால்தான் சமையல் மணக்கும்!"

ராஜா வீட்டில் கோட்டை அடுப்புகள் பிரும்மாண்டமாக எரிந்து கொண்டிருக்கின்றன.

"நாங்கள் எத்தனை சொன்னாலும் உங்களுக்குப் புரிந்து கொள்வது சிரமம்தான். ஒருவேளை இங்கு சாப்பிட்டுப் பாருங்கள்!" என்று உட்கார வைத்து, பஞ்சு போன்ற வெள்ளைப் பணியாரங்களையும் 'உக்கரா' என்கிற சர்க்கரைப் பொங்கலுக்கும் ரவா கேசரிக்கும் பிறந்த குழந்தை மாதிரி சுவையுள்ள ஒருவித அற்புத இனிப்பையும் சமைத்துப் போட்டார்கள். சாப்பிட்டு, சொக்கிப் போனோம்!

"இப்போதெல்லாம் செட்டிநாட்டு ஓட்டல்களில் ரெடிமேட் மசாலாக்கள் வாங்க ஆரம்பித்து விட்டார்கள். அதனால் வழக்கமான செட்டிநாட்டு சுவை பல ஓட்டல்களில் கிடைப்பதில்லை. செய்முறை பழசுதான் என்றாலும் சுவை கிடைப்பது எங்கள் சமையலில்தானே?" என்றார்கள்.

- ஜக்குநாதன்



• அண்ணாமலை பல்கலைக் கழகம்

# கல், கல்லாகக் காசிவரை!

சம்பாதிக்கிற பணத்தில் நான்கில் ஒரு பங்கை தரும காரியங்களுக்காகச் செலவிடுவது என்பது நகரத்தார் சமூகத்தில் தொன்று தொட்டு இருந்து வரும் நடைமுறை. வேறெந்த வகுப்பிலும் இது ஒரு கடமையாகச் செய்யப்படுவதாகச் சரித்திரம் இல்லை என்பது கவனிக்க வேண்டிய விஷயம்.

செட்டி நாட்டுக்காரர்கள் எந்தெந்தப் பகுதிகளில் குடியேறுகிறார்களோ அங்கெல்லாம் ஆலயப்பணி செய்திருப்பது நகரத்தார் வரலாறு நூலிலிருந்து தெரிகிறது. தென் தமிழ் நாட்டு மாவட்டங்களிலும் கோவைப் பகுதிகளிலும் உள்ள அநேகமாக அத்தனை ஆலயங்களிலும் ஒரு கல்லாவது செட்டிநாட்டார் நன்கொடையாக நிச்சயம் இருக்கும்!

பர்மாவுக்கு வியாபாரக் காரணங்களுக்காக, இந்நூற்றாண்டின் ஆரம்பத்தில் சென்ற நகரத்தார், அங்கிருந்து திரும்பும் வழியில் மேற்கு வங்காளத்தில் சில காலம் தங்கியிருந்ததாகச் சொல்கிறார்கள்.

அப்படித் தங்கியவர்கள், உத்திர பிரதேசத்திலுள்ள வாரணாசி (காசி) விசுவநாதர் ஆலயத்திலும்கூட அறப்பணி செய்து இன்றும் காசி விசுவநாதர் ஆலயத்தில் நகரத்தார் பெயர் விளங்கும்படிச் செய்திருக்கிறார்கள். பதினெட்டாம் நூற்றாண்டு தொடங்கி, தமிழக ஆலயங்களில் நகரத்தார் செய்த அறப்பணிகள் பற்றியும் அவர்களே எழுப்பிய ஆலயங்கள் பற்றியும் ரெக்கார்டுகள் உள்ளன.

ஆலயப் பணிகளுடன் கூடவே இவர்கள் செய்துள்ள இன்னொரு காரியம் தரும சத்திரங்கள் நிறுவுவது! தவிர, நாடெங்கிலுமுள்ள நகரத்தார் விடுதிகள் பட்டியல் ஒன்றை செட்டிநாட்டில் தருகிறார்கள். இது தென் சென்னை

• பிள்ளையார்பட்டி ஆலயம்



வாக்காளர் பட்டியலை விட நீளமாக இருக்கிறது!

இந்த விடுதிகளில் நகரத்தார் தங்குவதென்றால் அடையாள வாடகையாக ரூ. பத்து, இருபது தான் வாங்குவார்கள். பிறர் என்றாலும் சகாயமான வாடகைதான் என்கிறார்கள்.

"இப்போதெல்லாம் நகரத்தார் என்று சொல்லி வேறு பலர் வந்து தங்க நினைக்கிறார்கள். ஆனால், நீங்கள் என்ன கோவிலைச் சேர்ந்தவர்கள் என்று கேட்பதன் மூலம் அசடுவழிய வைத்துவிடுவது நடைமுறையாகி இருக்கிறது!" என்றார் தேவகோட்டை அழகப்ப செட்டியார்.

நகரத்தாரின் கல்விப் பணி அண்ணாமலை அரசரிடம் தொடங்குகிறது! சிதம்பரம் அண்ணாமலை பல்கலைக் கழகம் தொடங்கிப் பட்டியல் போட்டால் இடம் போதாது! காரைக்குடி அழகப்ப வள்ளல் மற்றும் ஏவி.எம். குடும்பத்தாரின் கல்விப் பணிகளும் குறிப்பிடத் தகுந்த சாதனைகளாக உள்ள நிலையில், தற்கால நகரத்தார் சமூகத்தினர் பெரும்பாலோர் தொழில்துறையில் மட்டுமே அதிக கவனம் காட்டி வருவதைச் சுட்டிக்காட்டினர், காரைக்குடி பல்கலைக் கழக மாணவர்கள் சிலர். ○

- ஆழ்வார்க்கடியான்



சிவமயம்

குடவாசல் வட்டம் கருவேலி

# ஸ்ரீ சர்வாங்க நாயகி ஸமேத ஸ்ரீ சற்குணேஸ்வரஸ்வாமி ஆலய

# சம்வத்ஸராபிஷேக பத்திரிகை

*மட்டிட்ட குழலார் சுழலில் வலைப்*
*பட்டிட்டு மயங்கிப் பிரியாது நீர்*
*கட்டிட்ட வினைபோகக் கருவிலி*
*கொட்டிட்டை யுரைவான் கழல் கூடுமே – அப்பர்*

நீர்வளம் நிலவளம் சூழ்ந்த சோழவள நாட்டின் காவிரியின் தென்பால் அப்பர் சுவாமிகளால் பாடல் பெற்ற கருவிலி என்ற கருவேலி. இத்தலம் கோனேரிராஜபுரம் திருவீழிமிழலையும் திருவாஞ்சியமும் திருநறையும் ஆகிய க்ஷேத்திரங்களுக்கு மத்தியில் அமைந்த மிகப் பெரிய க்ஷேத்திரம் அரிசொல் நதியின் வடகரையில் உள்ளது. இப் புண்ணிய க்ஷேத்திரம் சற்குணராஜனால் திருப்பணி செய்யப்பட்டதால் சற்குணேஸ்வரம் என்று பெயர் பெற்றது. இந்திரன் பூஜை செய்து பேறுபெற்ற ஸ்தலம். ஸ்ரீ உருத்திரகணங்கள் பூஜித்து பெயர் பெற்ற ஸ்தலம். இந்த ஸ்தலம் 27.3.1997-ல் கரு வேலி ராமய்யர் (குழந்தை அய்யர்) அவர்கள் சந்ததியினரால் திருப்பணிகள் செய்து மிகச் சிறப்பாக கும்பாபிஷேகம் நடந்தது. கும்பாபிஷேகம் நடந்ததை முன்னிட்டு *காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் ஸ்ரீ விஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் இவர்கள் அனுக்கிரகத்துடனும் அருளாசியுடனும்* நாளது ஈஸ்வர வருடம் *பங்குனி மாதம் 3-ந் தேதி (17.3.98) செவ்வாய்க் கிழமை மிகச் சிறப்பாக சம்வத்ஸராபிஷேகம்* நிகழ்ச்சி நிரலில் கண்டவாறு நடைபெறும். ஆஸ்தீக அன்பர்கள் கலந்து கொண்டு ஸ்ரீ சற்குணேஸ்வர சுவாமி அருளைப் பெற அன்புடன் அழைக்கிறோம்.

இப்படிக்கு,
நிர்வாகிகள், கிராமவாசிகள்.

## நிகழ்ச்சி நிரல்

*16.3.98 திங்கட் கிழமை மாலை 5.00 மணிக்கு :*

அனுக்ஞை, விக்னேஸ்வர பூஜை,ஸ்நபனம் பூஜைகள் ஹோமங்கள் பூர்ணாஹுதி

*17.3.98 செவ்வாய்க்கிழமை :*

காலை 8.00 மணியளவில் பூஜைகள், ஹோமங்கள்
காலை 9.00 மணியளவில் பூர்ணாஹுதி, தீபாராதனைகள்
காலை 9.30 மணியளவில், சுவாமி அம்பாளுக்கு பரிவாரங்கள் சம்வத்ஸராபிஷேகம்.
காலை 11.30 மணியளவில் தீபாராதனைகள்

# சைக்கிள் முதல் சினிமா வரை...!

செட்டிநாட்டு சமூகத்தினர் இந்தியாவின் பொருளாதார முன்னேற்றத்துக்கு அளித்திருக்கும் உழைப்பும் நிதியும் கணக்கிலடங்காதன. தொழில் தர்மத்தை தெய்வீகப் பற்றுடன் கடைப்பிடித்து வரும் அனைத்து நகரத்தார் நிறுவனங்களுக்கும் நம் நன்றி உரியது. குடும்பத் தொழிலாக ஆரம்பித்து, தலைமுறைகளைத் தாக்குப் பிடித்து பிரும்மாண்டமான க்ரூப் கம்பெனிகளாக வளர்ந்துள்ள சிலவற்றை சாம்பிளாக இங்கே குறிப்பிடுகிறோம்:

வெள்ளையர் ஆட்சியின் போது 'ராஜா, ஸர்' என்ற பட்டங்களை ஆங்கிலேயரிடம் பெற்றவர் அண்ணாமலை செட்டியார். (கல்கி கலெக்ஷன் பகுதி காண்க) இவரது பேரன்கள்தான் இன்று ஸ்பிக் க்ரூப் அதிபராயிருக்கும் ஏ.சி. முத்தையா, செட்டிநாடு சிமெண்ட்ஸ் நடத்தும் எம்.ஏ.எம். ராமசாமி ஆகியோர். ஏ.சி. முத்தையாவின் தந்தை எம்.ஏ. சிதம்பரம் (சேபாக் மைதான ஸ்டேடியம் அமைக்க கணிசமாக நன்கொடை உதவியவர்). பாரம்பரிய தொழில் வியாபாரத்தோடு நின்றுவிடாமல் நவீன தொழில் துறையில் துணிந்து அடியெடுத்து வைக்க, இன்று ராஜா சர் குடும்பத்தின் நான்காவது தலைமுறை நிர்வாகப் பொறுப்பைப் பகிர்ந்து முன்னேறுகிறது - அஸ்வின் முத்தையாவும், எம்.ஏ.எம் ராமசாமியின் மகன் ஐயப்பனும் தங்கள் முத்திரை பதிக்கத் தயாராகி வருகிறார்கள்.



• எம்.வி. சுப்பையா

• ஏ.சி. முத்தையா





• எம்.ஏ.எம்

பர்மாவில் தேக்குத் தோட்டங்கள் வாங்கிப் போட்டு வளம் கண்ட மற்றொரு செட்டிநாட்டுக் குடிமகன் ஏ.எம்.எம். முருகப்ப செட்டியார். இரண்டாம் உலகப் போர் முடிந்த பின் இந்தியா திரும்ப முடிவு

## உயர்ந்த மனிதர்!

''எம்.வி. அகால மரணம் அடைவதற்குச் சில மாதங்கள் முன்பு, சென்னையில் அவர் வீட்டுக்குப் போனேன். உடல்நலம் மிகவும் குன்றியிருந்தபோதும் தம் நோயைப் பற்றி அவர் ஒருமுறைகூடக் குறிப்பிடவில்லை. முழு நேரமும் இந்தியாவைப் பற்றிப் பேசினார். அதன் எதிர்காலம் குறித்து, அதன் முன்னேற்றத்துக்குத் தொழில்துறை எப்படிப் பங்களிக்கலாம் என்று, பொது வாழ்க்கையில் நேர்மையின் அவசியம் பற்றி... பேசிக் கொண்டே போனார். தமிழகத்தின் வளர்ச்சிக்குப் புதுப் புது யோசனைகள் வெளியிட்டார்.

தமது கனவுகளுக்கு வடிவம் கொடுக்கக் கூடிய ஆற்றலும் முயற்சியும் செயல்திறனும் அவரிடம் நிரம்பியிருந்தன.

தொழில்துறையின் மிகச் சிறந்த தலைவர்களுள் ஒருவர் எம்.வி. புதிய இந்தியா உருவாக, அதில் நவீன பொருளாதாரமும் மனிதநேய சமுதாயமும் கைகோத்திருக்க- தொழில்துறை முனைப்புடன் இயங்க வேண்டும் என்பதில் மிகத் தீவிரமாய் இருந்தார்.

ரிசர்வ் வங்கியின் இயக்குனராக அவர் இருந்த காலத்தில் அவர் அனுபவமும் ஈடுபாடும் பேருதவியாய் அமைந்தன. தமது செல்வாக்கையோ, அரசு வட்டாரத் தொடர்புகளையோ தொழிலகத் தேவைகளுக்காக அவர் ஒருமுறை கூடப் பயன்படுத்தியதில்லை.

இருபத்தைந்து ஆண்டுகள் அவருடன் பழகியிருக்கிறேன் - மிகப் பெரிய சாதனையாளர்; மிக உயர்ந்த மனிதரும் கூட.''

- Recalling MV என்ற புத்தகத்தில் தொழிலதிபர் எம்.வி. அருணாசலம் பற்றி மன்மோகன்சிங்.



• எம். வி. அருணாசலம்

செய்தார். ஏழையின் வாகனமான சைக்கிள் உற்பத்தியில் நல்ல லாபம் இருக்கும் என்று துல்லியமாய்க் கணக்கிட்டு, டி.ஐ. சைக்கிள்ஸ் நிறுவனத்தை ஆரம்பித்தார். (Tube Investments என்ற பிரிட்டிஷ் நிறுவனத்தின் துணை நிறுவனமாக இது தொடங்கப்பட்டது) தொழில்துறை உபகரணங்கள் தயாரிக்கும் Carborandum Universal, மோட்டார் சைக்கிள் செயின்கள் உற்பத்தி செய்யும் டி.ஐ. டைமண்ட் செயின்ஸ், சைக்கிள் பாகங்கள் தயாரிக்கும் இதர சிறு நிறுவனங்கள் என்று அபார வளர்ச்சி கண்ட இந்நிறுவனம், நலிவடையும் நிலையிலிருந்த இ.ஐ.டி. பாரியையும் வாங்கி, வெற்றி நடை போட வைத்துள்ளது. முருகப்ப செட்டியார் பிதாமகராக இருந்து நடத்திய இந்தக் குடும்பத் தொழிலை இன்று அவருடைய சகோதரர்களின் மகன்கள் எம்.வி. சுப்பையா, எம்.ஏ. அழகப்பன் ஆகியோர் கவனித்துக் கொள்கிறார்கள்.

செப்டம்பர் '96இல் காலமான எம்.வி. அருணாசலம் (எம்.வி. சுப்பையாவின் மூத்த சகோதரர்) இந்நிறுவனங்களில் தொழில் ரீதியான அணுகுமுறையைப் புகுத்தியவர். இந்தியாவின் தலை சிறந்த தொழிலதிபர்களுள் ஒருவராக அங்கீகாரம் பெற்றவர் (காண்க பெட்டிச் செய்தி)

• ஏ.வி.எம்



திரைத் துறையில் ஏ.வி.எம் என்பது இன்று மந்திரச் சொல். இந்த க்ரூப்பின் இன்றைய தலைமுறையினர் படத் தயாரிப்பு மட்டுமின்றி திரைத் தொழில் நுட்பத்திலும் கவனம் செலுத்தி வருகின்றனர். 'ஆடியோ' மார்க்கெட்டில் அழுத்தமாகக் காலூன்றியுள்ளனர்.

தேசியமயமான இந்தியன் ஓவர்ஸீஸ் வங்கியும் இந்தியன் வங்கியும் செட்டிநாட்டுக் குடும்பத்தாரால் தொடங்கப்பட்டவை என்பது இன்றைய தலைமுறையினருக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை! 'முத்தைய செட்டியார் ஹைஸ்கூல்' புகழ் எம்.சி.டி.எம். சிதம்பரம் செட்டியார் தொடங்கியதுதான் ஐ.ஓ.பி. அந்தக் காலத்தில் செட்டியார் பாங்க் என்றே அது அழைக்கப்பட்டது!

— வி. கோபாலன்

# எப்படி இப்படி ஆச்சு?

தமிழ்நாட்டில் இயங்கும் பதிப்பகங்களில் முக்கால்வாசியை நடத்தி வருபவர்கள் நகரத்தார்கள்தாம்! வானதி, பாரி நிலையம், அருணோதயம், பாரதி பதிப்பகம், பழனியப்பா பிரதர்ஸ், ஸ்டார் பப்ளிகேஷன்ஸ், தமிழ்ப் புத்தகாலயம், திருமகள் நிலையம் என நீண்டு கொண்டே போகும், பட்டியல்!

• ராமநாதன்



எப்படி உருவானது இந்த நிலைமை? தற்செயலாகவா? அல்லது குறிப்பிட்ட பின்னணி ஏதாவது உண்டா? அதுவும் எழுத்தாளர்கள் என்று பார்க்கும்போது எண்ணிக்கையில் மிகக் குறைவானவர்களே உள்ள நகரத்தார் சமூகத்தில், பதிப்பக உரிமையாளர்களாக மட்டும் பலர் இருப்பது எப்படி?

திருமகள் நிலையத்தின் உரிமையாளர் ராமநாதனை அணுகிக் கேட்டோம்.

“கல்விப் பணியிலே செட்டிநாட்டுக்காரங்களுக்கு ஆர்வம் அதிகம். எழுத்து, கலை, இலக்கியமெல்லாம் ரொம்ப நெருக்கமான விஷயங்கள். அதனோட ஒரு அங்கமான பதிப்பகத் துறையில் பலர் தற்செயலா ஒண்ணா நுழைஞ்சிருக்கலாம். என் சின்ன மாமனார் அந்தக் காலத்துல 'வள்ளுவர் பண்ணை'ன்னு பதிப்பகம் நடத்திட்டு வந்தார். 'இது லாபமான தொழில். நீயும் தொடங்கு'ன்னு என்னை இதில் நுழைச்சவரும் அவர்தான். இது மாதிரிதான் மற்ற பதிப்பகத்தார்களும் - அவரவர் முன்னோர்கள் வழியில் இந்தத் துறையைத் தேர்ந்தெடுத்திருப்பாங்கன்னு நம்பறேன். ஆனா எங்க அடுத்த தலைமுறை இந்தத் தொழிலில் இருக்குமாங்கறது சந்தேகம். என் மகன் டாக்டருக்குப் படிச்சிட்டு, பிராக்டிஸ் பண்ணிட்டிருக்கான். பலர் இப்படி தொழில் மாறிட்டாங்க. அடுத்த பத்து வருஷத்துல இப்படியொரு கேள்வியை நீங்க கேட்க, எங்க சந்ததிகள் இடம் வைக்க மாட்டாங்க.”

— குல்லூ

**சி.பி. ராதாகிருஷ்ணனை ஆதரித்துப் பிரசாரம் செய்ய வந்த அத்வானி இவருக்காக ஒரு வார்த்தை கூட வோட்டுக் கேட்கவில்லை. அவருக்குப் பின்னால் அணிவகுத்த குண்டுகளே பிரசாரத்தை முடித்து விட்டன! வெற்றி வாகை சூடியிருக்கும் கோவை பி.ஜே.பி. எம்.பி., சுமார் 1¼ லட்சம் வாக்குகள் வித்தியாசத்தில் வென்றவர். இந்த மனிதரை எதிர்த்தவர்கள் இரண்டு வலுவான கூட்டணிகள் மட்டுமல்ல! சுமார் 11 அமைச்சர்கள், அனைத்துக் கட்சி தொழிசங்கப் பேரணி (சுமார் பத்தாயிரம் பேர் + மூவாயிரம் போலீஸ் படை), எண்ணிக்கையிலடங்கா நூற்றுக்கணக்கான குண்டுகள்...! சி.பி. ராதாகிருஷ்ணனை அவரில்லத்தில் சந்தித்து பேட்டி கண்டோம்....**

# குண்டு நகரை

**கல்கி :** இந்தியாவே உன்னிப்பாக கவனித்துக் கொண்டிருக்கும் இந்தக் கோவைத் தொகுதியில் அமோக வெற்றி பெற்றிருக்கிறீர்கள்... நீங்கள் பார்லிமெண்டில் முதன் முதலாய் எழுப்பப் போகிற பிரச்னை...?

**சி.பி. ராதாகிருஷ்ணன் :** வேறென்ன? அடுத்தடுத்து கோவையில் நடந்துள்ள கலவரங்கள்... தொடர் குண்டு வெடிப்புகள் குறித்த தமிழக அரசின் அசிரத்தை. தீவிரவாதிகளின் மீது கடுமையான நடவடிக்கை எடுக்காத அதன் போக்கை பார்லிமெண்டில் எதிரொலிப்பது முதல் வேலை. இது குறித்து மாநில அரசை யும், நிர்ப்பந்திப்பது என்பதே எனது குறிக்கோள். சிறுபான்மை சமூகத்திற்கு மதச்சார் பின்மை என்ற பெயரால் ஆதரவளிப்பது போல் காட்டிக் கொண்டு, தீவிரவாதிகளுக்கு ஆதரவளிக்கும் தி.மு.க. அரசைத் தோலுரித்துக் காட்டப் போகிறேன்!

**கல்கி :** அடிப்படையில் எங்கு தவறு என்று கருதுகிறீர்கள்?

**சி.பி.ஆர். :** கலைஞர் செய்த தவறுகளைச் சொல்லிக் கொண்டே போகலாம். குறிப்பாகக் கோவையைப் பொறுத்தவரை கடமையாற்ற வேண்டிய காவல் துறையைத் தம் ஆளும் பலத்தால் கட்டிப் போட்டது. உணர்வுபூர்வமாகக் கடமையாற்றும் அதிகாரிகளை இருந்த இடம் காணாமல் செய்தது. எந்தக் கொலை பாதகத்தையும், சமூக விரோதப் போக்குகளையும் கண்டு கொள்ளாத அளவில் கடமையுணர்வற்ற போலீஸ் அதிகாரிகளை உருவாக்கி, இங்கு கொண்டு வந்து சேர்த்தது. இதற்கெல்லாம் வலுவான, எல்லோரும் நம்பத்தகுந்த ஆதாரம் வேண்டுமல்லவா? – அடிக்கடி இங்கு போலீஸ் கமிஷ்னரை மாற்றியதே அதைத் தெளிவுபடுத்திவிடுமே...!



• சி.பி. ராதா கிருஷ்ணன்

**கல்கி :** கோவையைப் பழையபடி அமைதியாக்க, கோவையைக் காப்பாற்ற திட்டம் ஏதும் வைத்துள்ளீர்களா...?

**சி.பி.ஆர்.:** இங்கு நிலவும் சமீபத்திய கலவர, கொடூரங்களுக்குக் காரணம் தி.மு.க.! ஒன்று, தி.மு.க ஆட்சி போனால்

# வென்ற வேட்பாளர்!

## சி.பி. ராதாகிருஷ்ணன் எம்.பியுடன் பேட்டி

அமைதியாகும். அல்லது தீவிரவாதத்தை ஆதரிப்பதை இவர்கள் கைவிடணும். இது தான் வழி. தீவிரவாதிகளை ஆதரிக்கிறவர்கள் தீவிரவாதிகளை விடக் கொடூரமானவர்கள்.

**கல்கி** : சிறுபான்மையினர் வோட்டு – குறிப்பாக கோட்டை மேடு முஸ்லீம்களின் வோட்டு உங்களுக்கு விழுந்திருக்குமா?

**சி.பி.ஆர்.** : கண்டிப்பாக விழுந்திருக்கும். ஆனால் அவர்கள் இருந்திருந்தால்தானே எனக்கு வோட்டளித்திருப்பர்...? (பிரசாரத்திற்கு அங்கு கூடத் துணிச்சலாக சென்றாராம்). எல்லோரும் ஓடி விட்டனரே.. அப்படியும் ஏனைய மக்களின் வோட்டு என்னை வெற்றி பெறச் செய்திருக்கிறது.

**கல்கி** : மக்களின் சராசரி உணர்வுகளைத் தூண்டிவிட்டு வோட்டு வேட்டையாடுகிறது பி.ஜே.பி. என்கிற விமர்சனம் குறித்து...?

**சி.பி.ஆர்.** : தி.மு.க., த.மா.கா. மற்றுமுள்ள ஐமு கட்சிகளில் மட்டும் என்ன வாழ்கிறது?

**கல்கி** : அவர்களை விடுங்கள். நீங்கள் (பி.ஜே.பி.) ஒரு ஸ்திரமான கொள்கை உள்ள கட்சி... பாபரி மசூதிப் பிரச்னையைக் கிளப்பி...

**சி.பி.ஆர்.** : அது உணர்வு சம்பந்தப்பட்டதுடன் அறிவுபூர்வமான ஒன்றும் கூட! ஏன் சார்.. உங்கப்பா தாத்தா சம்பாதிச்ச சொத்து, ரொம்ப காலமா அடகுல இருந்து, மீட்க முடியலை. ஒரு நாள் வசதி வந்ததும் அதை மீட்கத்தானே போராடுவீங்க? அப்போது உங்கள் பூர்வீக இடத்தை விட்டு, பக்கத்தில் வேறு இடத்தைக் காட்டி அதுதான் உன் தாத்தாவுது என்று காட்டினால் ஏற்றுக் கொள்வீர்களா? அதுமாதிரி சிந்தித்துப் பார்க்க வேண்டிய விஷயம் இது!

**கல்கி** : கோவையில் மிக முக்கியப் பிரச்னை தொழில் தேக்கம்...! பஞ்சாலைகள் நலிவு.. பவுண்டரிகள் மூடல்.. சூழல் பாதிப்பு...

**சி.பி.ஆர்.** : அனைத்து தொழில்களுக்கான தடைகளையும் நீக்க அரசை வற்புறுத்துவேன். இங்கு நிலவும் சிக்கலான பருத்தி சாகுபடி முறையை மாற்றி புதிய ஜவுளிக் கொள்கை உருவாக்கப் பாடுபடுவேன். காணாமல் போய்க் கொண்டிருக்கும் நொய்யலாற்றைக் காப்பாற்ற முழு முயற்சி மேற்கொள்வேன். கிராமங்களால் உயிர் வாழும் இந்தியா போன்ற மிகப் பெரிய நாடுகளுக்கு 'High Technology' தேவையானவற்றிற்கு மட்டுமே பயன்படுத்த வேண்டியது அவசியம்! சாதாரண 'சிப்ஸ்' தயாரிப்புக்குக் கூட அயல் நாட்டை நம்பும் ப. சிதம்பரத்தின் புதிய பொருளாதாரக் கொள்கை அவசியமற்றது. கிராமத்தினர் நகரம் நோக்கி ஓடுவதை எந்த பி.ஜே.பி. தொண்டனும் விரும்புவதில்லை. எல்லோருக்கும் எல்லாம் வேண்டும் என்பதே எங்களது கொள்கை.

**கல்கி** : பி.ஜே.பி. வந்தால் பிறகு தேர்தலே வராது என்கிற விமர்சனம் குறித்து?

**சி.பி.ஆர்.** : ஒரு கம்யூனிஸ்ட் நாட்டில் கூட தேர்தல் நடக்கும் – நடக்கிறது என்கிற நம்பிக்கை வளர்ந்து நிற்கிற போது இந்த விமர்சனத்தை யார்தான் ஏற்றுக் கொள்ளுவர்...? ஆனால் ஒன்று, இந்த தி.மு.கவும் கம்யூனிஸ்டுகளும் இருக்கும் வரை பி.ஜே.பியின் வளர்ச்சி 'ஆல்' போல் தழைத்தோங்கும்!

சந்திப்பு : **கா.சு. வேலாயுதன்**



"நீங்க ஏன் திடீர்னு உங்க பதவியை ராஜினாமா செய்தீங்க?"

"வெள்ளை அறிக்கை வேணும்னு கேட்டாங்களேன்னு வெள்ளை பேப்பர் ஒண்ணுல கையெழுத்து போட்டுக் கொடுத்தேன்; அதுல ராஜினாமா செய்யற மாதிரி எழுதிக்கிட்டாங்க!"

— சீர்காழி வி. ரேவதி

# கலை வளர்க்கலாம்; காசும் பார்க்கலாம்!

**மீ**னா முத்தையா....

மறைந்த செட்டிநாட்டரசர் ராஜா சர் முத்தையா செட்டியாரின் மூத்த மருமகள். குமார ராஜா முத்தையாவின் மனைவி. தஞ்சாவூர் ஓவியத்தில் முறையாகப் பயிற்சி அளிக்கும் கலைக் கூடம் ஒன்றை, சென்னை ராஜா அண்ணாமலைபுரத்தில் நடத்தி வருகிறார். இது, இக்கலைக்கான முதல் மையம்!

மீனா, அரண்மனை வாழ்க்கையை அனுபவித்துக் கொண்டு உல்லாசமாக இருந்திருக்கலாம். அல்லது தனக்குப் பிடித்த இந்தக் கலையைக் கற்றுக் கொண்டதோடு நிறுத்திக் கொண்டிருக்கலாம். எதற்கு வேலைமெனக்கெட்டு இப்படி ஒரு ஓவியப் பயிற்சிக் கூடத்தை நடத்த வேண்டும்? என்ற கேள்வியோடு அங்கு சென்ற போதுதான் தெரிந்தது. மீனா முத்தையாவாலேயே பெருமுயற்சிக்குப் பிறகுதான் இந்தக் கலையைக் கற்க முடிந்தது என்று!

**ஸ்ரீ**ரங்கத்தைச் சேர்ந்த கோவிந்த ராமானுஜம் என்பவர் இந்த வகை ஓவியத்தில் எக்ஸ்பர்ட்டாக விளங்கியவர். தனக்கு இந்தக் கலையைக் கற்றுக் கொடுக்கச் சொல்லி மீனா அவரிடம் கேட்டுக் கொள்ள, "பெண்களுக்கு இந்தக் கலையைக் கற்றுத் தருவதில்லை" என்று அந்தக் கால சம்பிரதாயத்தை மனதில் கொண்டு அவர் மறுத்துவிட, இவர் சோர்ந்து விடவில்லை. தீவிர முயற்சி எடுத்து, அவரைச் சம்மதிக்க வைத்து, அவரது குடும்பத்தையே அரண்மனைக்கு வரவழைத்துத் தங்கவைத்து இந்தக் கலையில் தேர்ச்சி பெற்றார்.

இந்தக் கலைக்கூடத்தில் பயிற்சி எடுத்துக் கொள்ளும் மாணவர்கள் ராஜபாளையம், வேலூர், சேலம், தஞ்சை என்று பல ஊர்களிலிருந்து வந்து இங்கு குருகுலவாசம் போலக் கலையைக் கற்றுக் கொள்கின்றனர். படிப்புக் காலம் முடிந்த பிறகு இங்கேயே உதவியாளராகவோ, ஆசிரியராகவோ தொடரவும் வாய்ப்பு உண்டு.



• மீனா முத்தையா

**த**ஞ்சை ஓவியம் என்பது மரபுமீறாதது. இங்கு தெய்வ உருவங்களுக்கு மட்டுமே இடம் உண்டு.

ஆனாலும், முன்பெல்லாம் கோயில்களிலும், பஜனை மடங்களிலும் மட்டுமே அதிகம் தென்பட்ட தஞ்சை ஓவியங்கள், இப்போது தனியார் நிறுவனங்களிலிருந்து வீடுகள் வரை இடம்பெறத் தொடங்கி விட்டன. வெளிநாடுகளுக்கும் இவை ஏற்றுமதியாகின்றன. எனவே, பொருளாதாரப் பிரச்னைகளும் இதில் ஏற்பட வாய்ப்பு இல்லை என்கிறார்கள்.

— ஜி.எஸ்.எஸ்.



• ஓவியர் பள்ளியில்....

அட, இதுல இவ்ளோ விஷயம் இருக்கா? – 6

# கதிருக்குள் எத்தனை புதிர்!

நம் உடலுக்குள் என்ன நடக்கிறது என்பதை நம்மால் பார்க்க முடிவதில்லை. ஆனால் அதைத் தெரிந்து கொண்டால் பல சிக்கல்களை சரிசெய்து கொண்டு ஆரோக்கியமாக வாழ வசதியாக இருக்கும். இதற்கு உதவுகிறது, எக்ஸ்ரே.

பரிசோதனைக்காக எக்ஸ்ரே எடுத்துக் கொள்ளப் போகும்போது நம்மை நிற்கவோ, படுக்கவோ வைத்து உடலின் குறிப்பிட்ட பகுதியில் எக்ஸ்ரே கதிர்களைப் பாய்ச்சுகிறார்கள். அந்தக் கதிர்கள் உடலை ஊடுருவிச் சென்று அதற்குக் கீழ்ப் பகுதியில் (ஒரு உலோக ஷீட்டுக்குள் வைக்கப்பட்டுள்ள) உள்ள பிலிமில் பதிகின்றன. நமது தோலும் சிலவகை திசுக்களும் எக்ஸ்ரே கதிர்களைத் தடையின்றி அனுமதிக்கின்றன. எலும்பு, சிலவகைத் திசுக்கள், நுரையீரலில் உள்ள காற்றுப் பைகள் ஆகியவை எக்ஸ்ரே கதிர்களை முழுவதுமாக உள்ளுக்குள் ஊடுருவ விடுவதில்லை. இதன் காரணமாக பிலிமில் எக்ஸ்ரே கதிர்கள் சீராக விழாமல் அவை எந்தப் பகுதியை எட்டியதோ, அதற்குத் தகுந்த மாதிரி வெள்ளை மற்றும் கருப்பு நிறங்களில் பதிவாகின்றன. இதைக் கொண்டு டாக்டர் சில முடிவுகளுக்கு வருவார்.





இந்த எக்ஸ்ரே கதிர்களை எப்படி உருவாக்குகிறார்கள் தெரியுமா? ஒரு ட்யூபில் காற்றை கிட்டத்தட்ட முழுவதுமாக நீக்கி விடுகிறார்கள். அதாவது அந்தக் கண்ணாடி ட்யூபில் ஒரிஜினலாக எவ்வளவு காற்று இருந்திருக்குமோ அதில் கோடியில் ஒரு பங்குக்கும் குறைவாகத்தான் இப்போது இருக்கும். அந்த ட்யூபில் இரண்டு மின்கடத்திகளும் ஒரு டங்க்ஸ்டன் ஒயரும் இடம் பெற்றிருக்கும். மின்சாரம் செலுத்தப்பட்டவுடன் மின்கடத்திகளிலிருந்து எலெக்ட்ரான்கள் மிகுந்த விசையுடன் டங்க்ஸ்டன் ஒயரை நோக்கிச் சென்று நொடிக்கு ஒரு லட்சம் மைல்கள் என்கிற வேகத்தில் தாக்கும். இப்படி திடீரென்று தம்மீது பாயும் எலெக்ட்ரான்களை



"தன்னோட கதையைத் திருடிட்டாங்கன்னு அந்த எழுத்தாளர் போட்ட கேஸை தள்ளுபடி பண்ணிட்டாங்களாம்!"

"ஏன் சார்?"

"அந்தப் படத்துல கதைங்கிற அம்சமே இல்லைன்னுதான்!"

— சீர்காழி வி. ரேவதி

டங்க்ஸ்டன் தடுக்கும்போது, எலெக்ட்ரான் களிலிருந்து வெளிப்படும் சக்தியில் பெரும் பகுதி வெப்பமாக மாற்றப்படுகிறது. மற்ற சக்தி, எக்ஸ்ரே கதிராக மாறி, ட்யூபின் கீழ்ப் பகுதியில் உள்ள சிறு ஜன்னல் பகுதி வழியாக வெளிப்படுகிறது.

எக்ஸ்ரேக்களால் நிறைய ஆபத்து உண்டு. அதனால்தான் யாருமே அடிக்கடி எக்ஸ்ரே கதிர்களுக்கு உடலை உட்படுத்திக் கொள்ளுவதை மருத்துவர்கள் ஏற்பதில்லை. ஜப்பானில் சில அணுகுண்டுகளால் ஹிரோஷிமா, நாகசாகி ஆகிய நகரங்கள் அழிந்தது நினைவிருக்கலாம். அதுபோல எக்ஸ்ரேவும் ஒருவித கதிரியக்கம்தான். மிகவும் ஜாக்கிரதையாகக் கையாள வேண்டிய விஷயம் இது.

இதன் காரணமாகத்தான் எக்ஸ்ரே எடுப்பவர் நிறைய முன்ஜாக்கிரதையோடு செயல்பட வேண்டியிருக்கிறது. வழக்கமான புகைப் படங்கள் போல் 'எதற்கும் நாலைந்து எடுத்து வைத்துக் கொள்கிறேன், ஒன்றில்லாவிட்டால் இன்னொன்று தெளிவாக இருக்கும்' என்று அவர் செயல்படாமல் முதல் தடவையிலேயே சரியாகச் செயல்பட்டு சில நொடிகளுக்கு மேல் எக்ஸ்ரே கதிர்கள் நம் உடலில் பாயாமல் பார்த்துக் கொள்கிறார்.

"கன்னத்தை மேல்புறமாகத் தூக்கிக்குங்க. செயினைக் கழட்டிடுங்க. அசையாம நில்லுங்க" என்று கண்டிப்புடன் அவர் கூறுவது நமது நன்மைக்குதான்.

எக்ஸ்ரே எடுக்கும் டெக்னீஷியனுக்கு ஒரு பாட்ஜ் கொடுப்பது வழக்கம். உலோகத்தினாலான இந்தச் சிறிய பாட்ஜை அவர்கள் கழுத்துக்கு வெளியே அணிந்திருப்பார்கள். சுற்றுப்புறத்திலுள்ள கதிரியக்கத்தை இது ஈர்த்துக் கொள்ளும். இதன் காரணமாக அதன் நிறம் மாறிக் கொண்டே வரும். இப்படி நிறம் மாறும்போது உடனடியாக அவருக்கு விடுப்பு கொடுத்து - சுமார் ஒரு மாதத்துக்காவது அனுப்பி விடுவார்கள். இல்லையென்றால் அவரது உடல் பாதிக்கப்படும் அபாயம் நெருங்கிவிடும். பொதுவாகவே இந்த வகைப் பணியாளர்களுக்கு விடுமுறை அதிகமாக வழங்கப்படுவது வழக்கம்.

எக்ஸ்ரே கதிர்களைக் கொண்டு புற்று நோய்க்கு ரேடியேஷன் சிகிச்சை கொடுப்பது நமக்கும் தெரியும். எக்ஸ்ரே கதிர்கள் ஏதோ தேடிப்பிடித்து புற்றுநோயால் பாதிக்கப் பட்ட செல்களை மட்டும் அழிப்பது கிடையாது. பக்கத்தில் உள்ள நல்ல ஆரோக்கியமான செல்களையும் சேர்த்தே இது பாதிக்கும்! அதனால்தான் மிகவும் கவனத்துடன் பாதிக்கப்பட்ட பகுதியின் மீது மட்டும் கதிர்களைப் பாய விடுவார்கள். அப்படியும் ஓரளவாவது ஆரோக்கியமான செல்கள் அழிந்து விடுவதுமுண்டு. இப்படிப்பட்ட சிகிச்சை எடுத்துக் கொள்ளும் நோயாளிகள் மிகக் களைப்பாக உணர்வதற்கு இது ஒரு காரணம். ரேடியேஷன் சிகிச்சை கொடுக்கும்போது எவ்வளவு ஆழத்துக்கு இந்தக் கதிர்கள் பாயலாம் என்பதை வரையறுப்பதோடு, நோயாளி அசையாமல் இருப்பதற்காக அந்த நேரத்தில் அவரை இறுக்கக் கட்டி விடுவதோடு (அசைந்தால் ஆரோக்கியமான செல்களின் மீது கதிர்கள் பாயலாமே!), கதிர்கள் பாயத் தேவையில்லாத உடல்பகுதியின் மீது ஈயத் தகடுகளையும் பரப்புவதுண்டு.

இவ்வளவு ஆபத்துக்கள் இருந்தும் எக்ஸ்ரேவை ஏன் இன்னமும் பயன்படுத்துகிறோம்? இதற்கு மாற்றாக வேறு வழிகள் கண்டு பிடிக்கப்படவில்லையா? ஒருவாரம் யோசியுங்கள்!

— ஜி.எஸ்.எஸ்



"நான் காமெடி படம்தானே தயாரிச்சேன், எதுக்கு ஜனங்களெல்லாம் தியேட்டரை விட்டு அழுதுட்டே வராங்க...?"

"பாடாவதி படத்துக்குப் பதினைஞ்சு ரூபா தண்டம் அழுதோமேன்னுதான்!"

— வி.எஸ். கணேசன்



• கண்காட்சியில்....

# கண்ணதாசனைக் காணோம்!



ரூபா ஐம்பத்தி நாலு லட்சம் செலவு! கருணாநிதி அடிக்கல் நாட்டி, ஜெயலலிதா திறந்து வைத்த காரைக்குடி கண்ணதாசன் நினைவு இல்லக் கட்டடம், கண்ணைப் பறிக்கிறது!

பூங்கா மாதிரியான சுற்றுப்புறம். நடுவில் கவிஞரின் சிலை. சற்று உள்ளடங்கினாற்போல, அரை வட்ட வடிவில் அமர்க்களமாக இருக்கிறது இந்த நினைவு இல்லம்.

மொஸய்க் தரை. வளைவு மாடிப் படிகள். அலுவலக அறை, நூலக அறை, மீட்டிங் அறை, ஹால் எனக் கச்சிதமான அமைப்பு - அற்புதமான காற்றோட்டமுடன்.

ஆனால் நிர்வாகம்?

உள்ளே நுழைந்ததும் வரவேற்கும் கவிஞர் சம்பந்தப்பட்ட புகைப்படக் கண்காட்சி, கண்ணீர் வரவழைக்கும்!

சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த புகைப்படங்களெல்லாம் ஃப்ரேம் செய்யப்படாமல் ஓரங்கள் மட்கிப் போகத் தொடங்கி வெறுமனே போர்டில் குண்டூசியால் குத்தி வைக்கப்பட்டிருக்கின்றன.

''இதையெல்லாம் ஃப்ரேம் செய்து வைக்கக் கூடாதா?'' என்று கேட்டால், பதில்: ''பண்ணணுங்க!''

படங்கள்தான் இப்படி. நூலகம் எப்படி? என்று உள்ளே சென்றபோது பட்சி சாஸ்திரம் முதல் பட்டினத்தார் பாடல் வரை, சுந்தர சோழர் வரலாறு முதல் சுஜாதாவின் நாவல் வரை சகலமும் தாக்கல் போக்கலின்றிக் கலந்து கலந்து, கண்டுபிடிக்கவே இயலாதவாறு இருக்கின்றன.

நிறைய நியூஸ் பேப்பர்கள். லோக்கல் பத்திரிகைகள் முதல் சகல விதமான நாளிதழ்களும் வாங்குகிறார்கள். பேப்பர் படிக்கத்தான் பெரும்பாலானோர் வருகிறார்களாம். பல நல்ல புத்தகங்கள் இருந்தும் கண்டுபிடித்து, எடுத்துப் படிப்பதில் உள்ள சிரமம் காரணமாக யாரும் தொடுவதில்லை என்கிறார்கள்.

சரி, கண்ணதாசனின் புத்தகங்களாவது ஒழுங்காக இருக்கின்றனவா என்று வரிசை வரிசையாகப் பார்த்தால், மருந்துக்குக் கூட ஒரு புத்தகம் இல்லாதது பேரதிர்ச்சி!



• நினைவகம்

பாக்கியம் என்ற ஊழியரிடம் இது குறித்து விசாரித்தபோது, ''எல்லா புஸ்தகமும் உண்டுங்க. ஆனா செய்தித்துறை மெயின் ஆபீசுக்காரங்க (சிவகங்கை) எடுத்துட்டுப் போயிட்டாங்க!'' என்றார் பரிதாபமாக.

நிர்வாகி யார், என்ன செய்கிறார் என்று கேட்டபோது, ஓர் அறையைக் கை காட்டினார்.

உள்ளே எட்டிப் பார்த்தோம். ஒரு பெண்மணி, உண்ட களைப்பில் (பிற்பகல் 2.30 மணி) அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார்.

பாவம், கண்ணதாசன்!

— கிச்சா



• கழுத்து உரு

# மயக்கம் வரச் செய்யும் மெகா

“பண விஷயத்தில் நகரத்தார் ரொம்ப கவனமாக இருப்பார்கள். அநாவசியமான செலவுகளை இவர்கள் செய்வதே இல்லை. ரொம்ப ‘செட்’டாக வாழ்பவர்கள் என்பதால் தான் ‘செட்டியார்’ என்ற பெயரே வந்தது!” என்றார், நகரத்தாரான லட்சுமணன் செட்டியார்.

ஆனால், நகரத்தார் சமூகத்தில் நடக்கிற திருமணங்களில் இந்த ‘செட்’டைப் பார்க்க முடியாது! தோட்டா தரணியின் சினிமா ‘செட்’ போல வெகு பிரும்மாண்டம்தான்!

செட்டி நாட்டுக்காரர்களின் முன்னோர்கள், வேளாள குலத்துப் பெண்களை மணமுடித்தாலும் இன்றைக்கு இங்கே கலப்புத் திருமணங்களுக்கு அனுமதி கிடையாது. (எப்போதாவது நடக்கும் கலப்புத் திருமணங்கள் கூட, பெரிய வி.ஐ.பி. வீடுகளில் உண்டே தவிர, சாதாரண நகரத்தார் சமூகத்தில் அறவே இல்லை!)

நகரத்தாருக்கென்று ஒன்பது கோவில்கள் உண்டு. இளையாத்தங்குடி கைலாசநாதர் கோவில், மாற்றூர் ஐந்நூற்றீசர் கோவில், வைரவன் கோவில், இரணியூர் ஆட்கொண்ட நாதன் கோவில், பிள்ளையார்பட்டி திருவீசர் கோவில், நேமம் செயங் கொண்ட சோழேசர் கோவில், இலுப்பைக்குடி தான்தோன்றியீசர் கோவில், சூரைக்குடி தேசிகநாதர் கோவில், வேலங்குடி கண்டீசர் கோவில் என்ற இந்த ஒன்பது கோவில்களைச் சார்ந்து வாழ்பவைதான் நகரத்தார் குடும்பங்கள். ஒவ்வொரு கோவிலைச் சார்ந்த சில நூறு குடும்பங்களும் அடுத்த கோவிலைச் சார்ந்த குடும்பங்களிலிருந்துதான் பெண் கொடுத்து எடுப்பது வழக்கம். திருமணத்தின்போது மணமக்களுக்குக் கோவிலிலிருந்து மாலை வரும். இது, முறையான திருமணமாக இருந்தால்தான். சாதி விட்டு சாதி, ஒரே கோவில் சார்ந்த குடும்பங்களில் ஏற்படுகிற காதல் திருமணங்களுக்கு இந்தக் கோவில் மரியாதை கிடையாது என்பது தவிர, அவர்களுக்கு சமூக அங்கீகாரமும் கிடையாது! அதாவது, நகரத்தார் சமூகத்தில் அவர்களைச் சேர்ப்பதில்லை.

(இக்கட்டுரைஎழுதுகிற நேரத்தில்), நமது நிதியமைச்சர் ப. சிதம்பரம் நகரத்தார் சமூகத்தைச் சேர்ந்தவர்தான்! ஆனால் அவரது காதல் மனைவி நளினி வேறு சமூகத்தைச் சேர்ந்தவர் என்பதால், சிதம்பரம் திருமணத்தின்போது இந்தக் கோவில் மாலை வரவில்லை என்று செட்டிநாட்டில் நாம் சந்தித்த பிரமுகர்கள் சொன்னார்கள்.

செட்டிநாட்டுத் திருமணங்களில் சாப்பாடும் நகையும் ரொம்ப விசேஷம். திருமணம் செய்யும் குடும்பங்களின் வளத்தை ஊரார் அறியச் செய்ய இவ்விரு விஷயங்களும் பிரதானக் கருவிகளாகப் பயன்படுகின்றன. குறிப்பாக, நகைகள்.

‘கழுத்து உரு’ என்பது செட்டி நாட்டுத் திருமணங்களில் மணப் பெண்ணுக்கு அணிவிக்கப்படுகிற நகைகளுள் முக்கியமானது. இரு வரிசைகள் உள்ள இந்த நகையில் மொத்தம் 34 அங்கங்கள் உண்டு. கடைமணி, தாலி, தும்பு என வரிசையாகப் பெயர்கள் கொண்ட நகைகளை ஒன்றாக இரண்டு வரிசையில் கோத்து, பெண்ணின் கழுத்தில் அணிவிப்பார்கள்.

# திருமணங்கள்!

"கழுத்துரு என்னும் திருமாங்கலியக் கோவை, எல்லா அங்கங்களும் சேர்ந்து இருபத்திரண்டு வராகன் எடை (10 பவுன்)யில் அமைந்திருந்தது" என்று நகரத்தார் வரலாறு நூலில் மு. கதிரேசன் செட்டியார் எழுதுகிறார்.

ஆனால் இன்று இந்தக் கழுத்து உரு, 100 பவுன்களுக்குக் குறையாமல் செய்யப்படுகிறது என்கிறார்கள்!

இது மட்டுமே நூறு பவுன் என்றால், பிற நகைகளையும் சேர்த்து என்ன ஆகும் என்பது வாசகர்களின் யூகத்துக்கு விடப்படுகிறது!

மத்திய தர, கீழ் மத்திய தர நகரத்தார் வகுப்பிலும் கூட கழுத்து உரு கட்டாயம் உண்டு. அவரவர் வசதிக்கேற்ப பவுன் கூடும்; குறையும்! "நகை செய்ய வசதி இல்லாதவர்களுக்குக் கோவில் நகையே வாடகைக்குத் தரப்படும். திருமணத்தன்று உபயோகித்து விட்டுத் திருப்பித் தந்துவிட வேண்டும்!" என்றார் எம். அழகப்பன். செட்டிநாட்டுக் குடும்பங்களின் பரம்பரை சொத்தாகக் கருதப்படுவது இந்தக் கழுத்து உரு.

இன்றைக்கு, ஒரு நகரத்தார் குடும்பத் திருமணச் செலவு என்பது குறைந்தது இரண்டு லட்சம் தொடங்கி அவரவர் வசதிக்கேற்ப, ஐம்பது லட்சம் வரை கூடச் செல்வதுண்டு என்கிறார்கள்.

நகைகளை இவர்கள் மொத்தமாகக் கடைகளில் வாங்குவதில்லை. பெரும்பாலும் பொற்கொல்லர்களைப் பிரத்தியேகமாகத் தருவித்து, தம் விருப்பப்படி செய்யச் சொல்வதே வழக்கம்.

நகரத்தார் சமூகத்தில் வரதட்சணையை 'ஸ்ரீதனம்' என்கிறார்கள். இது கட்டாயமில்லை என்றாலும் இந்த 'ஸ்ரீ தனம்' இல்லாமல் திருமணங்கள் இல்லை எனலாம்.

முன்பு ரூ. 2,500, 3,500 என ஸ்ரீதனம் வழங்கப்பட்டது போக, இப்போது ஒன்றரை, இரண்டு லட்சங்களுக்குக் குறைவில்லை என்கிறார்கள்.

"புதிதாகத் திருமணமாகிறவர்கள், தொழில் துறையில் தம்மை ஸ்திரப்படுத்திக் கொள்ளவும் நஷ்டம் வந்தால் துவண்டு போகாமல் இருக்கவும், பெண்ணின் பெற்றோர், தம் மகளின் எதிர்கால மகிழ்ச்சிக்காகச் செய்யும் காரியம் இது. இந்தத் தொகை இப்போதெல்லாம் நேரடியாகத் தரப்படாமல் ஃபிக்ஸெட் டெபாஸிட் சர்ட்டிஃபிகேட்டுகளாக வழங்கப்படுகின்றன" என்றார்கள், நாம் சந்தித்த பல செட்டி நாட்டுப் பெரியவர்கள்.

நகரத்தார் சமூகத்தில் முன்னின்று திருமணம் நடத்துபவர்கள், பெற்றோர் அல்ல! மாமாக்கள் தாம்! மணமகன், மணமகளின் தாய் மாமன்கள் இருவரும் சிவப்புப் பட்டு உடுத்தி கன்னிகாதானம் செய்வார்கள்.

'வேவு' என்றொரு சடங்கு உண்டு. சீர் கொண்டுவரும் சடங்கு. இதில் 'மாமா' செய்வதற்கு 'மாம வேவு' என்றே பெயர்!

திருமணம் முடிந்ததன் அத்தாட்சியாக இரு தரப்புப் பெற்றோரும் கோவில் டாக்குமெண்டில் கையெழுத்துப் போடும் 'இசைவுப் பிடிமானம்', திருமணத்தில் கலந்து கொண்டவர்கள், கலந்து கொண்டதன் சாட்சியாக ரூ. 1, ரூ. 2 என 'மொய்' எழுதும் 'பணமெழுதுதல்' என செந்தமிழ்ப் பெயரில் பல சடங்குகள் உண்டு.

ஒரு விஷயம் தெரியுமா? பிற சமூகத்தார் போல, நகரத்தார் சமூகத்தில் பெண்ணுக்குக் காலில் 'மெட்டி' அணிவிப்பது கணவன் அல்ல! மாமியார்தான்!

"சீர் வரிசைதான் இப்போதெல்லாம் அதிகமாகி விட்டது. சாதாரண மத்திய தர வகுப்பில் கூட மாப்பிள்ளைக்கு துணிமணிகள் தவிர, நகைகள் தவிர ஸ்கூட்டர், கலர் டீ.வி., ஃப்ரிட்ஜ் எல்லாம் சீரில் வைக்க வேண்டும் என்று புதிய மரபை உருவாக்கி விட்டார்கள்! மிகச் சாதாரணக் குடும்பத்தில் கூட இப்போதெல்லாம் 10 - 15 லட்சம் திருமணச் செலவென்பது சர்வசாதாரணமாகி விட்டது!" என்றார் அழகப்பச் செட்டியார் என்ற செட்டி நாட்டுக்காரர்!

— ரம்யா



அட்டையிலும் இங்கும் : சமீபத்தில் செட்டிநாட்டு இளவரசியான, எம்.ஏ.எம். ராமசாமி செட்டியாரின் புதுமருமகள் கீதா. வண்ணப்படம் : செந்தில்

# 10 நான் உன்னை

**பட்டுக்கோட்டை பிரபாகர்**

## காதல் டைரிக் குறிப்பு:

**வார்த்தைப் பிழை, வாக்கியப் பிழை, இலக்கணப் பிழை என்று எத்தனை இருந்தாலும் இருபதாவது முறை படித்த போதும் இனிமையாகத்தான் இருந்தது அந்த காதல் கடிதம்.**

சந்துரு ஆடிவிட்டு ஸ்ட்ரைக்கரை அரவிந்த் பக்கம் தள்ளினான்.

"டேய்! என்ன யோசனை? நான் ஆடிட்டேன்."

வேறு சிந்தனையில் இருந்த அரவிந்த் சுதாரித்து கேரம் போர்டில் எந்தக் காய் பாக்கெட் செல்லத் தோதாக இருக்கிறது என்று கோணம் பார்த்தான்.

சந்துருவின் வீட்டு மொட்டை மாடியில் சிற்றுப் பந்தலுக்கடியில் போர்டுக்கு மட்டும் ஒரு தொங்கும் விளக்கமைத்து எதிரெதிர் நாற்காலிகளில் அவர்கள் அமர்ந்திருக்க சில்லென்று காற்று அவர்களின் உடைகளுக்குள் ஊடுருவியது. நட்சத்திர வானத்தில் நீளமாக புகைக்கோடு போட்டபடி ஒரு ஜெட் விமானம் கடந்து கொண்டிருந்தது. வாகன சத்தங்கள் கரத்திழந்திருந்தன.



# சுவாசிக்கிறேன்

சந்துருவின் மனைவி விமலா இரண்டு பேருக்கும் டீ எடுத்து வந்து, "இன்னிக்கு என்ன பந்தயம் வெச்சிருக்கீங்க?" என்றாள் சிரித்தபடி.

"ஒரு பாக்கெட் சிகரெட்" என்று விட்டு ஒன்றைப் பற்ற வைத்துக் கொண்டான் சந்துரு.

ட்ரேயிலிருந்து டீ கோப்பையை எடுத்து இருவர் கைகளிலும் கொடுத்தபடி, "பந்தயம் வெச்சுக்கறதுக்கு வேற நல்ல பொருள் எத்தனை இருக்கு?" என்றாள், "அரவிந்த், நீங்க இவரைக் கண்டிக்கிறதே இல்லையா?" ஸ்டூல் மேல் இருந்த தண்ணீர் ஜக்கையும், செல் போனையும் கீழே எடுத்து வைத்து விட்டு அமர்ந்து கொண்டாள்.

"எதைக் கண்டிக்கச் சொல்றீங்க?" என்றான் அரவிந்த் டீயைப் பருகியபடி.

"இப்பல்லாம் இவரை கைல சிகரெட் இல்லாம பார்க்கவே முடியறதில்லை. முந்தி வெளில மட்டும்தான் பிடிச்சிருந்தார். ரெண்டு வருஷமா வீட்லயே பிடிக்க ஆரம்பிச்சிட்டார், வீட்ல எல்லா ரூம்லயும் ஆஷ்ட்ரே இருக்கு. டாய்லெட்லகூட ஒண்ணு வெச்சிருக்கார்."

"கண்டிக்க வேண்டிய விஷயம்தான். எனக்குத் தகுதி இல்லையே. நானும் பிடிச்சிட்டிருக்கேனே."

"நீங்க ஒரு நாளைக்கு எத்தனை பிடிக்கிறீங்க?"

"அஞ்சி இல்லைன்னா ஆறு."

"பரவால்லையே. இவரு அஞ்சி பாக்கெட்டில்ல ஊதறார்."

"ஏன்டா சந்துரு, அவ்வளவாப் பிடிக்கிறே?"

"அவதான் சொல்றான்னு நீயும் கேக்கறியே. மிகைப்படுத்திச் சொல்றாப்பா. ஷூட்டிங் இல்லைன்னா ஜஸ்ட் மூணு தான்."

"வெறும் மூணு இல்லை, மூணு பாக்கெட்! ராத்திரி எல்லாம் எப்படி இருமறார் தெரியுமா?"

சந்துரு இருமிக்காட்டு, "இப்படி..." என்றான்.

"கிண்டலா இருக்கா? படிப்படியா குறைச்சி நிறுத்தியாகணும். இல்லே?"

"இல்லே?"

"நான் பிடிக்க ஆரம்பிச்சிடுவேன்" என்றாள் விமலா.

"இந்த யோசனை நல்லாருக்கே. மொத்தமா ஹோல்சேல்ல வாங்கிடலாமா" என்ற சந்துருவை செல்லமாகத் தலையில் குட்ட, அந்த அசைவில் கை அசைந்து குறி தவறியது.

"சரி, நான் கீழே போறேன். நிறைய வேலையிருக்கு" என்று காலிக் கோப்பைகளை எடுத்துக் கொண்டு படியிறங்கிச் சென்றாள் விமலா.

"ஏன் அரவிந்த் இப்படி டல்லடிக்கிறே? இன்னிக்கு உனக்கு ஆட்டத்தில கவனமே இல்லை. உன் ப்ராப்ளம் என்ன?"

அரவிந்த் விளையாடுவதை நிறுத்தினான்.

"போதும் சந்துரு. லெட் அஸ் நாட் ப்ளே. மூடு இல்லை. பிருந்தான்னு ஒரு பொண்ணைப் பத்திச் சொன்னேன்ல."

"யெஸ். நீயா சொல்வேன்னுதான் நான் கேக்கலை, சொல்லு, என்ன, லவ்வா?"

"தெரியலை சந்துரு. எனக்கு அவளைப் பிடிச்சிருக்கு. பார்க்கணும்னு மனசு துடிக்குது. அவளோட பேசறப்போ நான் இயல்பா இல்லை. எனக்குள்ளே ஹீலியம் கேஸ் நிரப்பின மாதிரி எங்கயோ மிதக்கறேன். அவ மனசுல இடம் பிடிக்கணும்னு போலியா வாக்குறுதி கொடுக்கறேன். அவளோட பேசிட்டுப் பிரியறப்போ ரொம்ப வருத்தமா இருக்கு. டு பீ வெரி ஃப்ராங்க்... உன்கிட்ட சொல்றதுக்கென்ன... மனசுக்குள்ளே அவளை பல தடவை முத்தம் கொடுத்துட்டேன்."

"இதுக்குப் பேர் லவ் இல்லாம வேற என்னவாம்?"

"யெஸ். நான் அவளை நேசிக்கிறேன். அதான் உண்மை. மத்தவங்க காதலைக் கேக்கறப்போ, படிக்கிறப்போ, பார்க்கறப்போ ஒரு கிளுகிளுப்பு மனசுல ஏற்படுமே, அதையே அனுபவமா உணர்றப்போ பத்து, இருபது மடங்கு அதிகமா இருக்குடா அந்த தவிப்பான சந்தோஷம்."

சந்துரு அவன் கையைப் பற்றிக்

குலுக்கினான்.

"கங்கிராட்ஸ் அரவிந்த். ஆல் தி பெஸ்ட். அவ எப்படி? அவளும் உன்னை லவ் பண்ணறாளா?"

"தெரியலை சந்துரு. என்மேல நல்ல மரியாதை வெச்சிருக்கா. பண்பாட்டோட பழகறா, தனக்கு ஒரு காரியம் ஆகணுங்கற நோக்கத்திலதான் முதல்ல பேசினா. அப்புறம் இயல்பா ஃப்ரெண்ட்லியா பேசினா."

"அவ மனசுல என்ன இருக்குன்னு உன்னால புரிஞ்சிக்க முடியலையா?"

"இப்பதான் ரெண்டு மூணு தடவைதான் நாங்க சந்திச்சிப் பேசியிருக்கோம். என்னை மாதிரியே அவ மனசுல என்மேல ஒரு ஈர்ப்பு ஏற்பட்டிருக்கும்னு நான் எதிர்பார்க்கறதே தப்புடா, ஆனா அவளை எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு. என் காதலை அவளுக்குப் புரிய வெச்சி, அவ அதை ஏத்துக்கணும்னு நான் ஆசைப்படறேன்."

"ரொம்ப தயங்கிட்டு இருக்காதே அரவிந்த். இந்த ரெண்டு மூணு சந்திப்புலயே அவளைப் பத்தி நீ இவ்வளவு உருகிப் பேசிட்டிருப் பேன்னு அவளுக்குத் தெரியாதில்லையா? அதே மாதிரி அவளும் அவ ஃப்ரெண்டு யார்கிட்டயாவது உன்னைப் பத்தி உருகிப் பேசிட்டிருக்கலாமில்லையா? ஓபனா வெளிப்படுத்திடு."

"அதுக்கு இது சரியான நேரம் இல்லை சந்துரு."

"சரி, மனசுல காதல் வந்திருக்குன்னா முகத்தில வெளிச்சம் வரணுமே. ஏன் இருட் டடிக்குது?"

"எங்கக்கா மூலமா பிருந்தாவுக்கு ஒரு காரியம் ஆகணும்னு சொன்னேன் இல்லையா, அது சம்பந்தமா அக்காவைப் பார்த்துப் பேசினேன். அவ சொன்ன ஒரு கண்டிஷ னாலதான் மூட்- அவுட் ஆகியிருக்கேன்."

"என்ன சொன்னாங்க உங்கக்கா?"

சந்துரு ஒரு புது சிகரெட் எடுக்க, அவன் கையைப் பிடித்துத் தடுத்தான் அரவிந்த்.

"இப்பத்தானே உன் வைஃப் அவ்வளவு தூரம் ஃபீல் பண்ணி சொல்லிட்டுப் போனாங்க. கொஞ்சம் குறைச்சுக்கயேண்டா!"

"சரி. பத்து நிமிஷம் கழிச்சி அடிக்கிறேன்" என்று மறுபடி அதை பாக்கெட்டுக்குள் போட்டுவிட்டு, "ம். சொல்லு" என்றான்.

"பிருந்தா மேனேஜரா வேலை பார்க்கற நிறுவனத்துக்கு கொடுத்த ஏஜண்டு உரிமையை ரத்து செய்யப் போறா எங்கக்கா. 'இத்தனை நாள் நிர்வாகக் கோளாறு இருந்திச்சி, அதெல்லாம் சரி செய்துட்டேன். இன்னும் ஒரு வருஷம் டயம் கொடுத்துப் பாருங்க, உங்க எதிர்பார்ப்புப்படி இயங்கலைன்னா அப்புறம் ரத்து செய்யுங்க'ன்னு சொல்றா பிருந்தா."

"நியாயமான கோரிக்கைதானே?"

"நியாயம்தான். எங்கக்காவோட பிடிவாதம் பத்திதான் கதை கதையா உன்கிட்டச் சொல்லிருக்கேனே. இப்ப லஞ்சம் வேற வாங்க ஆரம்பிச்சுட்டாப் போலிருக்கு. அம்பதாயிரம் கொடுத்தா ஏஜண்டு உரிமையை ரத்து செய் யாம இருக்கேன்னு பியூன் மூலமா சொல்லி விட்டிருக்கா."

"ரொம்ப அசிங்கமா இருக்கேப்பா."

"உனக்கும் எனக்கும் அசிங்கமாப் படுது. அக்கா மாதிரி எத்தனையோ பேருக்கு லஞ் சம்ங்கறதுதான் 'பார்ட் ஆஃப் தி லைஃப்' ஆயி டுச்சே. நான் கேட்டதுக்கு, நான் ஒண்ணும் லஞ்சம் கேக்கலைன்னு சமாளிக்கிறா. கடைசியா ஒரு கண்டிஷன் சொன்னா, ஆஃப்செட் பிரிண்டிங் பிரஸ் ஆரம்பிக்கிற யோசனையை எல்லாம் மூட்டை கட்டி வெச்சிட்டு ஒரு கன்ஸ்ட்ரக்ஷன் கம்பெனில சூபர்வைசர் வேலைக்கு என்னைப் போகச் சொல்றா. அதுக்கு நான் சம்மதிச்சா, பிருந்தா வோட கம்பெனி ஏஜென்சி உரிமையை ரத்து செய்யாம இருக்காளாம்."

"நீ மூட்-அவுட் ஆனது நியாயம்தான். இப்ப என்ன முடிவு செய்யப் போறே நீ?"

அரவிந்த் எழுந்து பந்தலுக்கு வெளியே மெதுவாக நடந்து கைப்பிடிச் சுவரில் சாய்ந்தபடி நின்று கொண்டு சற்று நேரம் நிலாவை உரசும் மேக உதிரிகளைப் பார்த்து விட்டுப் பெருமூச்சு விட்டான்.

"குழப்பமா இருக்கு சந்துரு. ஐ லவ் பிருந்தா, இந்த ஏஜன்சி ரத்தானா அவளுக்கும் இன்னும் எட்டு பேருக்கும் வேலை வேண்டும். எப்படி யும் எங்கக்கா மூலமா காரியம் சாதிச்சுட றேன்னு சத்தியம் செய்யாத குறையா அவ ளுக்கு வாக்குக் கொடுத்துத் தொலைச் சுட்டேன். கண்டிப்பா நான் இந்தச் சிக்கலை சரி செஞ்சிடுவேன்னு அவ நம்பிக்கிட்டு இருக்கா."

சந்துருவும் எழுந்து அவனருகில் வந்து நின்று கொண்டு, "இப்போ உடனடியா உங்கப்பா உனக்குப் பண உதவி செய்யறதா இல்லை. ரெண்டு வருஷம் கழிச்சிதான்

"நேத்திக்கு உனக்கு இ.சி.ஜி. எடுத்துப் பார்த் ததுலே அதெப்படி உனக்கு காதல் வியாதின்னு டாக்டர் உறுதியா சொன்னாரு?"

"இ.சி.ஜி.முழுக்க ஹேமா.. ஹேமா... ஹேமான்னு பிரிண்ட் ஆயிருந்ததாம்!"

– வி.எஸ். கணேசன்



தருவேன்னு தீர்மானமா சொல்லிட்டார். ஏற்கெனவே நீ ஒரு தடவை பிஸினெஸ் ஆரம்பிச்சி நஷ்டப்பட்டதால நீ மறுபடி பிஸினெஸ் ஆரம்பிக்கிறது உங்கண்ணன், அக்கா யாருக்குமே பிடிக்கலை. அவங்க எல்லாம் ஆசைப்படற மாதிரி ரெண்டு வருஷத்துக்கு நீ வேலைக்குப் போறதில என்ன இடிக்குது அரவிந்த்?" என்றான்.

"மத்தவங்க எல்லாம் இதே பாட்டைப் பாடிக்கிட்டிருக்கிறப்ப நீ ஒருத்தன்தான் என்னைப் புரிஞ்சுக்கிட்டு லோன் ஏற்பாடு பண்ணித் தர்றேன்னு சொல்லி என்கரேஜ் செஞ்சே. இப்ப நீயும் அவங்க கட்சிக்கு மாறிட்டியா?"

"பார்த்தியா? அந்தப் பொண்ணை லவ் பண்றே, அவளுக்கு உதவணும்னு நினைக்கறே. நீ செய்ற இந்த உதவி உன் மேல அவளுக்கு காதலை ஏற்படுத்தும்னு நம்பறே, அதனால தான் என்ன முடிவெடுக்கறதுன்னு புரியாம குழம்பறே! உன் மனசில தெளிவு இருந்தா நான் இப்படி யோசனை சொல்லிருக்க மாட்டேன். நீ தப்பா எடுத்துக்கலைன்னா சீரியஸா சில கேள்விகள் கேக்கட்டுமா?"

"கேளுடா, என்ன பீடிகை?"

"உடனடியா ஆஃப்செட் பிரஸ் ஆரம்பிக்கணும்-உங்கப்பா உதவி இல்லாம. அதானே உன் திட்டம்?"

"ஆமாம்."

"நீ பார்த்து வெச்சிருக்கிற செகண்ட் ஹாண்ட் மிஷின், இடத்துக்கு அட்வான்ஸ் எல்லாம் சேர்த்து உனக்கு எவ்வளவு தேவைப்படுது?"

"பத்து லட்சம் வேணும்."

"எல்லாமே கடன்தான் வாங்க வேண்டிய சூழ்நிலையா?"

"ஆமாம், தனிப்பட்ட முறையில என்கிட்ட என்ன இருக்கு?"

"பேங்க் லோன் ஏற்பாடு பண்ண முடியாதா? வட்டி கம்மியா இருக்குமே."

"கரெக்ட்டு, செகண்ட் ஹாண்ட் மிஷின் மேல கடன் கொடுக்கறதில தாமதமாகும். ப்ராஜெக்ட் வொர்க் பண்ணித் தரணும். கோ-லேட்டரல் செக்யூரிட்டி கேப்பாங்க. நான் நினைக்கிற ஸ்பீடுக்கு நடக்காது. எனக்கு உடனே பணம் வேணும். தாமதமானா நான் பார்த்து வெச்சிருக்கிற மிஷின் எனக்குக் கிடைக்காமப் போயிடும். அதனால்தான் வட்டி அதிகமா இருந்தாக்கூட பரவால்லைன்னு உன்னை சேட்டு மூலமா ஏற்பாடு பண்ணித் தரச் சொன்னேன். பாசாங்கு இல்லாமல சொல்லு சந்துரு. எனக்கு கடன் ஏற்பாடு பண்ணித் தர்றதுக்கு உனக்குத் தயக்கமா இருக்கா?"

"இடியட் மாதிரி பேசாதே! அவாய்ட் பண்றதுக்காக உன்னை கேள்வி கேக்கலை. அக்கறையோடத்தான் கேக்கறேன். அதிக வட்டி கொடுத்தா உனக்குக் கட்டுப்படி யாகுமா?"

"வொர்க்-அவுட் பண்ணிப் பார்த்துட்டேன். முப்பத்தாறு பர்செண்ட் வரைக்கும் வட்டி கொடுத்தாலும் என்னால தொழிலை லாபகரமா நடத்த முடியும். இந்தத் தொழில்ல பிரிண்ட்டிங் டெக்னாலஜி படிச்சவங்க கம்மியாத்தான் இருக்காங்க. என்னால பிரிண்ட்டிங் காஸ்ட்டை பல வகைகள்ல குறைக்க முடியும். அதனால குறைஞ்ச கொட்டேஷன் கொடுத்து பல ஆர்டர்ஸ் பிடிப்பேன். அஞ்சி வருஷத்துல என்கிட்ட அஞ்சி மிஷின் இருக்கற அளவுக்கு என்னால கொண்டு வர முடியும்டா."

"நீ இவ்வளவு நம்பிக்கையா பேசறப்போ எனக்கு சந்தோஷமா இருக்கு அரவிந்த்."

"இப்படியெல்லாம் ஆர்வமா திட்டம் வெச்சிக்கிட்டிருக்கிறப்போ எப்படிடா என் ப்ராஜெக்ட்டைத் தள்ளி வெச்சிட்டு மாச சம்பளத்துக்கு வேலைக்குப் போக முடியும். அப்பாவுக்கு என் திறமை மேல நம்பிக்கை இல்லை. ஆனா அண்ணனுக்கும் சரி, அக்காவுக்கும் சரி, நான் அவங்களுக்கும் மேல வளர்ந்து பெரிய ஆளாயிடப் போறேன்னு கவலை! அதனால எனக்கு நல்லது செய்யற மாதிரி என்னை வேர்லயே கட் பண்ணப் பார்க்கறாங்க!"

"நீ வளர்ந்து பெரிய ஆளானா சந்தோஷம்தானே அவங்களுக்கு. எதுக்குக் கவலைப் படணும்?"

"உன் நாட்டு யுத்தம் மாதிரி இது ஒரு உள் வீட்டு யுத்தம்! வெளில தெரியாத ரகசிய யுத்தம். எனக்குத்தான் அவங்களைத் தெரியும்."

"ரைட்டுப்பா. இது கொஞ்சம் டெலிகேட்டான மேட்டர், என்னதான் நான் வெளில இருந்து ஆயிரம் பேசினாலும், உன் மனசுக்குத்தான் தெரியும் நல்லது, கெட்டது!"

"நான் தீர்மானிச்சுட்டேன் சந்துரு. என் அக்காவோட கண்டிஷனை நான் ஏத்துக்கப் போறதில்லை" என்றான் அரவிந்த்.

(தொடரும்)

# பொன்னியின் செல்வன்

## இருபதாம் அத்தியாயம்

## "முதற் பகைவன்!"

தக்க சமயத்தில் ஆந்தை செய்த உதவியை ஆழ்வார்க்கடியான் மனத்திற்குள் பெரிதும் பாராட்டினான். ஏனெனில், காட்டின் மத்தியில் கூடியிருந்த சதிகாரர்கள், சிற கடித்துக் கொண்டு உறுமிய ஆந்தையைப் பார்த்து அதனால் ஏற்பட்ட சத்தந்தான் என்று எண்ணிக் கொண்டார்கள். "அடே! இந்தக் கோட்டான் நம்மைப் பயப்படுத்தி விட்டது! வெட்டுடா அதை!" என்றான் ஒருவன். "வேண்டாம்! உங்கள் கத்திகளை வேறு முக்கியமான காரியங்களுக்குப் பத்திரப்படுத்தி வையுங்கள். நம் பகைவர்களைப் பூண்டோடு ஒழிப்பதற்குக் கூராக்கி வையுங்கள்! ஆந்தையும் கோட்டானும் நம் பகைவர்களல்ல; அவை நம் சினேகிதர்கள்! மனிதர்கள் சாதாரணமாய் உறங்கும் சமயங்களில் நாம் கண் விழித்திருக்கிறோம். நம்மோடு ஆந்தைகளும் கூகைகளும் கண் விழித்திருக்கின்றன!" என்றான் ரவிதாஸன் என்பவன். அவனுடைய பேச்சைக் கேட்டுக் கொண்டே மெள்ள மெள்ள அடிமேல் அடியெடுத்து வைத்து நடந்து திருமலையப்பன் ஒரு பெரிய மருதமரத்தின் சமீபத்தை அடைந்தான். நூறு வயதான அந்த மரத்தின் பெரிய வேர்கள் நாலாபுறத்திலும் ஓடியிருந்தன. ஓர் ஆணிவேருக்கும் இன்னோர் ஆணிவேருக்கும் மத்தியில் தரையிலும் இடைவெளியிருந்தது; மரத்தின் அடிப் பக்கத்திலும் நல்ல குழிவு இருந்தது. அத்தகைய குழிவு ஒன்றில் மரத்தோடு மரமாகச் சாய்ந்து கொண்டு ஆழ்வார்க்கடியான் நின்றான்.

"தஞ்சாவூர் இராஜ்யத்தின் பொக்கிஷம் இருக்கும் வரையில் நமக்கு வேண்டிய பொருளுக்குக் குறைவு இல்லை.

அமரர் கல்கி நூற்றாண்டு

100

கல்கி கலெக்ஷன்

அமரர் கல்கி

எடுத்த காரியத்தை முடிக்க வேண்டிய நெஞ்சுத் துணிவு வேண்டும். காரியம் முடிகிற வரையில் வெளியில் தெரியாதபடி இரகசியத்தைப் பேணும் சக்தி வேண்டும்! நமக்குள் இரண்டு பிரிவாகப் பிரிந்து கொள்ள வேண்டும். ஒரு பிரிவினர் உடனே இலங்கைக்குப் போக வேண்டும். இன்னொரு பிரிவினர் தொண்டை மண்டலம் சென்று காரிய சித்திக்குத் தக்க சமயத்தை எதிர்பார்த்திருக்க வேண்டும். ஏறக்குறைய இரண்டு காரியங்களும் ஒரே சமயத்தில் முடிய வேண்டும். ஒரு பகைவனை முடித்த பிறகு அவகாசம் கொடுத்தால் இன்னொரு பகைவன் ஜாக்கிரதையாகிவிடுவான்! அதற்கு இடமே கொடுக்கக் கூடாது. தெரிகிறதா? உங்களில் இலங்கைக்குப் போக யார் யார் ஆயத்தமாயிருக்கிறீர்கள்?" என்றான் ரவிதாஸன்.

"நான் போகிறேன்!", "நான்தான் போவேன்!" என்று பல குரல்கள் ஒரே சமயத்தில் கேட்டன.

"யார் போகிறது என்பதை அடுத்த முறை பாண்டிய நாட்டில் கூடித் தீர்மானிக்கலாம்! அதுவரைக்கும் இங்கே செய்ய வேண்டிய ஏற்பாடுகள் இன்னும் சில இருக்கின்றன!" என்றான் ரவிதாஸன்.

"ஈழத்துக்கு எந்த வழி போவது நல்லது?" என்று ஒருவன் கேட்டான்.

"கோடிக்கரை வழியாகப் போகலாம், கடலைக் கடப்பதற்கு அது நல்ல வழி. ஆனால் இங்கிருந்து கோடிக்கரை வரையில் செல்வது கடினம். நெடுகிலும் பகைவர்கள். ஆங்காங்கே ஒற்றர்கள். ஆகையால், சேதுவுக்குச் சென்று அங்கே கடலைத் தாண்டி மாதோட்டத்துக்கருகில் இறங்குவதுதான் நல்லது. இலங்கை போகிறவர்கள் சமயத்தில் படகு வலிக்கவும், கட்டுமரம் தள்ளவும், கடலில் நீந்தவும் தெரிந்தவர்களாயிருக்க வேண்டும். இங்கே யாருக்கு நீந்தத் தெரியும்?"

"எனக்குத் தெரியும்", "எனக்கும் தெரியும்" என்ற குரல்கள் எழுந்தன.

"முதலில், இலங்கை மன்னன் மகிந்தனைக் கண்டு பேசிவிட்டுப் பிறகு காரியத்தில் இறங்க வேண்டும். ஆகையால் ஈழத்துக்குப் போகிறவர்களில் ஒருவருக்காவது சிங்கள மொழி தெரிந்திருக்க வேண்டும். ஆ! நமது சோமன் சாம்பவன் இன்னும் வந்து சேரவில்லையே? யாராவது அவனை இன்றைக்குப் பார்த்தீர்களா?"

"இதோ வந்து கொண்டிருக்கிறேன்!" என்று ஆழ்வார்க்கடியானுக்கு மிக்க சமீபத்திலிருந்து ஒரு குரல் கேட்டது. அடியான் மேலும் மரத்தோடு மரமாக ஒட்டிக் கொண்டான். அடாடா! இந்தப் பாழும் உடம்பு இப்படிப் பெருத்துவிட்டது எவ்வளவு சங்கடமாயிருக்கிறது!

புதிதாக இரண்டு பேர் அக்கூட்டத்தில் வந்து சேர்ந்து கொண்டார்கள்.

ஆழ்வார்க்கடியான் தன் முகத்தில் ஒரு சிறு பகுதியை மட்டும் மரத்துக்கு வெளியே நீட்டி எட்டிப் பார்த்தான். புதிதாக வந்தவர்கள் இருவரும் கொள்ளிடக் கரையில் அரச மரத்தடியில் சந்தித்துப் பேசியவர்கள்தான் என்று தெரிந்து கொண்டான்.

புதுமனிதர்களைக் கண்டதும் ரவிதாஸன், "வாருங்கள்! வாருங்கள்! ஒருவேளை ஏதாவது உங்களுக்கு ஆபத்து வந்து விட்டதோ, வராமலே இருந்து விடுவீர்களோ என்று பயந்தேன். எங்கிருந்து எந்த வழியாக வந்தீர்கள்?" என்றான்.

"கொள்ளிடக் கரையோடு வந்தோம். வழியில் ஒரு கூட்டம் நரிகள் வளைத்துக் கொண்டன. நரிகளினிடம் சிக்காமல் தப்பித்து வருவதற்கு நேரம் ஆகிவிட்டது!" என்றான் சோமன் சாம்பவன்.

"புலிக்கும், சிங்கத்துக்கும் பயப்பட்டால் பொருள் உண்டு. நரிக்குப் பயப்படுகிறவர்களால் என்ன காரியத்தைச் சாதித்துவிட முடியும்?" என்றான் அந்தக் கூட்டத்துக்கு முன்னமே வந்திருந்தவர்களில் ஒருவன்.

"அப்படிச் சொல்லாதே, அப்பனே! சிங்கம், புலியைக் காட்டிலும் நரி பொல்லாதது! ஏனெனில், சிங்கமும் புலியும் தனித்தனியே பாய்ந்து வரும் விரோதிகள். அவற்றோடு சண்டையிட்டுச் சமாளிக்கலாம். ஆனால் நரிகளோ கூட்டங் கூட்டமாக வருகின்றன. ஆகையால், அவற்றுக்குப் பலம் அதிகம். சோழநாட்டு நரிகள்

பெருங்கூட்டமாக வந்ததினால்தானே நம் ஒப்பற்ற மன்னாதி மன்னன் தோற்கவும் உயிர் துறக்கவும் நேர்ந்தது? இல்லாவிட்டால் அவ்விதம் நேர்ந்திருக்குமா?"

''அந்த நரிக்குலத்தை அடியோடு அழிப்போம்! பூண்டோடு நாசம் செய்வோம்!'' என்று ஆங்காரத்துடன் கூவினான் சோமன் சாம்பவன்.

உங்களுடைய செய்தி என்ன? நமது இடும்பன்காரி ஏதாவது செய்தி கொண்டு வந்திருக்க வேண்டுமே?'' என்றான் ரவிதாஸன்.

''ஆம்; கொண்டுவந்திருக்கிறார். கேளுங்கள்! அவரே சொல்லுவார்!''



"இதோ அதற்கு வேண்டிய உபகரணங்கள்!" என்று ரவிதாஸன் பொன் நாணயங்களின் குவியலைச் சுட்டிக் காட்டினான்.

சோமன் சாம்பவன் நாணயங்கள் சிலவற்றைக் கையில் எடுத்துப் பார்த்துவிட்டு, "ஆ! ஒரு பக்கம் புலி! இன்னொரு பக்கம் பனை!" என்று சொன்னான்.

"சோழனுடைய பொன்; பழுவேட்டரையனுடைய முத்திரை. நான் சொன்னது சொன்னபடி நிறைவேற்றிவிட்டேன்.

இடும்பன்காரி சொல்லத் தொடங்கினான்: "தங்கள் கட்டளைப்படியே சம்புவரையர் மாளிகையில் பணியாளாக நான் அமர்ந்து வேலை பார்த்து வருகிறேன். அதனுடைய பலன் நேற்றிரவுதான் சித்தித்தது. நேற்று சம்புவரையர் மாளிகையில் ஒரு பெரிய விருந்து நடந்தது.

பெரிய பழுவேட்டரையர், வணங்காமுடி முனையரையர், மழபாடி மழுவரையர் முதலிய பலர் வந்திருந்தார்கள். குரவைக் கூத்தும் வேலனாட்டமும் நடைபெற்றன. வேலனாட்டம் ஆடிய தேவராளனுக்குச் சந்நதம் வந்து குறி சொன்னான். அவன் சொன்னது நம்முடைய நோக்கத்துக்கு அனுசரணையாகவே இருந்தது. பழுவேட்டரையருடன் வந்த மூடு பல்லக்கில் அவருடைய இளையராணி வந்திருப்பதாக எல்லாரும் எண்ணியிருந்தார்கள். சுந்தர சோழ மகாராஜாவுக்கு உடல்நலம் சரியாயில்லையென்றும் அதிக நாள் உயிரோடிருக்க மாட்டாரென்றும் பழுவேட்டரையர் தெரிவித்தார். எல்லாருமாகச் சேர்ந்து அடுத்தபடி பட்டத்துக்கு வரவேண்டியவர் ஆதித்த கரிகாலர் அல்ல, மதுராந்தகத் தேவர் என்று முடிவு செய்தார்கள். ஆனால் மதுராந்தகத்தேவர் இதற்குச் சம்மதிப்பாரா என்று சிலர் கேட்டார்கள். 'அவர் வாயினாலேயே அதற்கு மறுமொழி கூறச் செய்கிறேன்' என்று சொல்லிப் பழுவேட்டரையர் மூடு பல்லக்கின் திரையைத் திறந்தார். அதற்குள்ளிருந்து மதுராந்தகத் தேவர் வெளி வந்தார்! பட்டம் கட்டிக் கொள்ளத் தமக்குச் சம்மதம் என்று அவர் தெரிவித்தார்..."

"இப்படிப் பெண் வேஷம் போடும் பராக்கிரமசாலிக்கு முடி சூட்டப் போகிறார்களாம்! நன்றாய்ச் சூட்டட்டும்; எல்லாம் நாம் எதிர்பார்த்தபடியேதான் நடந்துவருகிறது. இம்மாதிரி சோழ நாட்டிலேயே ஒரு குழப்பம் ஏற்படுவது நம்முடைய நோக்கத்துக்கு மிக உகந்தது. எது நேர்ந்தாலும், என்ன நடந்தாலும், நம்மை யாரும் சந்தேகிக்க மாட்டார்கள் அல்லவா? இடும்பன்காரி! மிக முக்கியமான செய்தி கொண்டு வந்திருக்கிறீர். ஆனால் இதெல்லாம் எப்படித் தெரிந்து கொண்டீர்? இதற்குச் சந்தர்ப்பம் எப்படி வாய்த்தது?'' என்று கேட்டான் ரவிதாஸன்.

''நடு ராத்திரியில் அவர்கள் சபை கூடியபோது வேறு யாரும் அருகில் வராதபடி பார்த்துக் கொள்ள என்னைக் காவலுக்கு அமர்த்தியிருந்தார்கள். காவல் புரிந்து கொண்டே என் காதுகளையும் கண்களையும் உபயோகப்படுத்திக் கொண்டிருந்தேன்."

''அப்படி உபயோகப்படுத்தியதில் வேறு ஏதாவது தெரிந்ததா?"

"தெரிந்தது. அந்த நள்ளிரவுக் கூட்டத்தில் நடந்ததையெல்லாம் இன்னொரு வேற்று மனிதன் கோட்டை மதில் சுவர் மேலிருந்து கவனித்துக் கொண்டிருந்தான்!"

"ஆஹா! அவன் யார்?"

''முன் குடுமி வைத்திருந்த ஒரு வைஷ்ணவன்....''

"ஆகா! அவன்தானா? அப்படி நான் நினைத்தேன்! அவனை நீர் என்ன செய்தீர்? சம்புவரையரிடம் பிடித்துக் கொடுக்கவில்லையா?"

''இல்லை. ஒரு வேளை அவன் நம்மவனாயிருக்கலாம் என்று நினைத்து விட்டேன். நீங்களே அனுப்பி வைத்தீர்களோ என்று எண்ணினேன்."

"பெரிய பிசகு செய்து விட்டீர். அவன் நம்மவன் அல்ல. கட்டையாய்க் குட்டையாய் இருப்பான். சண்டைக்காரன். பெயர் திருமலையப்பன்; 'ஆழ்வார்க்கடியான்' என்று சொல்லிக் கொள்வான்."

"அவனேதான். நான் செய்த பிசகை இன்று மத்தியானம் நானே உணர்ந்து கொண்டேன். அவன் நம் ஆள் அல்லவென்று தெரிந்தது."

"அதை எப்படி அறிந்தீர்?"

"நேற்று இரவு கந்தன்மாறனின் பாலிய நண்பன் ஒருவனும் கடம்பூர் மாளிகைக்கு வந்திருந்தான். அவனுக்கும் பழுவேட்டரையர் கூட்டத்துக்கும் சம்பந்தம் ஒன்றுமில்லையென்று தெரிந்தது. அவன் அங்கேயே மூலையில் படுத்து, நிம்மதியாகத் தூங்கினான். இன்று காலையில் சின்ன எஜமானர் தம் சிநேகிதனைக் கொண்டு விடக் கொள்ளிடக்கரை வரையில் வந்தார். அவர் வரப்போவதை அறிந்து அவர் முன்னால் அடிக்கடி நான் போய் நின்றேன். என்னையும் வரச் சொன்னார். அவர் கொள்ளிடத்தின் வட கரையோடு திரும்பிவிட்டார். என்னைத் தென்கரைக்கு வந்து அவ்வாலிபனுக்கு ஒரு குதிரை சம்பாதித்துக் கொடுத்து விட்டுத் திரும்பும்படி சொன்னார் அங்கிருந்து குடந்தைக்குப் போய் என் அத்தையைப் பார்த்து விட்டு வருவதாகச் சொல்லிவிட்டு வந்தேன். அதனால்தான்

சந்தேகத்துக்கு இடமின்றி இங்கே வர முடிந்தது."

"சரிதான். சரிதான்! அந்த வீர வைஷ்ணவனைப் பற்றி எவ்விதம் தெரிந்து கொண்டீர்?"

"கொள்ளிடத்தில் படகு புறப்படும் சமயத்துக்கு அந்த வீர வைஷ்ணவன் வந்து படகில் ஏறிக் கொண்டான். அவன் கந்தன் மாறனின் சிநேகிதனோடு பேசிய சில காரமான வார்த்தைகளிலிருந்து எனக்குச் சிறிது சந்தேகம் உதித்தது, அவனும் நம்மைச் சேர்ந்தவனோ என்று. மேலும் கொள்ளிடத்தின் தென்கரையில் அவன் எனக்காகக் காத்துக் கொண்டிருந்ததாகத் தோன்றியது. நம்முடைய அந்தரங்க சமிக்ஞையைச் செய்து காட்டினேன். ஆனால் அவன் புரிந்து கொள்ளவில்லை. அதன் பேரில் அவன் நம்மவன் அல்ல என்று தீர்மானித்தேன்..."

"நீர் செய்தது பெரும் பிசகு! முன்பின் தெரியாதவர்களிடம் நம் சமிக்ஞையைச் செய்து காட்டக் கூடாது. நண்பர்களே! இதைக் கேளுங்கள். நம்முடைய காரியம் காஞ்சிபுரத்தில் இருக்கிறது! இலங்கையிலும் இருக்கிறது. இந்த இரண்டு இடங்களிலும் நம்முடைய பரம விரோதிகள் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் இரண்டு பேரையும் காட்டிலும் நம்முடைய கொடிய விரோதி, முதன்மையான விரோதி, ஆழ்வார்க்கடியான் என்று பொய்ப் பெயர் பூண்டு திரியும் திருமலையப்பன்தான். அவன் நம்மையும் நம் நோக்கத்தையும் அடியோடு நாசம் செய்யக்கூடியவன். நமக்கெல்லாம் இணையில்லாத் தலைவியாக உள்ள தேவியை அவன் கொண்டு போகப் பார்க்கிறவன். அடுத்தபடியாக அவனை உங்களில் யாராவது எங்கே கண்டாலும், எந்த நிலைமையில் சந்தித்தாலும், கைகளில் உள்ள ஆயுதத்தை உடனே அவன் மார்பில் பாய்ச்சிக் கொன்று விடுங்கள். ஆயுதம் ஒன்றுமில்லாவிட்டால் கையினால் அவனுடைய மென்னியைத் திருகிக் கொல்லுங்கள். அல்லது சூழ்ச்சியால் விஷத்தைக் கொடுத்துக் கொல்லுங்கள். அல்லது வெள்ளத்தில் தள்ளி முதலைப் பசிக்கு இரையாக்குங்கள் அல்லது ஏதாவது சாக்குச் சொல்லி



பாறை உச்சிக்கு அழைத்துப் போய் அங்கிருந்து பிடித்துத் தள்ளிக் கொன்று விடுங்கள். தேள், நட்டுவாக்கிளி, பாம்பு முதலியவற்றைக் கண்டால் எப்படி இரக்கம் காட்டாமல் கொல்வீர்களோ, அப்படிக் கொன்று விடுங்கள்! துர்க்கா தேவிக்கோ, கண்ணகியம்மனுக்கோ பலி கொடுத்து விட்டால் இன்னும் விசேஷம். எப்படியும் அவன் உயிரோடிருக்கும் வரையில் நம்முடைய நோக்கத்துக்கு இடையூறாகவே இருப்பான்!..."

"ரவிதாஸரே! நீங்கள் இவ்வளவு தூரம் வற்புறுத்திச் சொல்வதற்கு அவன் பெரிய கைகாரனாயிருக்க வேண்டும். அப்படிப் பட்டவன் யார்?"

"யாரா? அவன் பயங்கர ஆற்றல் படைத்த ஒற்றன்!"

"யாருடைய ஒற்றன்?"

"எனக்கே அது வெகு காலம் சந்தேகமாகத்தானிருந்தது. சுந்தர சோழரின் ஒற்றனோ, ஆதித்த கரிகாலனின் ஒற்றனோ என்று சந்தேகப்பட்டேன். இல்லையென்று கண்டேன். பழையாறையில் இருக்கிறாளே, ஒரு கிழப் பாதகி, அந்தப் பெரிய பிராட்டியின் ஒற்றனாயிருக்கலாம் என்று இப்போது சந்தேகிக்கிறேன்."

"ஆகா! அப்படியா? சிவபக்தியில் மூழ்கி, ஆலயத் திருப்பணி செய்து வரும் அந்தச் செம்பியன் தேவிக்கு ஒற்றன் எதற்கு?"

"அதெல்லாம் பொய். இந்த முன் குடுமிக்காரனின் வீர வைஷ்ணவம் எப்படி வெளி வேஷமோ, அப்படித்தான் அந்த முதிய ராணியின் சிவபக்தியும். பெற்ற பிள்ளைக்கே பெரும் சத்துருவாயிருக்கும் பிசாசு அல்லவா? அதனால் தானே, அவளுடைய சொந்தச் சகோதரனாகிய மழவரையன் கூட அவளுடன் சண்டை பிடித்துக் கொண்டு, பழுவேட்டரையன் கட்சியில் சேர்ந்திருக்கிறான்?"

"ரவிதாஸரே! அந்த முன் குடுமி வைஷ்ணவனைப் போல் இன்னும் யாராவது உண்டோ?"

"குடந்தையில் ஒரு சோதிடன் இருக்கிறான். அவன் பேரிலும் எனக்குச் சந்தேகம் இருக்கிறது. வருகிறவர் போகிறவர்களுக்கு ஜோசியம் சொல்லுவது போல் சொல்லி வாயைப் பிடுங்கிப் பல விஷயங்களைத் தெரிந்து கொள்கிறான். அவனிடம் நீங்கள் யாரும் போகவே கூடாது. போனால் எப்படியும் நிச்சயமாக ஏமாந்து போவீர்கள்."

"அவன் யாருடைய ஒற்றன் என்று நினைக்கிறீர்கள்?"

"இன்னும் அதை நான் கண்டுபிடிக்க முடியவில்லை. ஒருவேளை தற்போது இலங்கையில் இருக்கும் போலி இளவரசனுடைய ஒற்றனாக இருக்கலாம். ஆனால் ஜோசியனைப் பற்றி அவ்வளவு கவலை எனக்குக் கிடையாது. அவனால் பெரிய தீங்கு எதுவும் நேர்ந்து விடாது. வைஷ்ணவன் விஷயத்திலேதான் எனக்குப் பயம்! அவனைக் கண்ட இடத்திலே தேள், நட்டுவாக்களி, பாம்பை அடித்துக் கொல்வது போல் இரக்கமின்றிக் கொன்றுவிட வேண்டும்!"

இதையெல்லாம் மருத மரத்தின் மறைவிலிருந்து கேட்டுக் கொண்டிருந்த ஆழ்வார்க்கடியானுக்கு மெய் நடுங்கியது; உடம்பெல்லாம் வியர்த்தது. அந்த மரத்தடியிலிருந்து உயிரோடு தப்பித்துப் போகப் போகிறோமா என்றே அவனுக்குச் சந்தேகம் உண்டாகி விட்டது.

போதும் போதாதற்கு அந்தச் சமயம் பார்த்து அவனுக்குத் தும்மல் வந்தது. எவ்வளவோ அடக்கிக் கொள்ளப் பார்த்தும் முடியவில்லை. துணியை வாயில் வைத்து அடைத்துக் கொண்டு 'நச்' சென்று தும்மினான்.

அந்தச் சமயம் மேலக்காற்று நின்றிருந்தது. காட்டு மரங்களின் மர்மர சத்தமும் நின்று போயிருந்தது.

ஆகையால் திருமலையப்பனின் அடக்கிய தும்மல் சத்தம் பக்கத்தில் பேசிக் கொண்டிருந்த சதிகாரர்களுக்குச் சிறிது கேட்டு விட்டது.

"அந்த மருத மரத்துக்குப் பின்னால் ஏதோ சத்தம் கேட்கிறது. களுந்தைக் கொண்டு போய் என்னவென்று பார்" என்றான் ரவிதாஸன்.

களுந்து பிடித்தவன் மரத்தை நாடி வந்தான். அவன் அருகில் வர வர, வெளிச்சம் அதிகமாகி வந்தது. ஆச்சு! இதோ மரத்தின் முடுக்கில் அவன்

திரும்பப் போகிறான். திரும்பிய உடனே சுளுந்து வெளிச்சம் தன் மேல் நன்றாய் விழப் போகிறது. அப்புறம் என்ன நடக்கும்? தப்பிப் பிழைத்தால் புனர் ஜன்மந்தான்!

திருமலையப்பனின் மார்பு படபட வென்று அடித்துக் கொண்டது. தப்பு வதற்கு வழியுண்டா என்று சுற்று முற்றும் பார்த்தான். வழி காணவில்லை. அண் ணாந்து பார்த்தான். அங்கே மரத்தி லிருந்து பிரிந்து சென்ற மரக் கிளையில் ஒரு ராட்சத வௌவால் தலைகீழாகத் தொங்கித் தவம் செய்து கொண்டிருந்தது! உடனே ஒரு யோசனை தோன்றியது. சட்டென்று கைகளை உயர நீட்டி அந்த வௌவாலைப் பிடித்துக் கையில் ஆயத்த மாக வைத்துக் கொண்டான்.

சுளுந்துக்காரன் மரத்தைத் தாண்டி வந்ததும், வௌவாலை அவன் முகத்தின் மீது எறிந்தான்.

சுளுந்து கீழே விழுந்து வெளிச்சம் மங்கியது. வௌவாலின் இறக்கையால் முகத்தில் அடிபட்டவன், "ஏ! ஏ! என்ன! என்ன?" என்று உளறினான். பலர் ஓடி வரும் சத்தம் கேட்டது. ஆழ்வார்க்கடி யானும் ஓட்டம் பிடித்தான். அடுத்தக் கணம் அடர்ந்த காட்டுக்குள் புகுந்து மறைந்தான்.

பலர் சேர்ந்து, "என்ன? என்ன?" என்று கூச்சலிட்டார்கள். சுளுந்து ஏந்திய ஆள் வௌவால் தன்னைத் தாக்கியது பற்றி விவரம் கூறத் தொடங்கினான். இதெல் லாம் திருமலையப்பனின் காதில் கொஞ்ச தூரம் வரையில் கேட்டுக் கொண்டிருந்தது.

## இருபத்தொன்றாம் அத்தியாயம்

# திரை சலசலத்தது!

ஒரே சமயத்தில் ஒருவனுக் குள்ளே இரண்டு மனங்கள் இயங்க முடியுமா? முடியும் என்று அன்றைக்கு வந்தியத் தேவனுடைய அநுபவத்தி லிருந்து தெரியவந்தது.

சோழ வள நாட்டிற்குள் ளேயே வளம் மிகுந்த பிரதேசத்தின் வழி யாக அவன் போய்க் கொண்டிருந்தான். நதிகளில் புதுப்புனல் பொங்கிப் பெருகிக் கொண்டிருந்த காலம். கணவாய்கள், மதகு கள், மடைகளின் வழியாக வாய்க்கால் களிலும் வயல்களிலும் குபுகுபுவென்று ஜலம் பாய்ந்து கொண்டிருந்தது. எங்கே பார்த்தாலும் தண்ணீர் மயமாயிருந்தது. சோழ தேசத்தை வளநாடு என்றும் சோழ மன்னனை வளவன் என்றும் கூறுவது எவ் வளவு பொருத்தமானது? - இப்படி எண்ணியவுடனே சோழ நாட்டுக்குச் சோழ மன்னனுக்கும் ஏற்பட்டிருந்த அபாயங்கள் நினைவுக்கு வந்தன. இந்த நிலைமையில் தன்னுடைய கடமை என்ன? இளவரசர் கரிகாலர் கொடுத்த ஓலையை மட்டும் சக்கரவர்த்தியிடம் சேர்ப்பித்து விட்டுத் தன் கடமை தீர்ந்தது என்று இருந்து விடுவதா? இந்த இராஜகுலத் தாயாதிக் காய்ச்சலிலும் பூசலிலும் நாம் எதற்காகத் தலையிட்டுக் கொள்ள வேண்டும்? சோழ நாட்டுச் சிம்மாசனத்துக்கு யார் வந்தால் தான் நமக்கு என்ன? பார்க்கப் போனால், நம்முடைய குலத்தின் பூர்வீகப் பகைவர் கள்தானே இவர்கள்? சோழர்களும் கங்கர் களும் வைதும்பர்களும் சேர்ந்து கொண்டு தானே வாணகோப்பாடி ராஜ்யமே இல் லாதபடி செய்து விட்டார்கள்? இன்றைக்கு ஆதித்த கரிகாலர் நம்மிடம் அன்பாக இருந்ததினால் அந்த அநீதியெல்லாம் மறைந்து போய்விடுமா?... சேச்சே! அந்தப் பழைய சம்பவங்களை அநீதியென்றுதான் எப்படிச் சொல்ல முடியும்? அரசர்கள் என் றால், ஒருவருக்கொருவர் சண்டையிடுவது இயற்கை. அது போலவே வெற்றியும் தோல்வியும் மாறிமாறி வருவதும் இயற்கை. வென்றவர்கள் மீது தோற்றவர்கள் கோபங் கொள்வதில் பயன் என்ன? நம்முடைய மூதாதைகள் நல்ல நிலைமையில் இருந்த போது அவர்களும் மற்ற அரசர்களைக் கதிகலங்கத்தானே அடித்தார்கள்? அடி யோடு அழித்து விடத்தானே பார்த் தார்கள்? ஆ! அது என்ன பாடல்? இதோ ஞாபகம் வந்து விட்டது!



இப்படியெல்லாம் போர்க்களத்தில் கொடூரமான காரியங்களை நம் முன்னோர்களும் செய்திருக்கிறார்கள். போர்க்களத்தில் தோற்றவர்களின் கதி எப்போதும் அதோகதிதான். இராமரைப் போலவும் தர்ம புத்திரரைப் போலவும் எல்லா அரசர்களும் கருணை வள்ளல்களாக இருந்து விட முடியுமா? அப்படி அவர்கள் இருந்தபடியினால்தான் காட்டுக்குப் போய்த் திண்டாடினார்கள்! வீர புருஷர்களாயிருந்தும், வீரர்களின் துணையிருந்தும் வெகுவாகக் கஷ்டப்பட்டார்கள். இராஜரீகத்தில் கருணை என்பதே கூடாது. பார்க்கப் போனால் சோழ குலத்தவர்கள் சிறிது கருணையுள்ளவர்கள் என்றே சொல்ல வேண்டும். எதிரிகளையும் முடியுமானால் நண்பர்களாக்கிக் கொள்ளவே பார்க்கிறார்கள். அதற்காகக் குலம் விட்டுக் குலம் கலியாண சம்பந்தமும் செய்து கொள்கிறார்கள்! சுந்தர சோழரின் தந்தை அரிஞ்சய சோழர் வைதும்பராயன் மகளைத் திருமணம் செய்து கொள்ளவில்லையா? அழகுக்குப் பெயர்போன அந்தக் கலியாணியின் மகனாயிருப்பதினால் தானே சுந்தர சோழரும் அவருடைய மக்களும் கூட சௌந்தரியத்தில் சிறந்து விளங்குகிறார்கள்?... ஆ! அழகி என்றதும் அந்தக் குடந்தை நகரத்து மங்கை... அரிசிலாற்றங்கரைப் பெண்மணியின் நினைவு வருகிறது. நினைவு புதிதாக எங்கிருந்தோ வந்து விடவில்லை. அவனுடைய

*"சேனை தழையாக்கிச் செங்குருதி நீர் தேக்கி*
*ஆனை மிதித்த அருஞ்சேற்றில் – மானபரன்*
*பாவேந்தர் தம்வேந்தன் வாணன் பறித்து நட்டான்*
*மூவேந்தர் தங்கள் முடி!"*

உள்ளத்துக்குள்ளேயே கனிந்து கொண்டிருந்த நினைவுதான்.

வந்தியத்தேவனுடைய வெளிமனம் சோழ நாட்டின் இயற்கை வளங்களைப் பற்றியும் இராஜரீகக் குழப்பங்களைப் பற்றியும் எண்ணிக் கொண்டிருக்கையில் அவனுடைய உள் மனம் அந்த மங்கையினிடத்திலேயே ஈடுபட்டிருந்தது. இப்போது உள் மனம், வெளி மனம் இரண்டும் ஒத்து அம்மங்கையைக் குறித்துப் பட்டவர்த்தனமாகச் சிந்திக்கத் தொடங்கின. பிறகு, வெளியில் எந்த அழகான இயற்கைப் பொருளைப் பார்த்தாலும் அந்த மங்கையின் அவயங்களுடன் ஒப்பிடத் தோன்றின. வழுவழுப்பான மூங்கிலைப் பார்த்ததும் அவளுடைய தோள்கள் நினைவு வந்தன. ஓடைகளில் மண்டிக் கிடந்த குவளை மலர்கள் அவளுடைய கண்களுக்கு உவமையாயின. பங்கஜ மலர்கள் அவளுடைய தங்க முகத்துக்கு இணைதானா என்ற ஐயம் தோன்றியது. நதியோர மரங்களில் குலுங்கிக் கொண்டிருந்த மலர்களில் வண்டுகள் செய்த ரீங்காரத்தை அவள் குரலின் ஒலிக்கு உவமை சொல்வது சரியாகுமா? இப்படியெல்லாம் கவிகள் கற்பித்திருக்கிறார்களே தவிர, உண்மையில் இவையெல்லாம் எங்கே? அந்த மங்கையின் சௌந்தரியம் எங்கே? அவளுடைய திருமுகத்தைப் பார்த்தபோது மெய்சிலிர்த்ததே! இப்போது நினைத்துப் பார்க்கும்போது கூட நெஞ்சு விம்முகிறதே! இந்தப் பூக்களையும் வண்டுகளையும் பார்த்தால் அத்தகைய மெய் சிலிர்ப்பு உண்டாகவில்லையே?.... சேச்சே! முதி



யோர்கள் நமக்குச் செய்த உபதேசத்தையெல்லாம் மறந்து விட்டோம்! பெண்களின் மோகத்தைப்போல் உலக வாழ்க்கையில் பொல்லாத மாயை வேறொன்றுமில்லை. வாழ்க்கையில் வெற்றி பெற விரும்புவோன் பெண்களின் மோக வலையில் விழவே கூடாது. விழுந்தால் அவன் ஒழிந்தான்! கோவலன் கதைதான் அந்த விஷயத்தை அபூர்வமாய் எடுத்துச் சொல்கிறதே! – கோவலன் மட்டும் என்ன? இந்த நாளில் வீராதி வீரரும் சோழ நாட்டிலே இணையற்ற செல்வாக்கு உள்ளவருமான பெரிய பழுவேட்டரையரைப் பற்றி மக்கள் பரிகாசம் பேசுங்காரணமும் அதுதானே? – ஆனால் மக்கள் உண்மை அறியாதவர்கள். மூடு பல்லக்கிலே வைத்துப் பழுவேட்டரையர் யாரைக் கொண்டு வருகிறார் என்று மக்களுக்குத் தெரியாது! ஆகையால் மூடத்தனமாகப் பேசுகிறார்கள். ஆனாலும், அந்த மதுராந்தகத் தேவர் தம்மை அவ்வளவு கேவலப்படுத்திக் கொள்ள வேண்டியதில்லை. ச்சீ! மூடுபல்லக்கில் உட்கார்ந்து கொண்டு, பழுவேட்டரையரின் ராணியின் ஸ்தானத்தில் மறைந்து கொண்டு ஊர் ஊராய்ப் போவதா? இதுதான் ஆண்மைக்கு அழகா? இப்படியாவது இராஜ்யம் சம்பாதிக்க வேண்டுமா? இப்படிச் சம்பாதித்த இராஜ்யத்தைத்தான் அவரால் காப்பாற்றிக் கொள்ள முடியுமா? பழுவேட்டரையர் முதலியோரை நம்பி அவர்களுக்கு உட்பட்டுத்தானே இராஜ்ய பரிபாலனம் செய்ய வேண்டும்? இந்த விஷயத்தில் சுந்தர சோழ சக்கரவர்த்தி செய்து வருவதே அவ்வளவு சிலாக்கியமில்லைதான்! பழுவேட்டரையர் போன்றவர்களுக்கு இவ்வளவு அதிகாரமும் செல்வாக்கும் அவர் அளித்திருக்கக் கூடாது. அதிலும் மணி மணியாக இரண்டு அருமைப் புதல்வர்கள் இருக்கும்போது? – நாடெல்லாம் அதிசயிக்கும் அறிவும் திறனும் உடைய புதல்வி ஒருத்தி இருக்கும்போது...? அந்த மங்கை, சோதிடர் வீட்டில் பார்த்தவன், ஆற்றங்கரையில் பேசியவள், – அவள் முகம் யாருடைய ஜாடையாயிருக்கிறது?... அப்படியும் இருக்கலாமோ? – பைத்தியக்காரத்தனம்! ஒருநாளும் அப்படி இருக்க முடியாது! – ஏன் இருக்க முடியாது? ஒருவேளை அவ்விதம் இருந்தால், நம்மைப் போன்ற அறிவீனன் வேறு யாரும் இல்லை! நம்மைப் போன்ற துரதிர்ஷ்டசாலியும் இல்லை! இலங்கை முதல் விந்திய பர்வதம் வரையில் எந்தப் பெண்ணரசியின் புகழ் பரந்து விரிந்து பரவியிருக்கிறதோ, அவளிடம் நாம் எப்பேர்ப்பட்ட காட்டுமிராண்டியைப் போல் நடந்து கொண்டோம்! – அப்படி இருக்கவே இருக்காது! நாளைக்கு அவளிடம் எப்படி இளவரசரின் ஓலையுடனே சென்று முகத்தைக் காட்ட முடியும்?

இப்படியாக என்னவெல்லாமோ வானத்தையும் பூமியையும் சேர்த்து எண்ணமிட்டுக் கொண்டு வந்தியத்தேவன் காவேரிக் கரையோடு வந்து திருவையாற்றை அடைந்தான். அந்த ஊரின் வளமும் அழகும் அவன் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. அது திருவையாறுதானா என்று கேட்டுத் தெரிந்து கொண்டான். அந்த அற்புத க்ஷேத்திரத்தின் மகிமையைப் பற்றி அவன் கேள்விப்பட்டிருந்ததெல்லாம் உண்மைக்குக் கொஞ்சம் குறைவாகவே தோன்றியது. ஞானசம்பந்தர் தேவாரத்தில் உள்ள வர்ணனை இங்கே அப்படியே தத்ரூபமாய்க் காண்கிறது. முந்நூறு ஆண்டு காலத்தில் மாறுதல் ஒன்றுமேயில்லை. அதோ காவேரியின் கரையில் உள்ள மரங்கள் என்ன செழிப்பாய் வளர்ந்திருக்கின்றன! பலா மரங்களில் எவ்வளவு பெரிய பெரிய பலாக்காய்கள் தொங்குகின்றன. இந்த மாதிரி தொண்டை மண்டலத்தில் எங்கும் பார்க்கவே முடியாதுதான்! ஆகா! வளமான இடங்களுக்கென்று குரங்குகள் எங்கிருந்தோ வந்து விடுகின்றன. அவை கிளைக்குக் கிளை தாவுவது எவ்வளவு அழகாயிருக்கிறது?

சம்பந்தப் பெருமான் என்ன சொல்லி யிருக்கிறார்? இதோ ஞாபகம் வருகிறது! திருவையாற்று வீதி முனை அரங்கங் களில் பெண்கள் நடனம் ஆடுகிறார்கள். அந்த ஆடலுக்கேற்ற பாடலோடு மத்தளச் சத்தமும் முழங்குகிறது. அந்த முழக்கத்தைக் கேட்ட குரங்குகள் மேகங்களின் கர்ஜனை என்று எண்ணி உயர்ந்த மரங்களின் உச்சாணிக் கிளைகளில் ஏறி மழை வருமா என்று வானத்தைப் பார்க்கின்றன! அடடா! இன்றைக்கும் எவ்வளவு பொருத்த மாயிருக்கிறது! உயர்ந்த மரங்களில் உச்சாணிக் கிளைகளில் குரங்குகள் ஏறுகின்றன! அது மட்டுமா? ஆடல் பாடல்களுக்குரிய இனிய சத்தங்களும் ஊருக்குள்ளிருந்து வருகின்றன. யாழ், குழல், முழவு, தண்ணுமை முதலிய கருவிகளின் ஒலியுடன் சதங்கைச் சத்தமும் சேர்ந்து ஒலிக்கின்றன. இங்கே ஆடுகிறவர்கள் கடம்பூர் சம்புவரையர் மாளிகையில் ஆடியவர்களைப் போல் குரவைக் கூத்தர்கள் அல்ல. ஆகா! இங்கே கேட்பது பண்பட்ட இனிய கானம். கலைச் சிறப்பு வாய்ந்த பரதநாட்டியம் ஆடு வோரின் சதங்கை ஒலி. அதோ, ஆட்டிவைக்கும் நடன ஆசிரியர்கள் கையில் பிடித்த கோலின் சத்தம் கூடச் சேர்ந்து வருகிறதே!



> "கோலோடக் கோல்வளையார் கூத்தாடக்
> குவிமுலையார் முகத்தினின்று
> சேலோடச் சிலை யாடச் சேயிழை
> யார் நடமாடுந் திருவையாறே!"

ஆகா! சம்பந்த ஸ்வாமிகள் சிறந்த

சிவபக்தர்; அதைக் காட்டிலும் சிறந்த ரஸிகர்! அவர் அன்றைக்கு வர்ணனை செய்தபடியே இன்றைக்கும் இந்தத் திருவையாறு விளங்குகிறதே! இப்படிப் பட்ட ஊரில் ஒருநாள் தங்கி ஆடல் பாடல் விநோதங்களைப் பார்த்துவிட்டு, ஐயாறப்பரையும் அறம் வளர்த்த நாயகி அம்மனையும் தரிசித்து விட்டுத்தான் போகவேண்டும்! அடாடா, காவேரியின் கரையில் எத்தனை பக்தர்கள் உட்கார்ந்து அனுஷ்டானம் செய்கிறார்கள்? பட்டை பட்டையாக அவர்கள் திருநீறு அணிந்திருப்பது எவ்வளவு களையாயிருக்கிறது? சில சமயம் ஆடல் பாடல் ஒலிகளை அமுக்கிக் கொண்டு, 'நமச்சிவாய' மந்திரத்தின் ஒலி கேட்கிறதே! ஏன்? அதோ சம்பந்தரின் தேவாரத்தையே யாரோ இனிய குரலில் அருமையாகப் பாடுகிறார்களே? இசைக்கும் கலைக்கும் என்றே இறைவன் பணித்த ஊர் இந்தத் திருவையாறு போலும்! இந்த ஊரில் கட்டாயம் ஒரு நாள் தங்கிப் பார்த்து விட்டுத்தான் போகவேண்டும்! தஞ்சாவூருக்கு அவசரமாகப் போய்த்தான் என்ன பயன்? கோட்டைக்குள் பிரவேசிக்க முடிகிறதோ என்னமோ? அப்படிப் பிரவேசித்தாலும் மகாராஜாவின் பேட்டி கிடைக்குமா? மகாராஜாவைத்தான் இரண்டு பழுவேட்டரையர்களுமாகச் சேர்ந்து சிறையில் வைத்திருப்பது போல் வைத்திருக்கிறார்களாமே...? காவேரியின் வடகரைக்குப் போக வேண்டியது தான்!

இந்த முடிவுக்கு வந்தியத்தேவன் வந்துவிட்ட தருணத்தில் ஒரு சம்பவம் நடந்தது. மேற்குத் திசையிலிருந்து காவேரிக் கரையோடு ஒரு பல்லக்கு வந்தது. பல்லக்குக்கு முன்னாலும் பின்னாலும் சில காவல் வீரர்களும் வந்தார்கள். வந்தியத்தேவனுக்கு ஏதோ ஒரு சந்தேகம் தோன்றியது. பல்லக்கு அருகில் வருகிறவரையில் அங்கேயே நின்று காத்துக் கொண்டிருந்தான். அவன் நினைத்தபடியே இருந்தது. பல்லக்கை மூடியிருந்த வெளித்திரையில் பனைமரத்தின் இலச்சினைச் சித்திரம் காணப்பட்டது! ஆஹா! கடம்பூரிலிருந்து வருகிற பல்லக்குத்தான் இது! நாம் குடந்தை வழியாக வர, இவர்கள் வேறொரு வழியில் வந்திருக்கிறார்கள்! ஆனால் பழுவேட்டரையரைக் காணோம்! அவர் வேறு எங்கேயாவது வழியில் தங்கிவிட்டார் போலும்!

பல்லக்கு தஞ்சாவூர் இருந்த தென்திசை நோக்கித் திரும்பியது. அவ்வளவுதான். வந்தியத்தேவன் திருவையாற்றில் தங்கும் எண்ணத்தை விட்டு விட்டான். அந்தப் பல்லக்கைப் பின் தொடர்ந்து செல்லத் தீர்மானித்தான். என்ன நோக்கத்துடன் அப்படித் தீர்மானித்தான் என்றால், அது அச்சமயம் அவனுக்கே தெரிந்திருக்கவில்லை. பல்லக்கில் வீற்றிருப்பது மதுராந்தகத் தேவர் என்று மட்டும் அவனுக்கு நிச்சயமாய்த் தெரிந்தது. அவர் மேல் ஏற்பட்டிருந்த அருவருப்பு மேலும் சிறிது வளர்ந்தது. ஆனாலும் பல்லக்கைத் தொடர்ந்து கொஞ்சம் போனால், ஏதாவது ஒரு நல்ல சந்தர்ப்பம் ஏற்படலாம். பல்லக்கைச் சுமப்பவர்கள் அதைக் கீழே வைக்கலாம். ஏதேனும் ஒரு காரணத்துக்காக இளவரசர் மதுராந்தகர் வெளிப்பட்டு வரலாம். அச் சமயம் அவருடன் பழக்கம் செய்து கொள்ளலாம். அது தஞ்சாவூர்க் கோட்டைக்குள் பிரவேசிக்கவும், சக்கரவர்த்தியைப் பார்க்கவும் பயன்படலாம். அதற்குத் தகுந்தபடி ஏதாவது கொஞ்சம் பேசி வேஷம் போட்டால் போகிறது. தந்திர மந்திரங்களைக் கையாளாவிட்டால் எடுத்த காரியம் கைகூடாது அல்லவா? அதிலும் இராஜாங்கக் காரியங்களில்?

எனவே, பல்லக்கையும் பரிவாரங்களையும் முன்னால் போக விட்டுச் சற்றுப் பின்னாலேயே வந்தியத்தேவன் போய்க் கொண்டிருந்தான். ஆனால் அவன் எதிர்பார்த்த சந்தர்ப்பம் ஒன்றும் கிட்டவில்லை. காவேரிக்கும் தஞ்சாவூருக்கும் மத்தியிலிருந்த மற்றும் நாலு

நதிகளைக் கடந்தாகிவிட்டது. அப்படியும் பல்லக்கு கீழே வைக்கப்படவில்லை. ஒரே மூச்சாகப் போய்க் கொண்டிருந்தது. அதோ சற்றுத் தூரத்தில் தஞ்சாவூர்க் கோட்டை மதிலும் வாசலும் தெரியத் தொடங்கி விட்டன. கோட்டைக்குள் பல்லக்குப் போய்விட்டால், அப்புறம் அவன் எண்ணம் கைகூடப் போவதில்லை. அதற்குள் தைரியமாகவும் துணிச்சலாகவும் ஏதேனும் ஒன்று செய்தாக வேண்டும். என்னதான் வந்துவிடும்? தலையா போய்விடும்? அப்படிப் போனால்தான் போகிறதே? – எடுத்த காரியத்தை முடிக்காமல் உயிரோடு திரும்பிப் போவதில் என்ன லாபம்? இதற்கெல்லாம் அடிப்படையில் மதுராந்தகத் தேவர் பேரில் வந்தியத்தேவனுக்கு கோபம் வேறே இருந்தது. பல்லக்கின் மூடுதிரையைக் கிழித்தெறிந்து உள்ளேயிருப்பது பெண்ணல்ல, மீசை முளைத்த ஆண் பிள்ளை என்பதை வெளிப்படுத்த வேண்டும் என்று அவன் கை ஊறியது; அவன் உள்ளம் துடிதுடித்தது.

இதற்கு என்ன வழி என்று அவன் தீவிரமாக யோசித்துக் கொண்டிருக்கையில் பல்லக்கோடு சென்ற பரிவாரங்களில் ஒருவன், சற்றுப் பின்தங்கி வந்தியத்தேவனை உற்றுநோக்கினான்.

''நீ யார் அப்பா! திருவையாற்றிலிருந்து எங்களை ஏன் தொடர்ந்து வருகிறாய்?'' என்று கேட்டான்.

''நான் உங்களைத் தொடர்ந்து வரவில்லை ஐயா! தஞ்சாவூருக்குப் போகிறேன்! இந்தச் சாலைதானே தஞ்சாவூர் போகிறது!'' என்றான் வந்தியத்தேவன்.

''இந்தச் சாலை தஞ்சாவூருக்குத்தான் போகிறது. ஆனால் இதில் முக்கியமானவர்கள் மட்டுமே போகலாம். மற்றவர்களுக்கு வேறு சாலை இருக்கிறது!'' என்றான் வீரன்.

''அப்படியா? ஆனால் நானும்



ரொம்ப ரொம்ப முக்கியமான மனுஷன்தான்!'' என்றான் வந்தியத்தேவன்.

அதைக் கேட்ட அவ்வீரன் புன்னகை செய்துவிட்டு, ''தஞ்சைக்கு எதற்காகப் போகிறாய்?'' என்றான்.

''என் சித்தப்பா தஞ்சையில் இருக்கிறார். அவருக்கு நோய் என்றறிந்து பார்க்கப் போகிறேன்'' என்று கூறினான் வந்தியத்தேவன்.

''உன் சித்தப்பா தஞ்சையில் என்ன செய்கிறார்? அரண்மனையில் உத்தியோகம் பார்க்கிறாரா?''

''இல்லை, இல்லை; சத்திரத்தில் மணியக்காரராயிருக்கிறார்!''

''ஓகோ! அப்படியா! சரி, எங்களுக்கு முன்னால் நீ போவது தானே? ஏன் பின்னாலேயே வந்து கொண்டிருக்கிறாய்?''

''குதிரை களைத்துப் போயிருக்கிறது ஐயா! அதனாலேதான்! இல்லாவிடில் உங்கள் முதுகைப் பார்த்துக் கொண்டே வருவதில் எனக்கு என்ன திருப்தி?''

இப்படிப் பேசிக் கொண்டே வந்தியத்தேவன் பல்லக்கின் அருகில் வந்து விட்டான். உடனே அவன் மூளையை வரட்டிக் கண்டுபிடிக்க முயன்ற உபாயமும் புலப்பட்டு விட்டது. குதிரையைக் கால்களால் அமுக்கி, முகக்கயிற்றை இழுத்து, பல்லக்கின் பின் தண்டைத் தூக்கியவர்களின் பேரில் விட்டடித்தான். அவர்கள் பயத்துடன் திரும்பிப் பார்த்தார்கள். வந்தியத்தேவன் உடனே, ''மஹாராஜா! மஹாராஜா! பல்லக்குத் தூக்கும் ஆள்கள் என் குதிரையை இடிக்கிறார்கள்! ஐயோ! ஐயோ!'' என்று கத்தினான். பல்லக்கை மூடியிருந்த திரை சலசலத்தது.

(தொடரும்)

அமெரிக்காவின் பிரபல கோடீசுவரரான ராக்பெல்லரைப் பற்றிச் சமீபத்தில் ஒரு கதை படித்தேன். கோடி கோடியாக அவர் பணம் சேர்த்துக் கொண்டிருந்த சமயத்திலும் கவலை அவரைப் பிடுங்கித் தின்று கொண்டிருக்குமாம்; ஒரு சிறிய நஷ்டம் நேர்ந்து விட்டாலும் மிக்க மனவேதனைக்கு உள்ளாவாராம்.

ஒருசமயம் அவர் நாற்பதினாயிரம் டாலர் பெருமான தானியத்தைக் கப்பலேற்றி அனுப்பினாராம். கப்பல் போய்க் கொண்டிருந்த பிரதேசத்தில் பெரிய புயல் அடிப்பதாகத் தெரிய வந்ததாம். "ஐயையோ, இன்ஷியூர் செய்யவில்லையே" என்று தவித்தாராம். இன்ஷியூர் செய்ய 160 டாலர் செலவாகுமே என்பதற்காக இன்ஷியூர் செய்யவில்லை. இப்போது புயலைப் பற்றிச் செய்து வந்ததும், இன்ஷியூர் செய்யாதது பிசகு என்று எண்ணினாராம். உடனே ஆளை அனுப்பி இந்த நேரத்தில் எந்தக் கம்பெனியாவது இன்ஷியூர் செய்யுமா என்று பார்க்கச் சொன்னாராம். ஒரு கம்பெனியார் அதற்குச் சம்மதிக்கவே, போன ஆசாமி இன்ஷியூர் செய்து விட்டுத் திரும்பினார். ஆனால், அவர் திரும்பி வந்து செய்தி சொன்னதும், ராக்பெல்லர் முன்னைக் காட்டிலும் 'ஐயோ; போச்சே' என்று அலறினாராம். காரணம் விசாரித்தபோது,. கப்பல்கள் ஜாக்கிரதையாகப் போக வேண்டிய இடத்துக்குப் போய்ச் சேர்ந்தனவென்று தெரிய வந்தது. பின்னே, ராக்பெல்லர் எதற்காக அலறினார் என்றால், 'அனாவசியமாக இன்ஷியூர் செய்யச் சொன்னோமே! நூற்றைம்பது டாலர் அநியாயமாய்ப் போச்சே!' என்பதற்காகத்தான்.

## ரா ஜா சர்

# கடுமையாகத்

அண்ணாமலைச் செட்டியார் அவர்களைத் "தமிழ்நாட்டு ராக்பெல்லர்" என்று சிலர் சொல்லக் கேட்டிருக்கிறேன். இது எவ்வளவு தூரம் சரியான உண்மை என்று நான் சொல்ல முடியாது. ஆனால், ஒரு விஷயத்தில் இந்த இரண்டு கோடீசுவரர்களுக்கும் வெகு தூரத்துக்கு வெகு தூரம் – கிட்டத்தட்ட கோடி மைல் தூரம் – என்று நான் சொல்ல முடியும்.

# தாக்கி எழுத வேண்டாம்!

அமரர் கல்கி



• ராஜா அண்ணாமலை செட்டியார்-மனைவியுடன்

1941-ம் வருஷத்தில், ராஜா சர். அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் தமிழிசை இயக்கத்துக்குத் தலைமை வகித்து நடத்த ஆரம்பித்தார்கள். அந்த இயக்கம் சம்பந்தமாக அந்த வருஷத்திலேதான் அவர்களை நான் சந்திக்க நேர்ந்தது.

பிறகு, சில காலம் அடிக்கடி பார்க்கவும் பேசிப் பழகவும் பாக்கியம் கிடைத்தது. இதே நாட்களில்தான் மலாய் நாடும் பர்மாவும் ஜப்பானியரால் கைப்பற்றப் பட்டன.

மலாய்-பர்மா நாடுகளில் செட்டி நாட்டு அரசருக்கு ஏராளமான கொடுக்கல் வாங்கலும் வியாபார ஸ்தலங்களும் நிலபுலன்களும் உண்டு என்பது அனைவரும் அறிந்த விஷயம்.

ஒருசமயம் ராஜா சர் அவர்களைச் சந்தித்தபோது, மலாயாவிலும் பர்மாவிலும் அவர்களுக்கு நேர்ந்திருக்கக் கூடிய பெரு நஷ்டங்களைக் குறித்து அநுதாபம் தெரிவிக்கும் முறையில் பிரஸ்தாபித்தேன். அப்போது அவர்கள் கூறிய பதில், பாச மறுத்துப் பற்றறுத்து முற்றும் துறந்த முனிவரின் மனோநிலையை வெளிப்படுத்தியது கண்டு திகைத்துப் போனேன். "ஆமாம், பர்மாவிலும் மலேயாவிலும் எங்களுக்குப் பெரு நஷ்டந்தான். ஆனாலும், அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. அங்கேயெல்லாம் நமக்குச் சொத்து இல்லை. எப்போதும் இருக்கவில்லை, என்பதாக எண்ணிக் கொண்டு விட்டேன்" என்கிறார்கள்.

என்னுடைய நண்பர் ஒருவர் வெகு தாராள இயல்பு உள்ளவர். அவருடைய தாராளத்தைப் பார்த்து விட்டுச் சிலர், அவர் நிறையப் பணம் சேர்த்திருக்க வேண்டும் என்று நினைப்பதுண்டு. ''உங்களுக்கென்ன, நாலைந்து லட்சமாவது இருக்குமா?'' என்று சிலர் அப்பட்டமாகக் கேட்பதுண்டு. "ஆமாம். நாலைந்து லட்சத்திற்கு இருக்கும். கொஞ்சம் கூடவே இருக்கும்" என்று அந்த நண்பர் பதில் சொல்லுவார். "ஏன் ஐயா, இப்படி இல்லாததைச் சொல்கிறீர்?" என்று கேட்டால், நாலைந்து லட்சம் இருந்தால் பாங்கிலே தானே போட்டு வைத்திருப்பேன்? இப்போது பாங்கிலே பணம் இருப்பதாக நினைத்துக் கொள்கிறேன். நாலைந்து லட்சம் என்ன? பத்து லட்சம் இருப்பதாகவே எண்ணிக் கொள்கிறேன். யார் என்னைத் தடுக்க முடியும்?'' என்பார்.

இதே விதமான பற்றற்ற மனப்பாங்கை ராஜா சர் அவர்கள் வேறுவிதத்தில்

காண்பித்தார்கள். பர்மாவிலும் மலேயாவிலும் அவர்களுக்கு இருந்த லட்ச லட்சமான செல்வத்தையெல்லாம் ஒரு நொடிப் பொழுதில் "இல்லை" என்று தீர்மானித்துக் கொண்டு விட்டார்கள். இதனால் மனத்தில் கவலைக்கும் இடமில்லை என்றாயிற்று.

ஆனால், ராஜா சர் அவர்களுடைய மனத்தில் கவலையே இல்லாமல் போய் விட்டதா? பர்மா-மலாய் சொத்துக்களைப் பற்றித்தான் கவலையில்லையென்றாயிற்றே தவிர, வேறொரு பெருங்கவலை குடி கொண்டிருந்தது.

"தமிழ் இசை இயக்கத்தை எதிர்க்கிறார்களே? ஏன் எதிர்க்கிறார்கள்? தாய் மொழியை ஏன் வெறுக்கிறார்கள்?" என்ற கவலை அச்சமயத்தில் ராஜா சர் அவர்களுக்குப் பெரும் வேதனையளித்தது.

'மலாய்-பர்மா சொத்துக்களை இல்லையென்று எண்ணிக் கொண்டு விட்டேன். அதைப் பற்றிக் கவலையில்லை. ஆனால், தமிழ் இசை இயக்கத்தைப் பற்றித்தான் கவலையாயிருக்கிறது. தமிழ் இசை இயக்கத்துக்கு விரோதமாக அவர் அப்படிப் பேசி இருக்கிறாரே? ஏன் அப்படி பேசி இருக்கிறார்? தமிழ் இசை இயக்கத்தை எதிர்த்து இந்தப் பத்திரிகை இப்படி எழுதியிருக்கிறதே? ஏன் இப்படி எழுதியிருக்கிறது? இந்த எதிர்ப்பை நாம் எப்படிச் சமாளிப்பது? எப்படி இயக்கத்துக்குப் பலம் அளிப்பது' என்பதற்காக ஒருநாள் அல்ல, சில நாள் அல்ல. பல காலம் கவலைப்பட்டார்கள்.

கோடி கோடியாகப் பணம் நஷ்டமாகிக் கொண்டிருந்த காலத்தில் செட்டி நாட்டு அரசரின் மனக் கவலையெல்லாம் தமிழிசை இயக்கத்தைப் பற்றியதாகவே இருந்தது. இதிலிருந்து பணத்தைப் பற்றி அவர்கள் எத்தனைய பற்றற்ற மனோ நிலையை அடைந்திருந்தார்கள் என்பது வெளியாயிற்று.

தமிழிசை இயக்கத்தைப் பற்றிச் செட்டி நாட்டு அரசரின் மனக் கவலையை நானும் சில சமயம் அதிகமாக்கினேன் என்று சொல்ல வேண்டியதாயிருக்கிறது. தமிழிசையை எதிர்ப்பவர்களை ஒருசமயம் நான் காரசாரமாகத் தாக்கி ஒரு கட்டுரை எழுதியிருந்தேன். இந்தக் கட்டுரை வெளியான சில நாளைக்கெல்லாம் ராஜா சர் அவர்களை நான் பார்க்க நேர்ந்தது. வேறு விஷயங்களைப் பற்றிப் பேசினார்களே தவிர கட்டுரையைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை. "ஒருவேளை படிக்கவில்லை போலிருக்கிறது!" என்று நினைத்துக் கொண்டேன். கடைசியில், புறப்படும் சமயத்தில் அவர்கள் கூறியதாவது:- "உங்களுடைய கட்டுரையைப் படித்தேன். நன்றாக எழுதியிருக்கிறீர்கள். ஆனால், ரொம்பக் கடுமையாகத் தாக்கியிருக்கிறீர்கள். உங்களுக்குப் புத்தி சொல்ல வரவில்லை. என் அபிப்பிராயத்தைச் சொல்கிறேன். இவ்வளவு காரமாக எழுதுவதினால் காரியத்துக்கு அநுகூலம் உண்டா என்று யோசிக்க வேண்டும்!"

இதைக் கேட்டு நான் ஒரு நிமிஷம் திகைத்துப் போனேன். பிறகு, "எதிர்ப்பவர்கள் கடுமையாகத் தானே எதிர்த்திருக்கிறார்கள்?" என்றேன்.

எதிர்ப்பவர்கள் எப்படி வேணுமானாலும் பேசலாம்; எழுதலாம். ஆனால், நாளைக்கு அவர்களும் நம்முடைய கட்சிக்கு வருவதற்கு இடம் வைத்து நாம் எழுத வேண்டும். ரொம்பக் காரமாக எழுதி விட்டால், அவர்கள் நம்முடன் சேருவதற்கே இடமில்லாமற் போய் விடும்" என்று ராஜா சர் கூறியது, நேற்றுத் தான் கூறியதுபோல் என் காதில் ஒலிக்கிறது.

ராஜாஜி அவர்கள் அடிக்கடி எனக்கு இதே விதமான புத்திமதி கூறியதுண்டு. "அதிகமாகத் தாக்கி எழுதக் கூடாது" என்று ராஜாஜி அவர்கள் அஹிம்சை நெறியில் நின்று எனக்கு யோசனை சொன்னார்கள். அதே விதமான யோசனையைக் "காரிய சாதனையை" முன்னிட்டு ராஜா சர் அவர்களும் கூறினார்கள். வெவ்வேறு நோக்குடன் பார்த்து, இந்த இரு பெரியவர்களும் ஒரே முடிவுக்கு வந்திருப்பதை நினைக்க நினைக்க, எனக்கு வியப்பாக இருக்கிறது.

# ஒவ்வொரு மங்கையின் வெற்றிக்குப்பின்னால்
# ஒரு நிரந்தர சக்தி!
# சக்தி காஸ்.




ஒவ்வொரு மங்கைக்கும் தான் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் வெற்றிகரமானதாக இருக்கவேண்டும் என்ற எதிர்பார்ப்பு இயல்பானது. அதற்கு நேசக்கரம் நீட்டுகிறது ஒரு நிரந்தர சக்தி. அது தான் **சக்தி காஸ்**.

இந்தியாவின் மிகப்பெரிய தனியார் துறை L.P.G. நிறுவனம் **சக்தி காஸ்**. இலட்சக்கணக்கான குடும்பங்களில், எல்லா நேரங்களிலும் உறுதுணையாக நின்று இல்லத்தரசிகளை **அன்னபூரணிகளாக** விளங்கச்செய்வது **சக்தி காஸ்**.

உங்களுடைய இல்லத்தில் **சக்தி காஸ்** இருக்கிறது என்றால் உங்களிடம் எப்போதும் நிரந்தர **சக்தி** இருக்கிறது.




**தக்ஷின் சக்தி**

- உடனடி இணைப்பு
- உடனடி ரீஃபில்
- அரசாங்க காஸ் விலைக்கு சமமாக ஆயுள் முழுவதும் ரீஃபில்கள் கொடுக்கப்படும்.
- இவை அனைத்தும் உங்களுக்கு ரூ. 4,900/-க்கு மட்டுமே.

**ஜனதா சக்தி**

சக்தி காஸ் இணைப்பை ரூ. 1,350/-க்குப் பெற ஒரு அரிய வாய்ப்பு.

- அரசாங்க காஸ் விலைக்கு ஆயுள் முழுவதும் ரீஃபில்.
- தக்ஷின் சக்தி திட்டத்தில் மட்டுமே.

SHAKTI GAS

## ஸ்ரீ சக்தி எல்.பி.ஜி லிமிடெட்

மண்டல அலுவலகம் : 5/18, தேஜ் அபார்ட்மெண்ட்ஸ், 1வது மெயின் ரோடு,
கஸ்தூர்பாய் நகர், அடையார், சென்னை - 20. போன் : 4420970 போன்/ஃபேக்ஸ் : 4430678
தலைமை அலுவலகம் : வீனஸ் பிலாசா, ஹைதராபாத் - 16.
போன் : 869416/17/18/19. Fax : 040 814411.
ரீஜனல் ஆஃபீஸ் : 142, II மெயின், Ist ப்ளாக், RMV II ஸ்டேஜ்,
டாலர்ஸ் காலனி, பெங்களூர் - 94. போன்/ஃபேக்ஸ் : 080 3414490,3414491

PERCEPT/H

**இந்தியாவின் மிகப்பெரிய தனியார் எல்.பி.ஜி. நிறுவனம்**

# நடக்குமென்பார், நடக்கும்!

**மேஷம்** : (அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)



சில காரியங்களில் சுறுசுறுப்பா ஈடுபடுவீங்க. புதுப் புது ஆட்களோட நட்பு கிடைக்கும். மத்தவங்க ஆதரவோட புகழும் கிடைக்கும். ஆனாக்கூட உடன் பிறப்புகளால் - அட உங்க சகோதர, சகோதரிகளைத்தாங்க சொல்றேன்... சில பிரச்னைங்க வரலாம். வீடு - நிலம்னு ஏதாவது வாங்க நெனைச்சா எச்சரிக்கையா செயல்படுங்க. காவல் துறை - மிலிட்டரிக்காரங்களுக்கு இந்த வாரம் ரொம்பவும் அலைச்சலா இருக்கும். அதனால விரக்தியும் வரும். குடும்பத்தில் சகஜமான தொந்தரவுங்களும் வரலாம். பேச்சுல கவனமா இருங்க. கொடுக்கல்-வாங்கலிலேயும் கவனமா இருங்க. வியாபாரத்துல முதலீடு செஞ்சாலும் உஷாரா செய்யுங்க. முடிஞ்சவரை, இந்த வாரம் செய்யாமலே இருங்களேன்!



**ரிஷபம்** : (கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)

உங்களுக்கு இது ஜோரான வாரம். எடுத்த காரியங்களில் வெற்றி, சமூகத்தில் அந்தஸ்து உயர்வு, புகழ்... என்று எல்லாமே சந்தோஷ சமாசாரங்கதான். அரசியல்வாதிகளுக்கு புது பொறுப்புகள் கிடைக்கலாம். தொழிலாளிங்களோடு முதலாளிங்களுக்கும் நல்ல பலன்கள்தான். கலைத் துறை அன்பர்களுக்கு சுக்கிரன் பலத்தால் புகழும் பாராட்டும் உறுதி. மருத்துவம், ரசாயனம், ஆராய்ச்சியாளர்களுக்குப் பொன்னான வாரம். மாணவர்களுக்கு வெற்றி கிடைக்கும். வீடு, நிலம், வாகனம்னு ஏதாவது வாங்கறதுக்கு நிறைய சான்ஸ் இருக்கு. குடும்பத்தில சந்தோஷம் நிலவும். கல்யாணம் மாதிரியான சுப நிகழ்ச்சிகளில் கலந்துக்கற வாய்ப்பும் இருக்கறதால 'மொய்' எழுதவும் தயாரா இருங்க!

**மிதுனம்** : (மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)



சங்கீதம், கலைத்துறை அன்பர்களுக்கு முன்னேற்றமான வாரம். காவல், ராணுவத் துறையினர் கடுமையான சவால்களைச் சந்திக்க வேண்டியிருக்கும். பொதுவாப் பார்த்தா, அதிகமான பொறுப்புகள் வந்து சேரும் வாரம் இது. அதனால சிறு சிறு தடங்கல்கள் இருந்தாலும் சமாளிச்சிடுவீங்க. வியாபாரிகளுக்கும் சில பிரச்னைகள் தலைதூக்கும். அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கு அதிருப்தி வரலாம். ஆனாலும் வெளிநாட்டுத் தொடர்புகளால நல்லது நடக்கும். வராத பாக்கி கூட வந்து சேரும். பிரண்ட்ஸுங்க உதவுவாங்க. பெண்களுக்கு உல்லாசப் பயணம், திருமணம், மகப்பேறு மாதிரியான சந்தோஷங்கள் வரலாம். மாணவர்கள் சகவாசத்தில எச்சரிக்கையா இல்லேன்னா தொந்தரவாயிடும். ஜாக்கிரதை!

**கடகம்** : (புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)



உங்களுக்கு இந்த வாரம் 8-ல் உள்ள கிரகங்களின் நிலை சரியில்லீங்க. இது போதாதா? குடும்பத்தில் சிக்கல், ஆரோக்கியக் குறைவு, பணத்தட்டுப்பாடு, அலைச்சல், பொருள் நஷ்டம்னு உங்க மன அமைதியே கெட்டுப் போகற சான்ஸ் ஏராளமா இருக்கு. வீட்டுல பல்ப் ப்யூஸ் ஆயிடுச்சேன்னு புது பல்பை மாட்ட நினைக்கிறீங்களா... ஜாக்கிரதையா மாட்டுங்க. பிரயாணத்திலும் எச்சரிக்கையா இருங்க. இல்லேன்னா விபத்துகள் ஏற்படலாம். சுருக்கமாச் சொன்னா, கூடப் பிறந்தவங்களால கூட உங்களுக்கு இந்த வாரம் பொருள் நஷ்டம்தான் ஏற்படும். உஷாராயிருங்க.



**சிம்மம்** : (மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

குருவின் பார்வை உங்க மேல இருக்கறதால கௌரவம், வாழ்க்கை வசதிகள் அதிகரிப்புன்னு திருப்தியா இருக்கும். ஆன்மீகப் பணிகளில் மனம் ஈடுபடும். கலைத் துறையிலுள்ளவங்களுக்குச் சிறுசிறு சங்கடங்கள் வரலாம். விவசாயிகளுக்கு வளர்ச்சி தரும் வாரம்னாலும் எந்திரப் பணியாளர்களும், எரிபொருள்களைக் கையாளுபவர்களும் ஜாக்கிரதையா இருக்கணும். குடும்பத்தில் செலவு அதிகமாகும். உணர்ச்சி வசப்பட்டு எதையும் செஞ்சிடாதீங்க. நிதானமாச் செயல்பட்டீங்கன்னா, வரப் போற பணத்தட்டுப்பாட்டை ஈஸியாவே சமாளிக்க முடியும். அரசியல்வாதிகளுக்கு இது சோதனையான வாரம்தான்.

**கன்னி** : (உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)



பொதுவாவே உங்கள் அறிவாற்றல், திறமை, சாதுர்யம் வெளிப்படுகிற வாரம் இதுன்னாலும் குறிப்பா கலைதுறைக்காரங்களுக்கு அமோகமா இருக்கும். பணியாளர்களுக்குப் பாராட்டு கிடைக்கும். கணிதம், கம்ப்யூட்டர், எலக்ட்ரானிக் துறையில் உள்ளவங்க நல்ல முன்னேற்றம் காண்பாங்க. சிலருக்கு வெளிநாடு போற சான்ஸும் இருக்கு. அரசியல்வாதிகளுக்கு நல்ல திருப்பம் இருக்குன்னாலும் தொழிலதிபர்களுக்குச் சிறு சிறு தொல்லைகளைச் சமாளிக்க வேண்டி வரும். ஷேர், பந்தயம், ஸ்பெகுலேஷனெல்லாம் வேண்டாம். புதிய சினேகிதங்க கிட்ட உஷாரா இருங்க. பெண்கள் உடல் நலத்துல கவனம் செலுத்தணும்.

**துலாம்** : (சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)

எடுத்த காரியமெல்லாம் ஜெயிக்கும்னு



சொன்னா குடும்பமே குதூகலத்தில் குதிக்காதா! கூடவே சுபகாரியங்களும் நடக்கும்னு சொன்னா சந்தோஷத்துக்குக் கேட்கணுமா என்ன? தூரத்துச் செய்தியொன்று நல்ல பலனைக் கொண்டு வரும். வீடு, நிலம் மூலம் ஆதாயம் கிடைக்கும். இது வரைக்கும் இருந்த பணக்கஷ்டம் மறைந்து, வராத கடன் பாக்கி எல்லாம் வந்து சேரும். பெண்கள், புடைவை, நகை, மிக்ஸின்னு வாங்கற சான்ஸ் இருக்கு. கன்னிப் பெண்களே, உங்களைக் கன்னிகாதானம் பண்ண உங்க பேரண்ட்ஸ் ரெடியா வாங்க. அரசுப் பணியாளர்களுக்கு புரமோஷன் சான்ஸ் இருக்கு.



**விருச்சிகம்** : *(விசாகம் 4- ம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய)*

வார ஆரம்பத்தில் நல்ல பலன்கள் கிடைக்கும். பின் பகுதியில் உங்க எதிரிங்க முழிச்சுக்குவாங்க. மனகல குழப்பம் வந்து கலக்க ஆரம்பிச்சிடும். அரசியல்வாதிகளுக்கு இந்த வாரம் ஏமாற்றமே மிஞ்சும். மாணவர்களுக்கு மந்தமான மனநிலை வரும். அதை உதறித் தள்ளிட்டுப் படிங்க. இல்லேன்னா சிக்கலாயிடும். கொடுக்கல், வாங்கலெல்லாம் இந்த வாரம் வெச்சுக்காதீங்க. நீங்க சும்மா இருந்தாக்கூட ஜாமீன், கோர்ட் விவகாரம்னு வர்ற சான்ஸ் நிறைய. உஷாரா இருங்க. பேச்சுல நிதானம் காட்டுங்க. பணவிஷயம் மாத்திரம் ஓரளவு திருப்திகரமாவே இருக்கும். இது ஒண்ணுதான் ஆறுதல் இந்த வாரம்.



**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

எடுத்த காரியங்களில் சிறு சிறு தடைகள் ஏற்பட்டாலும் கடைசியில் ஜெயிக்கப் போறது நீங்கதான். அரசியல்வாதிகளுக்குப் புதிய பாதை ஏற்படும். கலைத்துறையில் உள்ளவர்களுக்கு வெற்றிக்கே நிறைய சான்ஸ் இருக்கு. பெண்களுக்கு உற்சாகமான சூழ்நிலைதான் என்றாலும் மாணவர்கள் உஷாராப் படிக்கணும். தாயார் உடல் நலத்தில் கவனம் செலுத்துங்க. வாகனங்கள் மூலம், கஷ்டமோ, நஷ்டமோ வர்றதுக்கு சான்ஸ் இருக்கு. வீடு, மனை, ரியல் எஸ்டேட் எதுவுமே இந்த வாரம் வேண்டாம். புதிய தொழில் முதலீடு எதுவும் வேண்டாம். வியாபாரிகளும், உத்வேகத்தோடு செயல்பட்டால்தான் நன்மை கிடைக்கும்.



**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

கோர்ட் வழக்கு ஏதாச்சும் இருக்கா? இந்த வாரம் ஜெயிச்சிடுவீங்க. விவசாயிகள், சமுதாயப் பணியாளர்களுக்கு நல்ல முன்னேற்றத்துக்கான சான்ஸ் தெரியுது. பொருளாதார நிலையில் அபிவிருத்தி இருக்கு - எல்லோருக்குமே இதுவரை நிறைவேறாத ஆசை ஏதாவது இருந்தா, இந்த வாரம் கட்டாயம் நிறைவேறும். பெற்றோருக்குப் பிள்ளைகள் பெருமை சேர்ப்பாங்க. அரசியல்வாதிகளுக்கு எதிரிங்க இருந்தா ஓடி ஒளிஞ்சுக்குவாங்க. உங்களோட தம்பியோ, தங்கையோ கல்யாணமாகாம இருந்தாங்கன்னா, இந்த வாரம் அதுக்குப் பிள்ளையார் சுழி போடப்பட்டு விடும்! ஸ்பெகுலேஷன், பந்தயம் மாத்திரம் வாரக் கடைசியிலதான் வெற்றி தரும்.



**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

தேக ஆரோக்கியத்துல கவனம் காட்டுங்க. கிரக சஞ்சாரங்கள் அப்படி. பொதுவாவே இந்த வாரம் நீங்க, எச்சரிக்கையாத்தான் இருக்கணும்னாலும் முதல் மூணு நாட்கள் ரொம்ப ரொம்ப எச்சரிக்கையா இருக்கணும். இது ரொம்பவும் சாதாரணமான வாரம்கிறதால, அலைச்சல், அதிக உழைப்பு, மனக்குழப்பம், வெறுப்புணர்ச்சி எல்லாமே வரும். பேச்சுல நிதானம் காட்டலேன்னா அதிலேயும் சிக்கல்கள் வந்திடும். மின்சாரம், காஸ், இயந்திரங்களைப் பயன்படுத்தறபோது எச்சரிக்கையாக இல்லேன்னா விபத்துகளுக்குச் சான்ஸ் இருக்கு. இந்த வாரம் உங்க ஆசைகள் எதுவா இருந்தாலும் யோசிக்காம தள்ளிப் போட்டுடுங்க. அதான் நல்லது.



**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

நல்ல பலன்களைக் குறைக்கிறபடியான கிரக சஞ்சாரம் உங்களுக்கு. பண விரயம், கைப் பொருள் இழப்புக்கு சான்ஸ் இருக்கு. ரோட்டுல சாதாரணமா நடந்து போனாக்கூட காலில் அடிபடும். சிலருக்கு சாலை விபத்துகளுக்கும் வாய்ப்பு இருக்கு. பொதுவாச் சொல்லணும்னா உடல் ஆரோக்கியத்துல கவனமா இருங்க. சிலருக்கு கண் சிகிச்சை, அறுவைச் சிகிச்சை அளவுக்குக் கூட சான்ஸ் தெரியுது. ஏற்றுமதி இறக்குமதியாளர்களுக்கு ஓரளவுதான் லாபம் வரும். சிறு பயணங்கள் போகத் தடையில்லேன்னாலும், தூர தேசப் பயணத்தைத் தள்ளிப் போடறதுதான் நல்லது. செலவு கூடறதால கடன் ஏற்படவும் சான்ஸ் இருக்கும். ஜாக்கிரதையா செயல்படுங்க.



மகர ராசிக்காரரான டெண்டுல்கருக்கு, நிறைவேறாத ஆசை ஏதாவது இருந்தா இந்த வாரம் நிறைவேறிடுமாம்!

# இன்று வாழ்வோம் வா!

"அந்தக் குறுந்தாடியை நீயே கொன்று விட்டு குப்தா மேல் பழிபோடுகிறாயா?" என்று உறுமினார்.

"நான் ஏன் கொல்ல வேண்டும்?" இருவருக்கும் இடைவெளி ஆறு அடி இருக்கலாம்.

"உங்களுக்கு குப்தா வார்த்தையில் நம்பிக்கை இல்லையா?" என்றான் அமைதியாக.

"உண்மையில் குறுந்தாடி யாரென்று தெரியாதா உனக்கு...."

ஹாண்ட்ஸ் அப். ஹாண்ட்ஸ் அப். ஹாண்ட்ஸ் அப். இன்னமும் நம்ப முடியாத ஜீவா மனதிற்குள் தொடர் எதிரொலிகள். வாழ்வின் பலத்த அதிர்ச்சி. சொன்னது ஆத்மாதானா! அவர் கையிலிருப்பது, உயிர் பறிக்கும் துப்பாக்கிதானா?

ஆத்மா யார்? இந்திய உளவுத் துறையின் கடவுள்! அவனுக்குச் சகலமும் பயிற்றுவித்த ஆசான். அவரா... அவரா.... இனி, எவரைத் தான் நம்புவது... தான் ஒரு தவறும் செய்ய வில்லையே...

ஜீவா அதிர்ந்திருந்தது சில வினாடிகள்தான். சட்டென்று உள்ளுக்குள் சுதாரித்துக் கொண்டான். எதிரிலிருப்பது ஒரு துப்பாக்கி. அதைப் பிடித்திருப்பது ஆத்மா. இருக்கட்டுமே. ஆத்மாவோ... அவரின் அப்பாவோ... எவ்ராக இருந்தால் என்ன? ஒரு துப்பாக்கி என்பது துப்பாக்கியே! சடுதியில் உயிர் குடிக்கும் சமாசாரம்! ஜீவாவை மிரட்ட அனுமதிக்க முடியாது. கைகளை உயரத் தூக்கியிருந்தான். என்ன செய்யலாம்....

"நீ சொன்னதெல்லாம் உண்மைதானா?" என்றார் மிரட்டலாக.

"உண்மைதான் பாஸ்!" ஆத்மா நின்ற வாக்கில் வாசல் கதவுக்கு முதுகு காண்பித்த படி இருந்ததைக் கவனித்தான் ஜீவா.

உள்ளுக்குள் ஒரு ஸ்விட்சு அழுத்த, ஜீவா முகத்தில் திடுமென்று அதீத மகிழ்ச்சி! "பிரச்னை தீர்ந்தது பாஸ்!"

"என்ன சொல்கிறாய்?"

"அதோ! குப்தாவே வருகிறானே!" என்றான் பரவசமான குரலில்.

ஆத்மா முகத்தில் வியப்பு, சற்றே. தன் முகத்தைத் திருப்பியது, லேசாகவே. தன்னை மீறிய அனிச்சை செயலாகவே. எல்லாம் சில சிறு நொடிகளுக்குள்ளாகவே. காத்திருக்கும் ஜீவா மாதிரி தேர்ந்தவனுக்கு இதுவே அதிகம்!

"பொய் பாஸ்!" என்று திடீரென்று எழுந்த அஷோக்கின் குரல் பூர்த்தியாவதற்குள் –

சிறுத்தை போல் பாய்ந்திருந்தான் ஜீவா பிறகு, ஒரு டைவ். கிரிக்கெட் ஆட்டக்காரர் போல, காற்றில் மேலெழும்பி துப்பாக்கியைக் கவர்ந்து கொண்டான்!

"சாரி பாஸ்!" என்றான் ஜீவா புன்முறுவலுடன். "நீங்கள் கற்றுக் கொடுத்த வித்தை!" என்றவன் துப்பாக்கியை தன் பாக்கெட்டுக்குள் செருகிக் கொண்டான்.

ஆத்மாவும் சிரித்து விட்டு, "சபாஷ் ஜீவா! அன்று போல் இன்றும் மாறாத அதே மின்னல் வேக ரிஃப்ளக்ஸ்!"

"இருக்கட்டும்! அது எப்படி அஷோக் குரல் கொடுத்தான்!" என்று திரும்பிய ஜீவா

10 பத்மா ரவிசங்கர்

வியந்தான். "வீர்யம் இல்லாத மருந்தா? எப்படி மயக்கம் தெளிந்தான்?"

அஷோக் கண்ணடித்துச் சிரித்தான்.

"நான் வைத்தது வெறும் கர்ச்சிப்! அவனும் மயக்கத்தில் துவண்டது போல் நடித்தான்!"

"அப்படியானால்..." உளவுத் தாத்தாவுக்குப் பைத்தியமோ என்பது போல் பார்த்தான்.

"அந்த சோப்னாங்கியின் கட்டுக்களை அவிழ்த்து விடு என்கிறேன்!"

ஜீவா புரியாமலே சென்றான். வியப்பு விலகாமலே கட்டுக்களை அவிழ்த்தான்.

"நன்றி ஜீவா சார்!" என்ற அஷோக் கை கால்களை உதறிக் கொண்டான். "எவ்வளவு உறுதியாகப் பிணைந்திருந்தீர்கள்!"

"சும்மாவா அஷோக்... அப்போது என்னிடம் இருந்தவர்களில் ஜீவா ஒரு நட்சத்திர நரி!" என்று பெருமிதமுடன் சிரித்தார்.

"உண்மைதான் பாஸ்! அவரிடம் நிறைய கற்றுக் கொள்ள முடிந்தது. ஒரு தகுதியானவரிடம் தோற்றதில் எனக்கு வருத்தமில்லை!" என்றான் அஷோக்.

"அப்படியானால் இவர்... நம் துறையைச் சேர்ந்தவரா?"

"ஆம் ஜீவா! அஷோக், இளம் இந்திய உளவாளி!"

ஜீவா சில வினாடிகளை மௌனமாக ஜீரணித்தான்.

"ஏன் வெற்றாக மிரட்டினீர்கள்? உங்களுக்கு என் வார்த்தையில் நம்பிக்கை இருக்கிறது பாஸ்!"

"எப்படிச் சொல்கிறாய் ஜீவா?"

"குப்தா வருகிறான் என்றதும் திரும்பினீர்களே! அப்படி எல்லாம் சட்டென்று ஏமாறக்கூடியவரா எங்கள் ஆத்மா! துரோகம் நினைக்காத ஜீவாவின் வார்த்தையில் உள்ளுக்குள் இருக்கும் மதிப்பு...!"

"சரிதான்!" என்று தலையசைத்த ஆத்மா பெருமூச்சுடன், "இக்காலத்தில் எவரை நம்ப முடிகிறது? மனம் மாற, துரோகம் இழைக்க, பணம் பெண் போதை மருந்துகள் என எவ்



வளவு விஷயங்கள்! உன்னைப் பார்த்து எவ்வளவு வருடங்கள்.... நீயும் மாறி இருக்கலாம்...!''

"தாய்த்திரு நாட்டிற்குத் துரோகம் செய்வது இருக்கட்டும் – நினைப்பது கூட...'' ஜீவா முகத்தில் வேதனை "வேண்டாம்! விடுங்கள். நான் அந்த ரகமில்லை. இதுவரை நடந்ததாக நான் சொன்னது யாவும் சத்தியம். ஏன் குப்தாவிடம் கேட்டு உறுதி செய்து கொள்ளலாமே...''

"குப்தாவை யாரென்று நினைத்தாய்?'' என்ற ஆத்மா நிதானமாக அந்தக் குண்டை எடுத்து வீசினார்.

ஜீவாவுக்குத் தலை சுழன்றது. சுழலும் பூமி நின்றது. நின்றவன் தொப்பென்று சேரில் அமர்ந்தான். அதிர்ந்திருந்தான், பலமாக. என்ன ஓர் ஏமாற்று! உடனிருந்து கொண்டே– "என்ன.... என்ன சொல்கிறீர்கள்?''

"தற்போது குப்தா ஒரு தீவிரவாதி! அவன்தான் கழுகுக் குழுவின் தலைவன்!'' என்றார் திரும்பவும். "நம் துறையை விட்டு நீ சென்ற இரண்டு வருடங்கள் கழித்து அவனும் விலகி விட்டான்! மிக புத்திசாலித்தனமாக!''

"எப்படி?''

"ஒரு ஆபரேஷனின் போது ஒரு பிணம் கிடைத்தது; கவனமாக அவசியமான இடங்களில் சிதைந்திருந்த நிலையில்....''

"பிரேதத்திற்கு குப்தாவின் ஆடை, பிற அடையாளங்களா?''

"ஆம்! குப்தா உளவுக் களத்தில் இறந்து விட்டான் எனத் திறமையாக நம்ப வைத்து மறைந்து விட்டான்! பிறகு, குப்தாவின் திரை மறைவு லீலைகள், தீவிரவாத வேலைகள் தொடங்கின. பெரும் பணத்திற்காக வேலை செய்யும் கழுகுக் குழு அவன் தலைமையில் தான்!''

"அப்போது அந்தக் குறுந்தாடி?''

"அவனும், முறுக்கு மீசையும் நம் உளவுத் துறை ஆட்கள்தான்!''

சிலை போல சமைந்திருந்தான் ஜீவா. சிறிது நேரம் கனத்த அமைதி. பின் –

"ஆல்ரைட். என்னைச் சுத்தமாக முட்டாளடித்து விட்டான்! மீதிக் கதையையும் சொல்லுங்கள்.''

''வருத்தப்படாதே ஜீவா! உன்னைப் போல் பலர் ஏமாந்திருக்கின்றனர். இதில் நம் உளவுத் துறையும் அடக்கம்!' எங்கே இருந்து கொண்டு செய்கிறான்? எவரெவர் அவனிடம்? எதுவும் தெரியாது. வேண்டும் போது, ஒரு சில மாஜி உளவாளிகளைக் கூட உபயோகப்படுத்தி இருக்கிறான் என்று தகவல்; நைச்சியமாக அணுகி நம்பிக்கை ஏற்படுத்தும் தொடர்பு; நட்பு பாராட்டுவதும் சுலபம். காரியம் முடிந்ததும், சிலரைக் கழுக்கமாகத் தீர்த்திருக்கிறான். வேறு சிலரை விலை பேசி அல்லது பிளாக்மெயில் போல் மிரட்டி ரகசியமாகத் தன் வேலைகளுக்குத் தக்க வைத்திருக்கிறான். நீயும் பால் மாறி விட்டாயா என்னும் சந்தேகம் இருந்தது....

நீர் பருகி விட்டு ஆத்மா தொடர்ந்தார்.

''சென்னையில் தற்செயலாக நம் ஏஜெண்ட் ஒருவன் கண்ணில் குப்தா பட்டு மறைந்தான்! குப்தா என்றாலே ஏதோ சதி, எவருக்கோ சமாதி என்றுதான் அர்த்தம்! குப்தாவின் குறி தெரியாமல் குழம்பினோம். உன் ஞாபகம் வந்தது. உன்னைத் தொடர்பு கொள்வான் என்றும் தோன்றியது...''

"Long shot! அது அதீத யூகம் என்று படவில்லையா பாஸ்?''

"இல்லை ஜீவா! உற்றுக் கவனித்தால் எதிலும் ஒரு pattern இருப்பது புலப்படும். குப்தாவிடமும் இருந்தது. சில இந்திய மாஜி, மற்றும் பல 'பலான' நாட்டு உளவாளிகள், தீவிரவாதிகள், கிரிமினல்கள் போன்றோருடன் தொடர்பு. எப்போதும் பின்புலத்தில் இருந்து கொண்டுதான் அவன் செயல்பாடு. ஆனால், எப்போது எங்கிருந்து என்பது மட்டும் தெரியாத ரகசிய ஆபரேஷன்கள் அவை! அதனால்தான் அவனைப் பிடிக்க முடியாமல் திணறினோம். குப்தா திறமையான உளவாளியாயிற்றே...''

ஆத்மாவிடம் வறண்ட புன்னகை! "அவனைப் பிடிக்க சென்னையில் முதல் முறையாக நல்ல சந்தர்ப்பம் என்று நினைத்துக் குறுந்தாடியை விட்டு உன் வீட்டை வேவு பார்க்கச் செய்தேன்!''

''ஆனால் குப்தா வெகு புத்திசாலி. பின் தொடர்ந்த, வேவு பார்த்த இந்திய உளவாளிகளை கழுகுத் தீவிரவாதிகள் என்று பினேட்டை மாற்றிப் போட்ட அவன் சாமர்த்தியம்!'' என்று வியந்தான் ஜீவா. "குறுந்தாடியையும் தீர்த்து விட்டு என்னையும் மிரட்டிப் பல மாங்காய் அடித்திருக்கிறான்! ஆ! ஞாபகம் வந்து விட்டது!'' என்றவன் விரல் சொடுக்கினான்.

"என்ன ஜீவா?''

''அன்று நடுநிசியில் காரில் பிணத்துடன் சென்ற பயணத்திற்கு ஒரு சாட்சி இருக்கிறது!''

"சுவிட்!''

''எஸ் பாஸ்! அன்று எங்களை வழி மறித்து விசாரித்தவர் கமிஷனர் சாமுவேல்!

## பக்தர்களின் தேவையறிந்து புதுப்புது சுற்றுலாக்களை அமைத்துவரும்

## தமிழ் நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் வழங்கும்

# சோழநாட்டு திருப்பதிகள் சுற்றுலா

**சுற்றுலா சேரும் திருத்தலங்கள்**

- சீர்காழி • திருநகரி
- திருநாங்கூர்
- திருவெள்ளகுளம் (அண்ணன் கோவில்)
- திருவிழுந்தூர்
- திருக்கண்ணபுரம்
- திருநாகை
- திருக்கண்ணமங்கை
- திருச்சேறை
- திருநறையூர் (நாச்சியார் கோவில்) • திருவிண்ணகர் (ஒப்பிலியப்பன் கோவில்)
- கும்பகோணம்
- திருக்கண்டியூர்
- தஞ்சாவூர்
- திருக்கரம்பனூர் (உத்தமர்கோவில்)
- திருவெள்ளரை
- திருக்கோழி (உறையூர்)
- திருவரங்கம் (ஸ்ரீரங்கம்)



திருவிண்ணகர் (ஒப்பிலியப்பன் கோவில்). ஒப்பும் உவமையும் இல்லாத இறைவனான அருள்மிகு ஒப்பிலியப்பன்.



திருநறையூர் (நாச்சியார் கோவில்). பல்லாயிரக் கணக்கான பக்தர்களுக்கு பரவசமூட்டும் அருள்மிகு ஸ்ரீனிவாசப் பெருமாளின் வாகனமான கல்கருடன்.

## ஆழ்வார்கள் போற்றிப்பாடிய 108 திவ்விய தேசங்களில் 21 திருக்கோயில்களுக்கு ஆன்மீக உலா

- மாதம் இருமுறை ( முதல் மற்றும் மூன்றாம் வெள்ளிக்கிழமைகளில்) சென்னையிலிருந்து புறப்பாடு.
- கட்டணம் : நபர் ஒருவருக்கு ரூ. 750/- (2 நாட்கள் தங்கும் வசதி உள்பட).
- குழுச்சுற்றுலா பயணிகளுக்கு சிறப்புச்சலுகைகள், மற்றும் அவர்கள் விரும்பும் தேதியில் சுற்றுலாவை ஏற்பாடு செய்து கொள்ளும் சிறப்பு வசதி.

முழுவிவரங்களுக்கும் முன்பதிவிற்கும் :
**தமிழ் நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம்**
4, ஈ.வெ.ரா. பெரியார் சாலை, (மத்திய ரெயில்வே நிலையம் எதிரில்), சென்னை - 600 003.
போன் : (044) - 560294 / 584356 / 8547335 / 8547344. டெலி∴பெக்ஸ் : 561385
**INTERNET WEB SITE ADDRESS : http : II www tamilnadu tourism. com**

DIPR / 285 / DDS / 98

அவரிடம் கேளுங்கள். குப்தா என்னுடன் இருந்ததை அவர் உறுதிப்படுத்துவார்."

"குட்! தட் க்ளியர்ஸ் யூ. மீதி விஷயங்களை நான் பார்த்துக் கொள்கிறேன்! கழுகுகளின் திட்டமாக என்ன சொன்னான்?"

"சென்னையில் சில கொலைகள்! soft targets! முதல் குறி டாக்டர் அப்துல் ஜலால்! என் நண்பர்."

"ஆக, அவர்தான் அவன் குறியா? அந்தக் கம்ப்யூட்டர் மேதை உன் நண்பரா? அது தான் உன் வழியாக அவரை நெருங்கி முடித்து விடத் தீர்மானித்திருப்பான்! இப்போது உன் மூலமாக விஷயம் தெரிந்து விட்டது. உஷாராகி விடுவோம் என அவனுக்குத் தெரியும். டாக்டரை நெருங்குவதைக் கை விட்டிருப்பான். இருந்தும் அலட்சியம் ஆகாது."

ஆத்மா தொலைபேசியில் சில தொடர் உத்தரவுகளைப் பிறப்பித்தார். "இனி குப்தா



**சினிமா உலகில் மனோரமாவை ஆச்சி என்று குறிப்பிடுவார்கள். செட்டிநாட்டு பாட்டிகளைத்தான் ஆச்சி என்பது வழக்கம். ஆனால், மனோரமா செட்டிநாட்டைச் சேர்ந்தவரா? இல்லை! அப்பகுதியில் இயங்கி வந்த வைரவன் நாடக சபாவில் நடித்து வந்தவர்தான் மனோரமா. மற்றபடி பலர் நினைத்துக் கொண்டிருப்பது போல் மனோரமா நிஜமான செட்டிநாட்டு ஆச்சி அல்ல! – ஜிண்டு**

வால் டாக்டரை நெருங்கவே முடியாது! உடனடியாக பக்காவான பாதுகாப்பு ஏற்பாடாகி விட்டது!"

அவர் முகத்தில் நிம்மதி வந்தது.

ஆத்மா, "முதலில் என் ஆட்கள் மூலமாக குப்தா பற்றி உன்னை எச்சரிக்கலாம் என்று சில முயற்சிகள் செய்தோம். பிறகு, குப்தாவின் திட்டத்தில் உனக்கு எவ்வளவு தூரம் பங்கு? ஏற்கெனவே அவனுக்கு உதவும் கழுகா என்றும் புரியவில்லை. காத்திருக்க முடிவு செய்தோம். ஒரு தங்கமான சந்தர்ப்பத்தில் உன் மூலமாகவே அவனை வளைக்கவும் எண்ணியிருந்தோம்..."

"அதனால்தான், இங்கே தென்பட்ட முறுக்கு மீசையைப் பிடிக்க முனைந்த என்னைத் தடுக்க முனைந்தீர்களா?"

"ஆம் ஜீவா! தற்செயலாக நீ இந்த ஹோட்டலைத் தேர்ந்தெடுத்ததும் மகிழ்ந்தோம். இங்கே தேசப்பற்றுள்ள நிர்வாகம். கலப்படமில்லாத ஒத்துழைப்பு. பொறி வைக்கத் தொடங்கினோம். ஆனால் அஷோக்கை திடுதிப்பென்று நீ தடாலடியாகப் பிடித்து விசாரித்தது எவருமே எதிர்பாராதது. குப்தாவின் குட்டு உனக்கு வெளிப்படும் அபாயம்; நம் ஏஜெண்ட்டுகள் இந்த ஹோட்டலில் வளைத்து விட்டார்களோ என்ற அவன் அச்சம்; விலாங்கு மீன் பயல் நைஸாக நழுவி விட்டான்! மாறு வேடத்தில் சென்று மண் தூவியிருக்க வேண்டும்! சே! தவற விட்டோமே! இனி இம்மாதிரி ஒரு சான்ஸ் கிடைக்குமா? அவ்வளவுதான். கமுக்கமாக மாயமாகி விட்டான்!"

ஜீவா அப்படி நினைக்கவில்லை. விரைவில் குப்தா என்னும் கோபப் புயல் தாக்கக் கூடும் என்று எதிர்பார்த்தான்.

"அஷோக்! எனக்கு ஒரு சந்தேகம்?"

"கேளுங்கள் ஜீவா சார்!"

"டயரில் சில்மிஷம் செய்து பாண்டிச்சேரியில் உங்களைத் தலை முழுகிய பிறகும், எப்படி மதுரையில் எங்களைப் பிடிக்க முடிந்தது?"

"சிம்பிள் சார்! ஏறக்குறைய உங்கள் டெக்னிக்தான். நீங்களும், குப்தாவும் ரெஸ்டாரெண்ட் உள்ளே இருக்கையில் பாண்டிச்சேரியில் உள்ள எங்களின் வேறொரு ஏஜெண்ட் வந்து பார்க்கிங்கில் இருந்த உங்கள் காரில் ஒரு சென்சிடிவ் மைக் மறைத்து வைத்து விட்டுச் சென்றான்!"

"கிரேட்! பிறகு, பின்தொடர்வது உங்களுக்கு எளிதுதான்!"

"எஸ் சார்! அது அளித்த சிக்னலின் தெம்பில் கண் காணாமல் வெகு தொலைவிலிருந்து கொண்டே ஃபாலோ செய்தோம்! உங்கள் பேச்சைக் கூடக் கிரகிக்க முடிந்தது!"

ஆத்மா எழுந்து கொண்டார். ஜீவாவின் கரம் பற்றிக் குலுக்கினார். "இப்போதே நான் வான் வழியாகச் சென்னை செல்கிறேன். சில நாட்களுக்கு அங்கேதான் இருப்பேன்" என்றவர் ஒரு தொலைபேசி எண் தந்து விட்டு, "ஏதும் பிரச்னை, உதவி எதுவும் தேவை எனில் இந்த எண்ணில் என்னைத் தொடர்பு கொள்ளலாம். விரைவில் உன்னைச் சென்னையில் சந்திக்கிறேன்!" என்று கண் சிமிட்டினார்.

ஆத்மாவும், அஷோக்கும் விடைபெற்றுப் புறப்பட்ட நான்கு மணி நேரத்தில் –

மகன் கௌதம் கடத்தப்பட்ட இடிச் செய்தி ஜீவாவுக்குக் கிடைத்தது!

(தொடரும்)


மணிமணியா கோத்த முத்து,
மாலையானது...
சிறுகச் சிறுக சேமித்த பணம்
"மணிமாலா" ஆனது.

# வாழ்க்கையே அவர் தந்த செய்தி!

எங்கள் கிராமத்தை நினைத்து விட்டால் மனத்தில் ஒரு மகிழ்ச்சி; ஒரு அசாதாரணமான பாதுகாப்பு, ஒரு அமைதி போன்ற எண்ணங்கள் நிறைகின்றன.

அன்புடன் எங்களை எங்கள் பெற்றோர் வளர்த்தார்கள்; உருவாக்கினார்கள். அந்தப் பாதுகாப்பும் பாசமும்தான் அடித்தளம் அமைத்தது. அதற்கு மேலும் ஒரு அற்புதமான சூழ்நிலை எங்கள் ஊரில் இருந்தது. ஒரு சிவன் கோயில், ஒரு பெருமாள் கோயில். காவிரி பாயும் ஊர் என்றும், காவலுக்கு அய்யனார்கோவில், மழைக்கு மாரியம்மன் கோவில், வேத பாராயணங்களுக்கு அக்கிரஹாரம், அதேபோல பூஜை செய்பவர் வாழ்கின்ற பூசாரித் தெரு, தச்சர் தெரு. கொல்லர் தெரு, உடையார் தெரு, செட்டித் தெரு. இடையர் தெரு, இசை வேளாளர் தெரு என்று ஒரு அழகிய கிராமம்.

ஊரைச் சுற்றி ஹரிஜனக் குடியிருப்புக்கள். அதன் பெயரைக் கேட்டாலே ஆச்சரியமாயிருக்கும். ஒரு ஹரிஜன் குடியிருப்புக்குப் பெயர் மேல் அக்ரஹாரம்!

எங்கள் இனத்திற்கென்று ஒரு குரு பீடம். அதுதான் குரு ஞான சம்பந்தர் தோற்றுவித்த தருமபுரம் மடம். என் பெற்றோருக்கெல்லாம் தீட்சை கொடுத்துக் குரு உபதேசம் செய்த இடம் அதுதான்.

இப்படி எங்கள் ஊரை ஒரு லட்சிய கிராமம் என்று சொன்னால் மிகையாகாது.

திருஞான சம்பந்தர் வருகிறார். காவிரியில் வெள்ளம். கரையைக்




காவிரியில் தண்ணீர் வருகிறது என்றால் அந்த நுங்கும் நுரையுமாக வரும் புது வெள்ளத்தைப் பார்க்கவே கூட்டமாய் ஓடுவோம். ஊரின் நடுவே காவிரியிலிருந்து பிரிந்து வரும் சத்தியவாணன்வாய்க்கால் பெயரைக் கவனியுங்கள்! சத்தியமாக வாழ்பவர்கள் வாழும் ஊர்! எப்படி!

கடந்துதான் ஊருக்கு உள்ளே வர வேண்டும். 'எந்த இடத்தில் இறங்கினால் ஆழமில்லாமல் சுழல்கள் இல்லாமல் இருக்கும்' என்று யோசிக்கிறார். அப்போது அங்கே ஒரு பிராமணச் சிறுவன் வருகிறான். அக் கரையில் நிற்கும் சிறுவன் "அந்த விழல் – ( ஒருவகை தர்ப்பை போன்ற புல்) – வளர்ந்திருக்கிறதே அதன் வழியாக இறங்குங்கள்" என்று கூறுகிறான். ஞானசம்பந்தர் வெகு எளிதாக இறங்கி ஆற்றைக் கடக்கிறார். வழி காட்டிய சிறுவன் காவிரி கரை வழியே தன் வேலை



யைப் பார்த்துக் கொண்டு போய் விடுகிறான். கரையேறி வந்த திருஞான சம்பந்தர் "அப்பனே! சரியாக வழி காட்டினாய்! என்று நன்றி சொல்ல ஆளைத் தேடுகிறார். பையன் இல்லை! தேடுகிறார். ஆளைக் காணோம். "அடடா! இப்படி நான் என் அப்பனைக் கோயிலில் காணத் தவித்துக் கொண்டிருந்தபோது, ஆண்டவனே இந்தச் சிறுவனை அனுப்பி எனக்கு வழி காட்டி இருக்கிறான்!" என்று நெஞ்சமெல்லாம் நன்றியால் நிறைய, கை கூப்புகிறார். எனவே தான் கோயில் சுவாமிக்கு – மூலவருக்கு – துறைகாட்டும் வள்ளலார் என்று அடைமொழியுடன் பெயர் ஏற்பட்டது.

இன்னமும் கோயிலிலே தலவிருட்சமாக கோயில் உள்பிராகாரத்தில் விழல் அங்கே வளர்க்கப்பட்டு வருகிறது. கோயிலுக்கு வரும் பக்தர்கள் அனைவரும் அங்கே 'தனக்கும் வழி காட்ட வேண்டும்' என்று வேண்டிக் கொண்டு விழலில் ஒரு முடிச்சைப் போட்டு விட்டுப் போவார்கள்.

நம்பிக்கைதான்! நம்பிக்கையை லேசாக



எண்ணி விடாதீர்கள். ஒரு எண்ணமானது மனத்தில் வேர் விட்டு ஆழமான நம்பிக்கையாகும்போது எண்ணச் சக்திக்கு வலிமையேற்படுகிறது; நாளடைவில் புலன்களுக்கு அப்பாற்பட்ட எண்ண சக்தி புலன்களுக்குப் புரியும் வகையில் பொருள் வடிவம் பெறுகிறது. – நமது எண்ணங்கள் இந்தப் பொருளாலான உலகில் இப்படித்தான் நிறைவேறுகின்றன என்று நம்பிக்கையின் வலிமை பற்றி ஹார்வர்டு பல்கலைக் கழக மனவியல்



# நான் தஞ்சாவூர்க்காரனுங்க!

ஆராய்ச்சியாளர் ஹெர்பர்ட் பென்சன் கூறுகிறார்.

என் தந்தைக்குச் சொந்த ஊர் விளநகரிலிருந்து மூன்று கிலோமீட்டர் தொலைவில், காவிரிக்கு மறுகரையில் உள்ள, கருவாழைக்கரை. அந்த ஊர் ஆற்றங்கரையில் என் தந்தை நிறுவி வழிபட்ட பிள்ளையார் சிலை பல காலம் இருந்தது. இப்போது ஊருக்குள் அதற்கு ஒரு கோயில் கட்டி வைத்திருக்கிறார்கள். இதனால் அந்தப் பிள்ளையாரை என் தந்தையின் பெயர் சூட்டி அவர் வழிபட்ட பிள்ளையார் என்றே சொல்லி வந்திருக்கிறார்கள்.

எனது பெரியப்பா துரைசாமி மிகுந்த கெட்டிக்காரர் என்றும், சுமார் இருபது கிலோமீட்டர் சுற்றுவட்டாரத்தில் மளிகைக் கடைப் பொருளை விற்கும் மொத்த வியாபாரம் செய்து வந்தார் என்றும், நிறைய சம்பாதித்தார் என்றும் சொல்லி இருக்கிறார்கள். தன் தம்பிக்கு உள்ளூர் வியாபாரம் செய்யச் சொல்லி அருகிலுள்ள விளநகரில் கடை வைத்துக் கொடுத்தார்.

என் தந்தை மிகுந்த சாந்த குணம் கொண்டவர். எனினும் வியாபாரத்தின் நுணுக்கம் தெரிந்தவர். விளையும் காலத்தில் நெல்லானாலும், கடலை, துவரை, உளுந்து எள் என்று எது ஆனாலும் நல்லதாகப் பார்த்து வாங்கி ஒரு ஏழெட்டு மாதம் கழித்து அதை விதை நெல்லாக, விதை எள்ளாக விற்பார்கள். அதுவன்றி ஊரில் எங்களுக்கு மளிகை கடை இருந்தது.

ஒரு சமயம் இப்படிக் கடலையை (மணிலாக் கொட்டை) பெரிய அளவில்

**டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி**



"காலம் எவ்வளவு தூரத்துக்கு முன்னேறிடிச்சு பாருப்பா..."

"என்னடா சொல்றே?"

"என் பையனோட பத்தாங் கிளாஸ் சரித்திர பரீட்சையில, "வெடிகுண்டு கலாசாரம்' சிறு குறிப்பு வரைக''ன்னு கேள்வி கேட்டிருக்காங்களாம்!"

— சீர்காழி ரேவதி

---

வாங்கி வீட்டிலே தூண்களில் மரச் சட்டம் அடித்துக் கொட்டி வைத்திருந்தார்கள். துரதிர்ஷ்டவசமாக வாங்கிய கடலைப் பிஞ்சு, கடலையாகிப் போக- வாங்குகின்ற எல்லா மூட்டைகளையும் சோதித்துப் பார்க்க முடியாது - முழுக்கடலையும் பூசாணம் பிடித்து வீணாகிப் போயிற்று.

முதலீடோ எழுநூறு ரூபாய். 1920ல் மிகப் பெரிய பணம். இரண்டு மூன்று மாதங்களில் கொள்முதலுக்குப் பணமில்லை. நெருக்கடி. பொருளைக் கொடுத்தவர்களுக்கும், பணத்தைக் கடனாகப் பெற்றவர்களுக்கும் பணம் கொடுக்க வேண்டிய பொறுப்பு.

மிகுந்த பண நெருக்கடியையும், மன நெருக்கடியையும் அவர் சமாளித்திருக்க வேண்டும் - "என் தந்தையால் இனி வியாபாரம் செய்ய முடியாது" என்று எண்ணிய சிலர், பணத்தை உடனடியாகத் தங்களுக்கு முதலில் கொடுத்து பைசல் செய்யுமாறு நம்பிக்கையின்றி நெருக்கி இருக்கிறார்கள். என் தந்தை எல்லோருக்கும் கொடுக்க முற்பட்டு, எதிர்வீட்டில் இருந்த முத்துக் குமரன் என்பவருக்குத் தான் பெற்ற கடனுக்கு ஈடாகத் தான் அணிந்திருந்த மூணு பட்டை வெள்ளி அரைஞான் கயிற்றைக் கொடுத்ததாகவும், அவர் அதை வாங்க மறுத்து, "ஐயா, உங்கள் மீது எனக்கு நம்பிக்கை இருக்கிறது. மெதுவாகக் கொடுங்கள்!" என்று சொல்லி விட்டதாகவும் என் அண்ணன் கூறினார்கள்.

ஊரிலுள்ள சிலரும் மற்றும் எங்கள் நெருங்கிய உறவினர்களும் உடனே உதவிக்கு வந்து என் தந்தையின் பக்கம் நின்றிருக்கிறார்கள். ஆனால் இதைப் பெரிதா- ஒருநாளும் என் தந்தை சொல்லியதில்லை; சிரித்துக் கொண்டே சொல்வார்.

என் தந்தைக்கு அளவு கடந்த நிதானம்; அளவு கடந்த பொறுமை. பிறரைப் பெருந்தன்மையுடன் மன்னிக்கும் மனோபாவம். கடையில் பற்று எழுதுபவர்கள் திருப்பிக் கொடுக்காவிட்டாலும் - இரண்டு முறை கேட்பார்கள் - பின் விட்டு விடுவார்கள். "அவனால் கொடுக்க முடியாது. போனால் போகிறான்" என்று சொல்வார்கள்.

எங்கள் ஊரில் இசை வேளாளர் தெரு இருக்கிறதென்று சொன்னேன். அந்தக் காலத்தில் அங்கே நடனக் கலைஞர்கள் - பெண்கள் இருந்தார்கள். பல நாதஸ்வர வித்வான்கள் இருந்தார்கள். அவர்கள் அனைவரும் மிகக் கௌரவமாக சிறப்பாக வாழ்ந்த குடும்பங்கள்.

இந்த இசை வேளாளப் பெண்மணிகள் கல்யாண காலங்களில் - கல்யாண வீடுகளில் - இன்று பாட்டுக் கச்சேரி நடத்துவது போல - அந்தக் காலத்திலே சதிர்க் கச்சேரி செய்வார்கள்.

இசைக் கருவிகள் முழங்க, பெண்கள் அழகாக ஒப்பனை செய்து கொண்டு கல்யாண வீட்டிற்கு முன் போடப்பட்டிருக்கும் பந்தலில் பெரிய ஜமுக்காள விரிப்பின் மீது சதிர்க் கச்சேரி செய்வார்கள். பெண்கள் முழுக்கால் சட்டை போட்டு நான் அது வரை பார்த்தில்லை. இவர்களோ வெல்வெட்டில் செய்த முழுக்கால் சட்டையை அணிந்து அதன் மீது புடைவை அணிந்து நடனமாடுவார்கள். சபையில் ஆண்களே

---

''கதை எழுதும்போது பக்கத்தில் 'கொள்ளு' வச்சிருக்கீங்களே...! எதுக்கு?''

''என்னோட 'கற்பனைக் குதிரை'க்குத் தான்...!''

— பாண்டமங்கலம் ஜி. குமரேசன்



அதிகமிருப்பார்கள். பெண்கள் வீட்டுத் திண்ணைகளில் இருந்து பார்ப்பார்கள்.

நடனம் ஆடும்போது, ஆண்கள் வெள்ளிக் காசுகளையும் நோட்டுக்களையும் ஒவ்வொரு நடனத்தின்போதும் வீசி எறிவார்கள்.

ஆகவே இந்தக் கல்யாண சீசனில் மட்டுமே அவர்களுக்கு வருமானம் இருக்கும். மற்ற மாதங்களில் வருமானம் இருக்காது.

வருமானமில்லாத அந்த ஆறுமாத காலத்தில் எங்கள் கடையில் பற்று இருக்கும். ஆறு மாதம் கழித்து கல்யாண காலம் வந்ததும் அத்தனையும் கொடுத்து விடுவார்கள். எனினும் அவர்களும், எங்கள் இனத்தவர்களும் கொண்டிருந்த அன்பும், பரஸ்பர மரியாதையையும் எண்ணிப் பார்க்கும்போது வியப்பாகவே இருக்கிறது. என் தந்தை அவர்கள் மீது வைத்திருந்த நம்பிக்கையை அவர்கள் நன்றியோடு பாராட்டினார்கள்.

அது மட்டுமல்ல – எங்கள் ஊர் மேல் அக்ரஹாரத்திலிருந்த ஒரு நபர் மொரிஷியஸ் நாட்டிற்குப் போய் பட்லராக ஒரு வெள்ளைக்காரத் துரையிடம் வேலை பார்த்தார். அவருக்கு மனைவி, மூன்று குழந்தைகள். அவர் மனைவி ஒரு இரண்டுங்கெட்டான் – அவ்வளவு விஷயம் தெரியாத பெண்மணி. எந்தக் கூலி வேலையும் செய்யத் தெரியாது. அவர் குடும்பத்திற்காக மாதா மாதம் பணம் – என் தந்தைப் பெயருக்கு வரும். என் தந்தை பணத்தை அவர்களிடம் கொடுப்பார். சில ஆண்டுகளில் அவர் மொரிஷியஸ் நாட்டிலேயே காலமானார். அவருடைய குடும்பத்திற்கு அங்கிருந்து வந்த பணம் நின்று போன போதும் என் தந்தைதான் உதவி வந்திருக்கிறார்.

ஊர் மக்களுக்குப் பிராமிசரி நோட்டு எழுதிக் கொடுப்பதிலிருந்து, கோயில் பூஜைகளுக்கு உள்ளூரிலிருந்து வெளியூர் சென்றவர்கள் அனுப்பும் மாதா மாதப் பணம் பட்டுவாடா செய்ததிலிருந்து என் தந்தைதான் செய்து வந்தார்.

**நா**ன் அமெரிக்கா சென்ற ஆறு மாதத்தில் என் தந்தை காலமானார். எனக்குச் செய்தியை தபாலில் எழுதி இருந்தார்கள். நான் அங்கு சென்ற ஆறு மாதத்தில் உடனே திரும்பி வர முடியாத நிலை. கண்ணீருடன் என் அண்ணனுக்குக் கடிதம் எழுதி இருந்தேன். "நான் அருகில் இல்லையே! நான் இல்லையே என்று அப்பா வருத்தப்பட்டார்களா?" என்று கேட்டு.



"புதுமைக்கும் பழமைக்கும் பாலமா இருக்கிறவர் இந்த எழுத்தாளர்?"

"அப்படி என்ன எழுதுவார்?"

"பழைய கதைகளைத் திருடி 'புது கதை' மாதிரி மாற்றி எழுதிடுவார்!"

— சீர்காழி வி. ரேவதி

எனது அண்ணன் எழுதி இருந்தார்கள். "நீ அப்படிக் கவலைப்பட வேண்டிய அவசியமே இல்லை. யார் வந்தாலும் உன்னைப் பற்றிக் கேட்டால் அவன் குபேர நாட்டில் இருக்கிறான்" என்று சொல்லி சந்தோஷப் படுவார்களே தவிர வேறெதும் நினைத்ததில்லை."

நான் மேல் படிப்புக்கு அமெரிக்கா செல்லத் தீர்மானித்தபோது, என்னை அனுப்பிய எனது பேராசிரியர் டாக்டர் தியாகராஜன் மிகவும் கவலைப்பட்டார். "உன் தந்தைக்கு வயது எண்பத்தி எட்டு ஆகிறது என்று சொல்கிறாய். இந்தத் தள்ளாத வயதில் உன்னை எப்படி அனுப்ப மனம் வரும்?" என்று சொன்னார்.

நான் என் தந்தையிடம் போனேன். என் தந்தை திண்ணையில் உட்கார்ந்திருந்தார்கள். அருகில் உட்கார்ந்து கொண்டு விஷயத்தைச் சொன்னேன். "நீ சந்தோஷமாகப் போய் வா!" என்றார்கள். எனக்குக் கண்களில் கண்ணீர் ததும்பியது. "நீங்கள் இந்த வயதில் இருக்கிறீர்களே. உங்களுக்கு ஒன்று ஆகி விட்டால்..." என்றேன். பேச முடியவில்லை

"நீ இருந்தால் என்ன, என் உயிரைப் பிடித்துக் கொள்ள முடியுமா? – நீ போய் வா. நீ பெரியவனாக வேண்டும்!" என்று வாழ்த்தினார்கள்.

அந்தத் திண்ணை, அவர்கள் சொன்னது எல்லாமே நேற்று நடந்தது போலிருக்கிறது.

அவர் ஒரு தெய்வீக ஆத்மா!

(தொடரும்)

# மன்னிக்கவே கூடாத மாபெரும் குற்றம் எது...?

● ஆர். அப்துல் சலாம், திருச்சி - 20

? இரண்டு நாட்கள் மட்டும் முதல்வராக இருந்த ஜகதாம்பிகா பாலுக்கு பத்தாயிரத்துக்கு டெலிபோன் பில் வந்திருப்பது எதைக் காட்டுகிறது?

! நம் அரசியல் சூழலின் அபத்தத்தை! நிகரான இன்னொரு அபத்தம்: ஒரு தேர்தலுக்கே வித்திட்ட அதிரடி ஜெயின் கமிஷன் இன்று கல்தா பெற்றிருப்பது. அன்று குய்யோ முறியோ என்று அடித்துக் கொண்டவர்கள் இன்று கப்சிப்!

• போடாத நாடகம்





• பறக்கிற இலட்சியம்

● ரஞ்சனி ப்ரியன் பள்ளிபாளையம்.

? தேசிய மொழி போல், தேசிய 'மதமாக' ஒன்றைப் பிரகடனப்படுத்தினால் வன்முறை குறையுமா?

! கெட்டுது குடி! அப்படி அறிவிக்காமலே நடக்கும் கொடுமைகள் போதாதா?!

● த. குணசேகரன், கவுந்தப்பாடி

? இந்தியர்கள், காந்தியை இன்னும் மறக்காமல் இருக்கிறார்களா...?

! மறக்கவில்லை; வித்தியாசமான கோணங்களில் அலசி ஆராய்கிறார்கள். உதாரணமாக, மகாத்மா Vs காந்தி என்ற ஆங்கில நாடகம். சென்னையில் அரங்கேறிய அதைப் பார்க்கக் கிடைத்தது. இந்தியா பெருமைப் படக்கூடிய அளவுக்கு மேடை நாடகக் கலையின் புதிய உச்சங்களை எட்டியது அத் தயாரிப்பு. கதையோ, மகாத்மாவை ஒரு சராசரி(!) அப்பாவாகச் சித்திரித்து, அலங்காரம் களைந்து, 'அம்பலப்'படுத்தி நம்மை ஓர் உலுக்கு உலுக்கி விட்டது. கோதுமை காப்பி தொடங்கி தாம்பத்ய உறவு வரை சகலத்திலும் மூக்கை நுழைக்கும் அப்பாவாக காந்தி! மூத்த மகன் ஹரி லாலுக்கும் மோகன்தாஸ்கரம் சந்த் காந்திக்கும் இடைவெளி மெள்ள மெள்ள அகன்று, ஒரு மெல்லிய உறவு பந்தம் மட்டும் விடாமல் ஒட்டிக் கொண்டிருக்கிற இறுதி நிலையை அடைவதற்குள் திக்குமுக்காடிப் போனேன்.

● ஜி. செல்வராஜன், ரிஷிவந்தியம்

? தத்தளித்த சிங்கள ராணுவத்தினரைப் பாதுகாப்பாகக் கரை சேர்த்த தமிழக மீனவர் செயல் பற்றி...?

! வள்ளுவர் வாக்கைக் கடைப்பிடித்து, தங்களுக்குத் தீங்கு செய்துள்ள சிங்கள ராணுவத்தினருக்கும் நல்லது செய்திருக்கிறார்கள். ஆனால் வள்ளுவர் வாக்குப்படி சிங்கள ராணுவத்தினர் நாணி மனம் திருந்துவரா...? சந்தேகம்தான்!

● க. கந்தையா, நாகர்கோயில்

? ஷேர் மார்க்கெட்டில் பல ஆயிரம் கோடி மோசடி பண்ணினாரே ஹர்ஷத் மேத்தா... ஞாபகம் இருக்கிறதா...? அவருடைய வழக்கு என்னாச்சு...?

! வழக்கு தூங்குது! மேத்தா வளமாயிருக்காரு. சமீபத்தில் சென்னையில் சவுத் இந்தியா சேம்பர் ஆஃப் காமர்ஸ் அண்ட் இண்டஸ்ட்ரி கூட்டத்தில் பேச வந்தவருக்கு ராஜ மரியாதை.

● ஆர். இருதயராஜ், கும்பகோணம்.

? உச்சநீதிமன்ற உத்தரவுப்படி மீண்டும் கல்யாண்சிங் முதல்வராகிவிட்டதால், உ.பி. கவர்னர் தமது பதவியை ராஜினாமா செய்வாரா?

! எங்கே செய்தார்!? குஜ்ரால் இந்த ஒரு நல்ல காரியத்தையாவது செய்து விட்டுப் போவார் என்று பார்த்தால், ஜகா வாங்கி ஏமாற்றமளித்து விட்டாரே!

● தேவந்தி துரைராஜ், திருவண்ணாமலை.

? வெடிகுண்டு கலாசாரத்துக்கு அந்நிய சக்திகள்தான் காரணமெனில் அவை தமிழகத்தை மட்டுமே குறி வைப்பதேன்?

! மும்பையிலும் வெடித்ததே... படிப்படியாக நாடு தழுவிய பாதிப்பு ஏற்படுத்தும் சதித் திட்டம் தெரிகிறது.

● சி. கண்மணி சிவாஜி, சிரக்கனூர்.

? ஜாதி, மதம், குலம், கோத்திரம் எல்லாம் திடீரென்று எல்லோருக்கும் மறந்து போய் விட்டால்...?



• சராசரி(!)அப்பா!



• ராஜ மரியாதை



• அவசர ஜகா

! பாவம், அப்புறம் அரசியல் வாதிகள் பிழைப்புக்கு என்ன செய்வார்களாம்?!

● **ப. ராமகிருஷ்ணன், ஆவணத்தாங் கோட்டை.**

***? இளைய நடிகர்களின் வரிசையில் யாருக்கு அதிக மார்க் கொடுக்கலாம்?***

! பாப்புலாரிடி என்று பார்த்தால், விஜய், முரளி, சூர்யா என்று அணிவகுத்துப் போட்டி போடுகிறார்கள். நடிப்புக்கென்றால் மார்க் போட மனசில்லை; ஆளில்லை.

● **ஆர். ஜேஸ்மின் ரமேஷ், மதுரை - 20.**

***? அம்பேத்கர், மகாத்மா காந்தி, காமராஜர், அண்ணாதுரை போன்றவர்களின் சிலைகள் அடித்து நொறுக்கப்பட்டது பற்றி...?***

! அவலை நினைத்து உரலை இடித்த கதைதான். சிலைகள் வைக்கவும் வேண்டாம், சேதப்படுத்தவும் வேண்டாம்!

● **ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன் கோட்டை.**

***? 'தி.மு.க. ஆட்சியில் குறைகள் இருக்கலாம். குற்றங்கள் இல்லை' என்கிறாரே மூப்பனார்?***

! கோவை முஸ்லிம் தீவிரவாதிகள் விஷயத்தில் அலட்சியம் காட்டியது குற்றமாகி விட்டதே! தண்டனையும் அடைந்தாயிற்றே!

● **எஸ்.எஸ்.வள்ளுவன், வேம்பார்.**

***? தேர்தல் முடிவுகள் வெளியான பின்பு வை.கோ., சு.சுவாமி, ராமதாஸ், வாழப்பாடி ஆகியவர்களின் நிலை எப்படியிருக்கும்?***

! எல்லோருமே உச்சாணிக் கொம்பில் அல்லவா இருக்கிறார்கள்! ஆமாம்... அதெப்படி நீங்க கேள்வி கேட்டீங்க (முன்கூட்டியே)!

● **ராஜி, கமுதி.**

***? மக்களுக்கு நாட்டுப் பற்று சரியாக ஊட்டப்படவில்லை என்று கூறும் எஸ்.வி.சேகர் நாட்டுப்பற்றுள்ள நாடகம் இதுவரை மக்களுக்குத் தரவில்லையே?***

! ஐயோ! வேண்டாம் அம்மா? அதோட நடுவுல அவர் விடற ஆபாச ஜோக்குகளால தேசபக்தி கொச்சையாகிப்போயிடும்!

● **சீதாமகன், திருவண்ணாமலை.**

***? மன்னிக்கவே கூடாத மாபெரும் குற்றம் எது?***

! அப்படி எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. மகாமகா ஊழல்களைக் கூட நாம் மன்னித்து விட்டோமே!

● **டி.கே. சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்.**

***? 'சாதாரணமாக பஸ்ஸிலே போகவே சிரமப்படுகிற மக்களை விமானப் பயணத்துக்குத் தகுதியுடைவர்களாக ஆக்குவதுதான் எங்கள் இலட்சியம்' என்று ஜெயந்தி நடராஜன் கூறுகிறாரே?***

! நாசமாய்ப் போச்சு! அவர் எம்.பி.க்களையும் அமைச்சர்களையும் நினைத்துக் கொண்டே பேசுகிறார். மக்களுக்கு பஸ்ஸிலும் ரயிலிலும் போகக் கட்டுப்படியானாலே சந்தோஷம்தான்.

● **எல்.எம். அபிநாட்சயா, திருவண்ணாலை.**

***? நம் நாட்டில் தீவிரவாதிகளின் கொட்டம் முற்றிலும் அடங்க என்ன செய்ய வேண்டும்?***

! தீவிரவாதம் அரசியலாக்கப்படக்கூடாது. ஒரு தேசியப் பிரச்னையாக அணுகி தீர்க்கப்பட வேண்டும்.

● **எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.**

***? 'ஜெ'வுக்குத் தோல்வி பயம் வந்து விட்டது என்கிறாரே வலம்புரி ஜான்?***



• மதிப்பெண்...



• ...போட..... •



....மனமில்லை!

! இனி அந்தப் பேச்சு இல்லை. வெற்றி ஆணவம் வராமலிருந்தால் சரி.

● **ச.ஆ. கேசவன், இனாம் மணியாச்சி.**

***? திருமணம் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்பட்டும் வாழ்க்கை நரகமாக இருப்பதேன்..?***

! ஏ.சி. ஷோ ரூமில் துணி வாங்கி, ஏ.சி. தையற் கடையில் தைப்பதாலேயே அந்த ஆடைகளைப் போட்டுக் கொள்பவருக்கு ஏ.சி.யின் சில்லிப்பு கிடைத்துவிடுமா என்ன!

**❑ ரூ. 50 பரிசு பெறுபவர்:**
**ஆர். அப்துல் சலாம்,**
**12, தெற்கு இரண்டாவது தெரு,**
**மன்னார்புரம், திருச்சி – 620 020.**

# 'பஞ்ச' பாண்டவிகள்!

அமெரிக்காவிலே அயோவான்ற நகரத்திலே ஒரு பெண்ணுக்கு ஒரே பிரசவத்துல



• இளம் வயதில் சகோதரிகள்

அரை டஜன் குழந்தைகள் பிறந்ததையும், அதைப் பற்றி எல்லா பத்திரிகைகளும் பரபரப்பா கட்டுரைகள் எழுதியதையும் கேள்விப்பட்டிருப்பீங்க. ஆனால், இப்போ நான் சொல்லப் போறது அவங்களைப் பத்தி இல்லே. அந்தக் குழந்தைகளின் அப்பா அம்மாவுக்கு உருக்கமான ஒரு கடிதத்தை எழுதியிருக்கிற ஆனெட், சிஸிலி, ஒனேன்ற மூணு சகோதரிகளைப் பற்றித்தான்.

"ஒரே சமயத்தில் பல குழந்தைகள் ஒரே அம்மாவுக்குப் பிறப்பது என்பதை தயவு செய்து ஒரு பொழுதுபோக்கு விஷயமா ஆக்கிடாதீங்க"ன்னு வருத்தத்தோடு எழுதியிருக்காங்க. இவங்களோட கதை வித்தியாசமானது மட்டுமில்லே; வேதனையானதும்கூட.

கனடா நாட்டிலே வாழ்ந்த ஒரு விவசாயியின் மனைவிக்கு, 1934ஆம் ஆண்டு மே மாதம் ஒரே பிரசவத்திலே ஐந்து பெண் குழந்தைகள் பிறந்தன.

அதுபாட்டுக்கு ஒரு அடங்கிப் போன செய்தியா ஆகியிருக்கும்! அவங்கப்பா அப்பாவித்தனமா ஒரு நியூஸ் பேப்பர் ஆபீஸுக்குப் போன் செய்து, "ஒரு குழந்தை பிறந்ததை சின்ன விளம்பரமாக வெளியிட்டாலும், ஐந்து குழந்தைகள் பிறந்ததை அதே சைஸில் வெளியிட்டாலும் ஒரே சார்ஜ்தானே வாங்குவீங்க?"ன்னு கேட்காமல் இருந்திருந்தால்! பத்திரிகைகாரங்க இப்படியொரு நியூஸை கோட்டை விடுவாங்களா? பத்தி பத்தியா எழுதினாங்க. புகைப்படங்களா க்ளிக்கித் தள்ளினாங்க.

கொஞ்ச நாள்தான். அப்பாவுக்குப் பாசம், பேராசையா மாறிடிச்சு. 1939ல் சிகாகோவிலே நடந்த சர்வதேசப் பொருட்காட்சியில் அந்த



• மிச்சமிருக்கும் மூவர்

ஐந்து மகள்களையும் காட்சிப் பொருளாக நிற்க வைக்க ஒரு ஒப்பந்தம் போட்டுக்கிட்டார்.

அரசுக்கு இது பிடிக்கலை. அப்பா அம்மாவிடமிருந்து அந்த ஐந்து பேரையும் பிரிச்சது. ஏதோ மனிதாபிமான அடிப்படையிலே இல்லே. அவங்களை வெளிநாடுகளிலிருந்து வர டூரிஸ்டுகளுக்குக் காட்டிப் பணம் சம்பாதித்தது! சில விளம்பரங்களிலே 'ஒன்டோரியாவுக்கு வந்து, ஒரே பிரசவத்தில் பிறந்த ஐந்து அழகு தேவதைகளைக் கண்டு மகிழுங்க'ன்னெல்லாம் வாசகங்கள்! தினமும் சுமார் ஆறாயிரம் பேர் வந்து கண்

ணாடி அறைக்குள் வைக்கப்பட்டிருந்த இவங்களைப் பார்த்து ரசித்து, ஆச்சர்யப் பட்டு, கமெண்ட் அடிச்சுக்கிட்டே போவாங் களாம். இதெல்லாம் தாங்க முடியாத கொடு மையாகப் பட்டது அந்தப் பெண்களுக்கு. இதையெல்லாம் பற்றிக் கொஞ்சமும் கவலைப்படாமல் அந்த ஐந்து பேரின் உரு வங்கள் பதிக்கப்பட்ட அழகுப் பொருட்கள், பென்சில்னு மார்க்கெடிங் செய்து வேறு பணம் சம்பாதிச்சுது அரசு!

அரசு மேலே பெற்றோர்கள் தொடுத்த வழக்கு, ஒரு வழியா அவங்களுக்கு சாதக மாக அமைஞ்சுது. அதுக்குள்ளே கோடிக் கணக்கான டாலர்களை இவங்களை வச்சே சம்பாதித்திருந்தது அரசு. போனாப் போகு துன்னு பெரிய மனசு பண்ணி ஆளுக்கு 1,16,000 டாலர்களை அவங்களுடைய இரு பத்தி ஒன்றாவது பிறந்த நாள் அன்னைக்கு (அந்த நாட்டு சட்டப்படி அப்போதுதான் அவர்கள் மேஜர்) கொடுத்தது.

இந்தப் பணமெல்லாம் இப்போ செல வாயிடுச்சு. ஆனா அவங்களோட கசப்பான நினைவுகள் இன்னமும் தங்கியிருக்கு. வலிப்பு நோயிலே தன் இருபதாவது வயசிலே எமிலி இறந்து போயாச்சு. பக்க வாதம் வந்து முப்பத்தாறு வயதிலேயே மேரி யும் கர்த்தரின் திருவடியை அடைஞ்சாச்சு. பாக்கி இருக்கிற மூணு பேரும் அவங்க பட்ட துன்பங்களை ஒரு புத்தகமா வெளியிட்டிருக்காங்க. நிறைய அதிர்ச்சி யான விஷயங்கள் அதிலே!

இளம் வயதில் பல வருடங்களாகத் தன் வக்கிர உணர்வுகளுக்கு அவர்களை வடிகாலாகப் பயன்படுத்திக் கொண்டாராம் அப்பா.

இப்போதைக்கு அரசு வழங்கும் சொற்ப பென்ஷனில் மூன்று பேரும் நகரிலிருந்து கொஞ்சம் ஒதுக்குப்புறமா இருக்கும் ஒரு வீட்டில் வசிக்கிறாங்க. சுயசரிதையிலிருந்து வரும் ராயல்டிதான் இவங்களை ஓரளவு டீஸண்டா வாழ வைக்குது!

"ஒரே பிரசவத்தில் பல குழந்தைகள் என்பது மற்றவர்களுக்கு எப்படியோ, எங்களைப் பொறுத்தவரை அது ஒரு நரகம். அதுவும் பெண்களாகப் பிறந்துட்டதாலே காட்சிப் பொருளாகவே வாழ்க்கை யின் பெரும் பங்கைக் கழித்ததில் வேதனை ரொம்ப அதிகம்''னு சொல்றாங்க! பாவம்!

— சுமி

தலையங்கத்தில் குண்டு கலாசாரத்தின் கொடுமையையும் அதனால் விளைந்த விபரீதத்தையும் சொன்னதில், உங்கள் பொறுப்புணர்வைப் புரிந்து கொள்ள முடிந்தது.

ஈரோடு, டி. சந்திரன்.

குண்டு வெடித்த அடுத்த 12 மணி நேரத்திற்குள் சில தீவிரவாத இயக்கங்களுக்குத் தடை; கோவை மட்டுமின்றி மாநிலம் முழுதும் வெடி மருந்துப் பொருட்கள் தோண்டி எடுக்கப்பட்டுப் பலர் கைது; உயிரைத் துச்சமாக மதித்து அடுத்த நாளே கோவை மருத்துவமனைக்கு ஆறுதல் கூற விரைந்திட்ட துணிவு; தேர்தல் சுற்றுப் பயணத் திட்டத்தைக் கைவிட்டு விரைந்து சென்றது; உண்மையில் கோவை சம்பவம், முதல்வர் கருணாநிதியின் முனைப்பு நடவடிக்கைத் திறமைக்கு எடுத்துக்காட்டு. இவை பற்றி ஒரு பாராட்டு இல்லை! தலையங்கத்தைப் படித்து, 'யூ டூ கல்கி' எனக் கேட்கத் தோன்றுகிறது.

திருவரங்கம், அ. சம்பத்.

தீவிரவாத இயக்கத்தை, முதலிலேயே முதல்வர் தடை செய்திருந்தால், இன்று கோவை குண்டு வெடிப்பும், எண்ணற்ற மக்களின் உயிர்ப் பலியும் நிச்சயமாக நடந்திராது; தடுத்து நிறுத்தியிருக்க முடியுமென்பதே உண்மை'

கும்பகோணம், எஸ்.கே. மூர்த்தி.




வெடிகுண்டு வைக்கும் அரக்கர்கள் வாழும் கோவையிலேயே, நல்லிதயம் கொண்டு, காயமுற்றவர்களுக்கு, பிரதிபலன் பாராது உதவி செய்துவரும் கே.வி. மருத்துவமனை ஊழியர்கள், மருத்துவர்கள், நர்சுகள் அனைவரும் சஞ்சய் சாவ்லாவிற்கு நிகராகப் பாராட்டப்பட வேண்டியவர்கள்!

கமுதி, ராஜி.

'யாருக்கு வோட்டுப் போடுவீர்கள்?' என்ற வழக்கமான பொதுஜன சந்திப்பை விட, 'வோட்டுப் போடாததேன்?' என்ற சந்திப்பு வித்தியாசமாக இருந்தது.

சென்னை - 1, கே.ஆர். உதயகுமார்.

இன்றைய ஹீரோ, இளைய தளபதி 'விஜய்'யின் அட்டைப் படத்தை ஆயுள் முழுதும் பார்த்துக் கொண்டே இருக்கலாம் போல அவ்வளவு அழகு!

மதுரை - 16, வி.பி.எம். வள்ளி.

மெல்ல, பூவைத் தொடுவது போல், ஹீரோ விஜய்யின் பேட்டியில், கேள்வியும் - பதிலும். படித்தபோது, இன்றைய ஹீரோ விஜய் நெசமாலுமே நன்றாகத் தேறிவிட்டார் என்றுதான் கூற வேண்டும். 'கல்கி'யால், விஜய்க்குக் கிடைத்த அழுத்தமான முத்தம்.

சென்னை - 109, எஸ்.ஆர். ஹரிஹரன்.

விஜய் இன்றைய ஹீரோ மட்டுமல்ல; வருங்கால நம்பிக்கை நட்சத்திரமும் கூட. விஜய் காட்டில் தற்போது செம மழை. அம் மழை வெள்ளத்தில் சிக்காமல் எதிர் நீச்சல் போட்டு கரையைத் தொட வேண்டும்.

# அழுத்தமான முத்தம்!

அதற்கு, சிறந்த கதையம்சமுள்ள படங்களில் மட்டுமே நடிக்க வேண்டும்.

நாகூர், காதர்ஸ்.

சாருகேசி வழங்கிய 'இடைவேளை நேரத்தில்...' கற்பனை படித்து சிரித்துச் சிரித்து வயிறு வலித்து விட்டது.

சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

மூன்று கார்ட்டூன்களும் அட்டகாசம்! ஆனால் ரஜினி, கலைஞருக்கு 'வேட்டு' வைக்கும் கார்ட்டூன் இருக்கே, அது டாப் டக்கர்!

வேலூர் - 6, எல். கோபாலகிருஷ்ணன்.

சினிமா போல அரசியலில் டிஷ்யூம் டிஷ்யூமெல்லாம் பண்ண முடியாது என்பதை தராசு பதில் மூலமே விஜயசாந்தி அறிந்து கொள்ளலாமே! அனுபவம் எதற்கு?

சிதம்பரம், ச.த. ராஜா.

# தீக்குளி மனம்

காய்கறிக் கூடையைக் கீழே வைத்தான். பால் பாக்கெட் மேலாக இருந்தது. மூன்று மாடிகள் படியேறியதில் மூச்சு வாங்கியது.

"ஸ்ஸ்.... ஹப்பாடா... சாந்தி... எனக்கு அரை வாய் காப்பி வேணும்..." கிச்சனைப் பார்த்துக் கூவினான்.

வைதேஹி பாத்ரூமிலிருந்து வெளிப்பட்டாள்.

ரோஸ் நிற டவல். முகம் இளமையாய். சாந்தியை விட நான்கு வயது சின்னவள். சகலத்திலும் புலப்படுகிற இளமை.

"என்ன... அதுக்குள்ளே குளியல்..."

"சமயபுரம் போகணும்னு சொன்னேனே..." என்றாள். துண்டை உதறினாள்.

மேலே ஒரு துளி பட்டுத் தெறித்தது.

"பவுடர் இங்கே இருக்கு."

நைஸில் டப்பாவை நீட்டினான். சாந்தி அதே நேரம் காப்பி தம்ளருடன் வந்து நின்றாள்.

"உன் லிஸ்ட்படி எல்லாம் வாங்கியாச்சு."

"இலை வாங்கினீங்களா..."

"ப்ச்... மறந்துட்டேன்."

"அவ தட்டுல சாப்பிட மாட்டா. ரொம்ப சுத்தம் பார்க்கிறவ."

வைதேஹி குறுக்கிட்டாள்.

"அதெல்லாம் ஒண்ணுமில்லே. இங்கேதான் இலை கிடைக்கிறது. இலைல சாப்பிட்டா அது ஒரு டேஸ்ட்."

"நான் போறேன். மறுபடி..."

"வேணாம். விடுங்க மனோகர்."

மறுபடி படியிறங்கி அரை கி.மீ. தூரம் போக வேண்டும். வைதேஹியே 'வேண்டாம்' என்கிறாள். விட்டு விடலாமா... அல்லது... அவளே ஆசைப்பட்டு...

தீர்மானித்தான்.

"நோ பிராப்ளம். போயிட்டு வரேன்."

சாந்தி அவனைப் பார்ப்பதைத் தவிர்த்து விட்டுப் போன மாதிரி தோன்றியது.

"உன் மனசுல என்ன நெனைச்சுக்கிட்டு இருக்கே. இங்கே பாரு... இங்கே குடி வரும்போதே சொல்லியிருக்கேன். பழைய எடம் மாதிரி நெனைச்சா கடைக்கு ஓட முடியாது. யூ மஸ்ட் ஹேவ் பிளானிங்... என்ன தேவைன்னு முன்கூட்டியே தீர்மானிச்சு ஸ்டாக் பண்ணிக்கணும். நானும் மனுஷன்தான். ரோபோ இல்லே."

முன்பு வள்ளென்று விழுந்ததின் 'ரீப்ளே'.

இன்று துளிக்கூட சிணுங்கல் இன்றி மீண்டும் படியிறங்குகிற புத்தி. காரணம் வைதேஹி. சாந்தி தன் உள் மனதைப் படித்து விட்டாளா.

சைக்கிள் மிதிக்கையில் மனக் குதிரை ஓடியது. ஒரு பக்கம் சாந்தி. மகன் அர்விந்த். இன்னொருபுறம் வைதேஹி.

இலைக் கட்டுடன் திரும்பி வரும்போது 'வைதேஹிக்காக...' என்ற நினைப்பில் அலுப்பு பின்தங்கிக் கொண்டது.

"டாடா சுமோ வருது. நானூத்தம்பது ரூபா.. சமயபுரம் போயிட்டு வந்துரலாம். ரெண்டு மணிக்கு வரச் சொல்லியிருக்கேன்..." என்றான்.

"என்னால சிரமம்... உங்களுக்கு..." என்றாள் வைதேஹி.

"நத்திங்... இவ கூட, போகணும்னு ரொம்ப நாளா சொல்லிக்கிட்டு இருக்கா பஸ் ஏறி போயிட்டு வரதுக்குள்ளே... தாவு தீர்ந்துரும். உன்னோட புண்ணியத்துல கார் சவாரி..."

சாந்தியைப் பார்ப்பதைத் தவிர்த்தான்.

இன்னும் எத்தனை தடவை இது மாதிரி சங்கடங்கள் நேருமோ.

"ஹை... கார்ல போறோமா..." என்றான்

அர்விந்த்.

"ஆமா... போய் ஹோம்வொர்க் எழுதிரு. இவங்க வந்தாங்கன்னு லீவு வேற போட்டாச்சு."

"வினு... வா... கீழே போகலாம்.."

அர்விந்த், வைதேகியின் மகளுடன் வெளியே ஓடினான்.

"டேய்... நில்லுடா. சொல்லிக்கிட்டே இருக்கேன்."

சாந்தி மூடிய கிண்ணத்துடன் வந்தாள்.

"பி 2 மாமாக்கு பால் பாயசம்னா ரொம்பப் பிடிக்கும். கொடுத்துட்டு வரீங்களா..."

கையெடுத்து உயரே கும்பிட்டான்.

"என்னை வுட்டுரு."

"நானே போயிட்டு வரேன்.."

சாந்தி வெளியே போனாள். திரும்ப அரை மணி நேரமாகும். அவ்வளவு எளிதில் விட்டு விட மாட்டார்கள். 'யார் விருந்தாளி வந்திருப்பது...' என்று ஆரம்பித்து பேச்சு ஓடும்.

சட்டென்று வாய்த்த தனிமை. அதுவும் வைதேஹியுடன். இதயம் ஏனோ கூடுதலாய் துடிக்கிற பிரமை.

"நீ ஃபோன் பண்ணப்ப, நிச்சயமா வருவேன்னு எனக்குத் தோணலே. விஸ்வம் உன்னை அனுப்பவே மாட்டானே" என்றான்.

"அதெல்லாம் வேஷம். எப்ப நான்

## ரிஷபன்

வெளியே போவேன்னு இருப்பாரு..."

"ஏய்... சும்மா சொல்லாதே... நியூ இயர்க்கே உனக்கு பிரேஸ்லெட் ரெண்டு பவுன்ல செஞ்சு கொடுத்தவனாச்சே..."

"இல்லே மனோகர். நீங்க நெனைக்கிற மாதிரி இல்லே. ஹி ஈஸ் வெரி ஸெல்ஃபிஷ்."

மனோகர் அவளை உற்றுக் கவனித்தான்.

"என்ன நீ... அன்னைக்கு ஃபோன்லயும் ஒரு மாதிரி விரக்தியாப் பேசினே. இப்பவும் என்னவோ போலப் பேசறே. ஐ ஃபீல் ஒங்க ரெண்டு பேருக்கும் நல்ல அண்டர் ஸ்டாண்டிங் இருக்கு. நிச்சயம் உங்களுக்குள்ளே தகராறே வராதுன்னு."

வார்த்தைகள் தேர்ந்தெடுக்கப்பட்டு எதிர்மறையாய் பிரயோகிக்கப்பட்டதில் வைதேஹி சீண்டி விடப்பட்டாள்.

மனோகர் மேலும் சீண்டினான்.

"இதுவே.. இப்ப என் கேஸை எடுத்துக்க. நான் என்னதான் வெளிப்படையா இருந்தாலும், உட்கார்ந்து பேசினாக் கூட சாந்தி கமுக்கமாத்தான் இருப்பா. மனசுல இருக்கறது வெளியே வரவே வராது. மிஞ்சிப் போனா ஒன்னு அழுவா. எங்களுக்குள்ளே நானே அனுசரிச்சுப் போயிடலாம்னு விட்டுக் கொடுத்துருவேன்."

"உங்களை மாதிரி கிடையாது விஸ்வம்..





"டீ.வியிலிருந்து பேட்டி எடுக்க வந்தவங்ககிட்ட தலைவர் கிறுக்குத்தனமான கேள்வி ஒன்றைக் கேட்டாராமே?"

"ஆமாம்; 'எந்த டீவி பேட்டிக்காக வந்திருக்கீங்க; கலரா? பிளாக் அண்ட் வொயிட்டா?'ன்னு கேட்டாராம்!"



"நம்ம தலைவருக்குத்தான் என்னவொரு கற்பனை வளம்!"

"ஓ! அவர் எழுதின சுய சரிதைப் புத்தகத்தைப் படிச்சுட்டியா?"

- யமுனா ரெங்கநாதன்

அவ்வளவும் விஷமம்... திருட்டுத்தனம்... நானா அவரை இழுத்து வச்சு பேசினாக் கூட வார்த்தையே வராது. பணம்.. நகை மட்டும் லைஃப் இல்லே மனோகர்."

வைதேஹியின் குரல் லேசாய் கிரீச்சிட்டது.

"வைதேஹி... நீ சாந்தியோட டிஸ்டண்ட் ரிலேஷன்னு உங்க கல்யாணத்தும்போது தான் தெரிஞ்சுது. யூ வோண்ட் பிலீவ். என்னால உங்க மேரேஜ் அட்டெண்ட் பண்ண வர முடியும்னே தோணலே. இவ ரொம்ப கம்பெல் பண்ணதாலே வந்தேன். ஆனா... உன்னைப் பார்த்ததும்... ஸாரி.. தப்பா நெனைச்சுக்காதே. யூ ஆர் ஸம்திங் டிபரண்ட்னு தோணிச்சு. விஸ்வம் எவ்வளவு லக்கின்னு.."

மிகச் சரியான அளவில் தொனியில் வார்த்தைகள் வெளிப்பட்டன. காற்றில் கரையாமல் அப்படியே மறுபடி படிக்க வசதியாய் நின்றது போல பிரமை தட்டியது.

வைதேஹி அவனைப் பார்க்கவில்லை. சுய சோகப் பாதிப்பில் இன்னமும் ஆழ்ந்திருப்பது போலவே தோன்றியது. தான் சொன்னதைக் கேட்டாளா?

"மறுபடியும் தப்பா நெனைச்சுக்காதே. எனக்கு மட்டும் கல்யாணம் ஆகாம இருந்திருந்தா, உன்னை அப்ப பார்த்திருந்தா நிச்சயமா ப்ரபோஸ் பண்ணியிருப்பேன். எதுக்குச் சொல்றேன்னா... டோண்ட் ஃபீல் இன்பீரியர்... விஸ்வம் உன்னை நிச்சயம் புரிஞ்சுப்பான்."

வைதேஹி தலையசைத்தாள் மறுப்பாய்.

"இல்லே மனோகர்... அவர் நிச்சயம் மாறவே மாட்டார்.. ப்ச்.."

அந்த நிமிடம் சாந்தி உள்ளே வந்தாள்.

சட்டென்று பேச்சு அறுந்து விட்டது. அதுவரை பேசாமலே இருந்த மாதிரி திடீர் அமைதி.

"என்ன... சாப்பிட்டுரலாமா..."

இலை போடப்பட்டது.

"நீயும் உட்காரேன் சாந்தி..."

"வேணாம். பரிமாறிட்டு அப்புறம் சாப்பிடறேன்."

"நீயும் ஒக்காரேன். அப்புறம் லேட்டா சாப்பிட்டு... அசிடிடி வந்துதுன்னு புலம்புவே..." என்றான் பாதி எரிச்சலாய்.

"இப்படிப்பட்டவன்னு தெரிஞ்சிருந்தா என்னைக் கல்யாணம் பண்ணியிருக்க மாட்டீங்கதானே.." என்றாள் சாந்தி யதார்த்தமான குரலில்.

விசுக்கென்று மனோகர் திரும்பிப் பார்த்தான்.

"என்ன மனோகர்... சொல்லுங்களேன்..." என்றாள் வைதேஹி.

சாந்தி அவனையே பார்த்தாள். ஆறு வருஷ தாம்பத்யம் கண்களில் மின்னிக் கொண்டிருந்தது.

"சொல்லுங்க..." என்றாள் பாதி விளையாட்டாய், பாதி தீவிரமாய்.

அவனுக்கு உள்ளுக்குள் ஏதோ சுட்டெரித்தது. ◉



• சரத்பவார்

## சலாம் மும்பை!



• ஜோஷி

புலிக்கே பயப்படாதவர்கள் பூனையைக் கண்டா நடுங்கப் போகிறார்கள்? ஆனானப்பட்ட மார்ச் 12, 1993 குண்டு வெடிப்புகளுக்கே அசராமல், மறு நாளே அலுவலகங்களில் 80% அட்டென்டன்ஸ் கொடுத்த மும்பைக்காரர்களை தம்மாத்தூண்டு நாட்டு வெடிகளால், வோட்டுப் போட முடியாமல் கட்டிப் போடலாம் என்று நினைத்தவர்கள், ஏமாந்துதான் போனார்கள்! கார், காந்திவிலி, விரார் மூன்று இடங்களிலும் குண்டு வெடித்தது உண்மை; அதில் 4 பேர் மாண்டதும், 25 பேர் காயமடைந்ததும் கொடுமை; சூட்டோடு சூடாக குற்றவாளிகளைக் கைது செய்து, அவர்கள் பாக் - ISI யால் ஏவப்பட்டவர்கள் எனத் துப்புத்துலக்கியது போலீசுக்குப் பெருமை... ஆனால் 'கார்' பகுதியில், ரயில்வே லைனை ஒட்டி குண்டு வெடித்த கோலிபார் குடிசைக் குடியிருப்புகளில், அடுத்த தினமே ஒன்றுமே நடவாதது போல் மக்கள் திரளாக ஓட்டுச் சாவடிக்குப் படை எடுத்ததும், குண்டு வெடித்த காந்திவிலி, விரார் ரயில்வே பிளாட்பாரங்களில் சில மணி நேரங்களிலேயே கலகலப்பும் சலசலப்புமாய் சகஜ நிலை திரும்பியதும், மும்பையில் மட்டுமே நிகழக் கூடிய அதிசயங்கள்! சலாம் மும்பைகாரர்களே!

## 'V' இல்லை என்றால் 'T'யும் இல்லை!

பிரசார காலங்களில், மும்பை வட்டாரங்களை வலம் வந்த ஒரு உண்மைக் கதை –

நகரின் நெரிசலான குடிசைப் பகுதி ஒன்றில், அட்டகாசமான வாக்குறுதிகளை அள்ளி வீசிய அரசியல் தலைவர் ஒருவர், தம் ஜீப்புக்குள் ஏற யத்தனித்தபோது, எதிரே, அழுகி நாற்றமெடுத்துக் கொண்டிருந்த குப்பை மேடு அவர் கண்ணில் பட்டதாம். முகம் சுளித்து, "ஏம்ப்பா... இங்கே குப்பை லாரி வருவதில்லையா?" என வினவினாராம். அதற்கு சுருக்கம் விழுந்த முகமும் இடுங்கிய கண்களுமாயிருந்த ஒரு பெரிசிடமிருந்து, "வரும், ஐந்து வருஷத்துக்கொரு முறை வரும்" என்ற பதில், ஜீப்பை நோக்கி ஒரு பார்வை வீசியபடியே, வந்ததாம்!



• பிரமோத் மஹாஜன்

இதற்கு நேர்மாறாக, பாந்தரா குடிசைக் குடியிருப்புகளில், சாந்தாராம் மஹாடிக் என்பவர், தங்கள் தொகுதியில் வோட்டுக் கேட்டு வந்த துஷார் காந்திக்கு (மஹாத்மாவின் பேரன்) சுக்கு டீ கொடுத்து உபசரித்து, "வாக்காளர்கள் அன்போடும் பண்போடும் நடந்து கொண்டால், அரசியல்வாதிகள் ஐந்து வருஷத்துக்கொருமுறை ஏன், தினமுமே வருவார்கள்" என்றிருக்கிறார். ஆனால் பாவம்... துஷார் காந்திக்கு கொடுத்து வைக்கவில்

# டீ குடிக்கக் காத்திருக்கிறார் காந்தியின் பேரன்!



"ஏன் அவர் குழந்தையை அடிக்கும் போது ரெண்டு கண்ணையும் மூடிக்கிட்டே அடிக்கிறார்?"

"நான் சொல்லலை... அவருக்குக் கண் மூடித்தனமா கோபம் வரும்னு!"

— திருவாரூர் ஏ.ஆர். முத்தமிழன்

லையே! இனி, ஐந்து வருஷம் கழித்துத் தான் (அதிர்ஷ்டமிருந்தால் அதற்குள்ளாகவே) மறுபடியும் வோட்டு கேட்கும் சாக்கில் வந்து டீ குடிக்க முடியும்!

## அரசியல் அநு'B'வங்கள்

சரத்பவார் வாயெல்லாம் பல்லாக இருக்கிறார்; தமது பாராமதி தொகுதியில் ஐந்தே நிமிடம் பிரசாரம் செய்துவிட்டு வோட்டுக்களை அள்ளிக் கொண்டு போனது இருக்கட்டும்; அவரே எதிர்பாராத அளவு, காங்கிரஸ் மஹாராஷ்டிராவில் அமோக வெற்றி பெற்றிருக்கிறதே! குறிப்பாக மும்பையில் அவர் குறிவைத்த மூன்று ஸீட்டுகளும் கனிந்திருப்பது லேசான விஷயமல்லவே? நாலு லட்சம் வோட்டு வித்தியாசத்தில் வெற்றி பெறுவதாக மார்தட்டிய ராம்நாயக் (மும்பையில் வெற்றி பெற்ற ஒரே பி.ஜே.பி வேட்பாளர்) 75,000 வோட்டு வித்தியாசத்தில் வென்றிருப்பதும், சிவசேனைக்கு வெற்றி தேடித் தந்த இருவரில், மோஹன் ரவாலே பிசாத்து 158 வோட்டுக்கள் வித்தியாசத்தில் வென்றிருப்பதும், மதுகர் சத்போத்தார், அரசியலுக்குப் புதுமுகமான துஷார் காந்தியை விட 20,000 வோட்டுக்களே அதிகம் பெற்றிருப்பதும், காவி கலர் கூட்டணியில் விழுந்திருக்கும் அழுத்தமான கரும்புள்ளிகள்! அதுவும் பி.ஜே.பியின் நட்சத்திர வேட்பாளரான பிரமோத் மஹாஜனை மண்ணைக் கவ்வ வைத்திருப்பது தான் ஆச்சர்யமான அதிசயம்! மஹாஜனுக்கென்று பால் தாக்கரேவும், தனிப் பிரேமையுடன் பிரசாரம் செய்ததென்ன... வெற்றி பெற்றே விட்ட கணிப்பில், பிரமோத் மஹாஜன், பி.ஜே.பி ஆட்சி அமைத்த பின் நான்கு "B" க்களை ஒழித்துக் கட்டப் போவதாக – பூக் (பசி), பய் (பயம்), பேரோஜ்கார் (வேலையின்மை) பிரஷ்பிச்சார் (லஞ்சம்) – பேசியதென்ன... ஹூம்! 'இதுவரை பி.ஜே.பி ஒழித்திருப்பது ஒரே ஒரு 'B' யைத்தான் – 'பாப்ரி மஸ்ஜித்' – என்று எல்லோரும் கேலி பேசும் படி ஆகிவிட்டதே! ப்ச்... 'கை'க்கு எட்டியது, 'கமலு' (தாமரை)க்கு எட்டாத கதைதான்!

## தேர்தல் வியாபாரிகள்!

வருடா வருடம் திருவிழா வருவது போல், தேர்தலும் வரத் தொடங்கிய பின், உடம்பெல்லாம் பிசினஸ் ரத்தமாக ஓடும் மும்பைக்காரர்களால் சும்மா இருக்க முடியுமா? சில பல தொழில் ஆர்விகள், அரசியல்வாதிகளை நாடி, அவர்களுக்கு நூதனமான பிரசார யுக்திகளைச் செய்து தருவதாக பேரம் பேசினர். வேட்பாளர்களின் முகம் பதித்த டீ ஷர்ட்டுகள், பேனாக்கள், கீ செயின்கள், தேர்தல் சின்னங்களின் வடிவில் பிஸ் கட்டுகள், மிட்டாய்கள், இன்னபிற வற்றை விநியோகிக்கும் புதுமையான ஐடியாக்களை காசாக்க முயன்றனர். "ஐயோ! 'எலெக்ஷன் கோட்' அதை அனுமதிக்காதே" என்று பின் வாங்கி விட்டனர் அரசியல்வாதிகள். ஆனாலும் இவர்கள் நம்பிக்கை யிழக்க வில்லை! இந்தத் தேர்தலில் இல்லை என்றால் என்ன? இனி தொடர இருப்பவற்றில் இவர்கள் தயவு நிச்சயம் தேவைப் படும் என் கிறார்கள். "ஒரு 'சோப்'பை விற்பதற்கே எத்தனை விளம்பரம் தேவைப்படுகிறது? அரசியல்வாதிகளை 'மார்க்கெட்' செய்வதென்பது சாதாரணமா?" என்கிறார்கள். எப்படியோ, அரசியல்வாதிகள் விற்பனைக் குரியவர்கள் என்ற அளவில் சரிதான்!

## ஆர்வ ரகசியம்!

மும்பையில், பல வோட்டுச் சாவடிகளில், வோட்டுப் போட க்யூவில் நின்று கொண்டிருந்த பெரிசுகளுடன் போட்டி போட்டுக் கொண்டு எக்கச்சக்கமான சிறிசுகளும் காணப்பட்டன. 'அடடா! ஜனநாயகத்தில் இவ்வளவு ஈடுபாடா' என்று சிலர் வியந்து கொண்டிருக்கையில், 'இன்று சனிக்கிழமையா? உபவாசம்; ஒன்றும் சாப்பிட முடியாது; அதுதான் குழந்தைகளை அழைத்து வந்தோம்' எனக் குட்டை உடைத்தார் ஒரு பெரியவர். வோட்டுப் போட்டவர்களுக்கு சில இடங்களில் 'ஜில் ஜூஸ்', பல இடங்களில் சுடச் சுட 'வடா பாவ்' வழங்கப் பட்டதே! அதை வீணாக்குவார்களா?

— ஜெயஸ்ரீ ராஜ்

ச. ஸ்ரீலதா

# தாயில்லாமல் நானில்லை

என் பாட்டியின் தெய்வபக்தி அவள் தேர்ந்தெடுத்த சிட் பண்ட்ஸிலும் பிரதிபலித்தது. பாடுபட்டுச் சேர்த்த பணத்தை சிறுகச் சிறுக ஸ்ரீராம் சிட்ஸில் சேமித்து வந்தாள். என் அம்மாவுக்கு தனியார் நிதி நிறுவனங்களில் அவ்வளவு நம்பிக்கை இல்லாவிடிலும் தன் அம்மாவுக்கு எதிராக ஒன்றும் சொல்ல முடிய வில்லை.

**என் தந்தைக்கு திடீரென்று உடம்பு சரியில்லாமல் போனது.**




**ஆபரேஷன் செய்ய வேண்டுமென்று டாக்டர்கள் கூறினர்.**

என் தந்தைக்கு திடீரென்று உடம்பு சரியில்லாமல் போனது "அப்பெண்டிஸைடீஸ்" "அல்சர்" என்றும், மேஜர் ஆபரேஷன் செய்ய வேண்டுமென்று டாக்டர்கள் கூறவே, என் அம்மாவுக்கு ஒரே மலைப்பு இத்தனைபணத்துக்கு எங்கே போவது? என்று கவலை.

அந்நிலையிலும் பாட்டி சற்றும் மனந்தளராமல் தனது ஸ்ரீராம் சிட்டிலிருந்து பணம் எடுக்க ஏற்பாடு செய்தாள். அம்மா அப்போது தான் ஸ்ரீராமின் மகிமையை உணர்ந்தாள். அன்றிலிருந்து தானும் சம்பளத்தில் ஒரு பகுதியை ஸ்ரீராமில் சீட்டாகக் கட்டி வந்தாள். எனக்கு வெளியூர் பொறியியற் கல்லூரியில் இடம் கிடைத்தது. ஹாஸ்டல் மற்றும் கல்லூரி அட்மிஷன் செலவுகளை சமாளிக்க முடியாமல் தவித்த போது கைகொடுத்தது என் அன்னை கட்டிய ஸ்ரீராம் சிட்ஸ் தான். நான் வேலைக்கு போய் சம்பாதித்ததும் முதல் காரியமாக ஸ்ரீராமில் சீட்டு சேர்ந்து விடுவேன். என் பாட்டியிடமிருந்து அம்மாவுக்கும், அம்மாவிடமிருந்து எனக்கும், வாழையடி வாழையாக வருவது பண்பும், நல்லொழுக்கமும், அடக்கமும் மட்டுமன்று; சீராக பணத்தை செலவு செய்து மிருந்ததனை நல்லதொரு நம்பகமான இடத்தில் சேமிக்கும் பழக்கமும் தான். அந்த இடம் வெள்ளி விழா கண்ட ஸ்ரீராம் சிட்ஸைத் தவிர வேறென்ன?

சென்னை-600 092.

# அம்மாவின் ராஜதந்திரம்!



**பா**.ஜ.க. அமைச்சரவையில் அ.தி.மு.க. பங்கு கொள்ளும் சூழ்நிலையில், சேடபட்டி, தம்பித்துரை, மற்றும் ராஜ்ய சபை உறுப்பினர் ஆர்.கே. குமார் ஆகியோருக்கு அமைச்சராகும் வாய்ப்புக் கிடைக்கும் என்று கட்சி வட்டாரத்தில் பேச்சு அடிபட்டது. ஆனால் இப்போது அதிரடியாக, 'அமைச்சரவையில் பங்கு கொள்ளாமல் வெளியிலிருந்து உறுதியான ஆதரவு தருவோம்' என்று ஜெ. அறிவித்திருப்பது கட்சி வட்டாரத்தில் அதிர்ச்சியைக் கொடுத்திருக்கிறது. அம்மாவின் இந்த அதிரடி அறிவிப்பின் காரணங்கள்:

1. கிட்டத்தட்ட பா.ஜ.க.வுக்கு இது ஒரு மிரட்டல் போலத்தான். தன்னுடைய இலட்சியங்களை நிறைவேற்றும் அதே சமயம் அதனால் உண்டாகும் அரசியல் ஏற்றத் தாழ்வுகள் தன்னை பாதிக்கக் கூடாதென்று ஜெ. நினைக்கிறாராம்.

2. அமைச்சரவையில் பங்கு கொண்டு தன் மீதும் தோழியின் மீதும் நிலுவையில் உள்ள அந்நிய செலாவணி வழக்குகளை முடக்குவதில் உள்ள அரசியல் பாதகங்களை விட, வெளியில் இருந்து அதே இலட்சியத்திற்காக செயல்பட்டால், பின்னால் "எங்களுக்கு ஒன்றும் தெரியாது; பா.ஜ.க. அரசுதான் அந்தக் குற்றச்சாட்டுகள் பொய்யானவை என்று கருதி நடவடிக்கை எடுக்கவில்லை" என்று சொல்லி விடலாம். இதன் மூலம் பா.ஜ.க. பெயரை ரிப்பேர் ஆக்கி, தானும் தப்பிக்கலாம்!

3. வெளியில் இருந்து ஆதரித்தால் கலைஞர் அரசுக்குத் தொந்தரவு கொடுக்க பல வழிகளைக் கையாளலாம். அரசில் பங்கு வகித்தால் சில கட்டுப்பாடுகளுக்குள் செயல்பட வேண்டியிருக்கும்.

4. வெளியிலிருந்து ஆதரவளித்ததன் மூலம் கர்ஜித் எப்படி ஐ.மு. அரசில் செல்வாக்கு வகித்தாரோ, அதே போன்று தாமும் இருக்கலாம் என்று ஜெ. நினைக்கிறாராம்.

5. பா.ஜ.க.வுடன் ரொம்ப ஐக்கியமாகி அரசில் பங்கு வகித்தால், அந்த மைனாரிட்டி அரசு கவிழும் நிலையில் 'நிலையான அரசு' என்று வோட்டு வாங்கிய தமக்கும் பாதிப்பு வருமென்றும், ஜெ. நினைக்கிறாராம்!

இப்படியெல்லாம் காரணங்களை அடுக்கிய ஒரு அ.தி.மு.க. பிரமுகரிடம் "காங்கிரஸுக்கு ஆதரவு கொடுப்பாரா அம்மா?" என்று கேட்டபோது,

"பா.ஜ.க. அமைச்சரவை கவிழும்போது அடுத்து காங்கிரஸுக்குத்தான் வாய்ப்புக் கிடைக்கும். அப்போதும் இயல்பாக அதற்கு ஆதரவளிக்கத்தான் இப்போது பா.ஜ.க.வுக்கு out-side support!" என்றார்.

இதெல்லாம் (சசிகலா) நடராஜனின் யுக்தி என்று சொல்லும் அவர், முதலிலேயே காங்கிரஸ் தலைமையில் அரசு அமைந்தாலும் சிறிது நாட்களில் அவர்களுடன் சமாதானமாகி விடுவார் ஜெ. என்றும் சொல்கிறார்.

**அ**.இ.அ.தி.மு.க. இப்படி முடிவெடுத்துள்ளதைப் பற்றி பா.ஜ.க. என்ன நினைக்கிறது?

"நிர்ப்பந்தங்கள் மூலம் எங்களை சில விஷயங்களில் பணிய வைக்கத்தான் இந்த 'வெளியிலிருந்து ஆதரவு' என்றால், எங்களுக்கும் அரசியல் தெரியும். எந்த வழக்குகளை முடக்க ஜெ. நினைக்கிறாரோ, அதே வழக்குகளைக் காட்டி மிரட்ட எங்களுக்குத் தெரியாதா?" என்று கேட்டார் ஒரு முக்கிய பா.ஜ.க. பிரமுகர்.

ஆனால் வாஜ்பாயும் அத்வானியும் அ.தி.மு.க.வை எப்படியாவது அரசில் சேர்க்க வைத்து விடுவார்கள் என்றும் சொன்னார் அவர்.

— தில்லப்பா



**காதில் விழுந்தவை**

15.3.98 கல்கி

"அந்த மனுசன் இப்படிப்பட்ட ஆளுன்னு நாங்க கண்டமா? சிநேகிதகார்ரு நீங்கதான். உங்களுக்குத் தெரிஞ்சிருக்குமே அவரப் பத்தி. நம்மனால முடியாதப்பான்னு ஒரு பேச்சு சொல்லியிருந்திங்கன்னா இந்தத் தொந்தரவே இருந்திருக்காது."

"அவன் அப்படிப்பட்டவனில்ல சாரதா. இப்ப என்ன சிரமமோ?"

"என்னத்த சிரமம்? அய்யாயர்ருவாக் காசுக்கு முடியாதவங்களா அவங்க? காட்டுல வெளையறதெல்லாம் எங்க போகுதாம்?"

அப்பா பதிலின்றி தரையைக் குனிந்து கொண்டார்.

"குடுக்கணும்னு மனசிருந்தா எப்பவோ குடுத்திருக்கலாம். ரெண்டு மாசத்துல தர்றேன்னு வாங்கிட்டுப் போனது. ஒரு வருசத்துக்குப் பக்கமாயாச்சு."

அப்பாவின் பார்வை இடம் மாறி, காற்றில் சுவரை உரசியாடும் மாதாந்திரக் காலண்டரில் பதிகிறது.

"வேணுங்கும்போது நல்லாக் குளுகுளுன்னு பேசி வாங்கிட்டுப் போயிட்டாரு. அதே மாதிரி திருப்பிக் குடுக்கணும்னு ஒணவு வேண்டாம்? இதுதாஞ் சொல்றது, அய்யோ பாவம் பாத்தா கையோட வந்துரும்னு."

"சரி, விடு."

"விட்டுட்டாச் சரியாயிருமா. நாம விடலாம். காசக் குடுத்தவன் விடணுமே. அதுக்கென்ன பண்றது? வட்டியாவது வந்துட்டிருந்தா அவன் பேசாம இருப்பான். இப்ப உங்களுக்கு ஒண்ணுமில்ல. இவனத்தான அரிச்செடுத்துட்டிருக்கறான்?"

நமசிவாயம் மாமா பணம் கேட்க வந்தபோது அம்மாதான், "நம்மகிட்ட ஏதுங்ணா அவ்வளவு பணம்?" என சொன்னது. முதலில் அவர் கேட்ட தொகை பத்தாயிரம்.

"பாதியாவது கெடச்சாப் பரவால்ல அம்முணி. எப்புடியாவது சமாளிச்சிறலாம். இந்த வருசம் கள்ளக்கா மட்டும் நல்லா வந்திருந்துதுன்னா வித்த கையோட

## ஷாராஜ்



நகையப் போட்டு புள்ளைய அனுப்பிச்சிருப்பேன். அது கொரகத்த... காய் மூப்பே இல்ல. எல்லாம் பிஞ்சாப் போச்சு. செடிக்கு நாலு காய் அஞ்சு காய்ன்னு நின்னா என்ன வெளைச்சல் வரும்? நாப்பது மூட்டை வர்றது, முப்பதே தெகையில. இருவத்தெட்டுதான் ஆச்சு. வெலையும் நெம்பக் கம்மி. முத்துனதுக்கே எரநூத்தி எம்பது, முன்னூறுதான் தர்றான். பிஞ்சுக் காய எரநூத்தி நாப்பதுக்குப் பேசி விக்கறதுக்குள்ள பொறந்தநாக் கண்டுபோச்சு."

"புள்ளைக்குக் கல்யாணத்தும்போது நகை போட்டுத்தான இருந்துது?"

"இருவத்தஞ்சு கேட்டிருந்தாங்கம்முணி. வையாசிலயே கண்ணாலத்த மூச்சுப் போடணும்னு வேற அவசரப்பட்டாங்க சம்மந்திஊட்ல. நமக்குக் கொஞ்சம் டைட்டா இருந்துச்சு. பதனஞ்சு பவுனு இப்பப் போடறம், மீதியப் பொறவு பாக்கலாம்னேன்.

தீவாளிக்குள்ள போட்றோணும்னு.... முடி வாச்சு. அதும்படி செய்ய முடியில. நகை போடுலன்னு தலத் தீவாளிக்கே மாப்பள வர மாண்டீன்னுட்டாரு. பேசிக் கிசி சமாளிச்சு கூட்டிட்டு வந்தோம். சித்திரைக்குள்ள போட்டர்றம்னு சொன்னேன். இன்னும் கொஞ்ச நாள்தானே இருக்குது? அதுதான் அங்கயும் இங்கயும் மொள்ளைய வாங்கிட்டிருக்கறேன். பத்து பவுனுக்கு ரூவா நாப்பதாயரம் வேணுமல்லொ? கடன் வாங்குனது கையில இருந்ததெல்லாம் சேத்துனா இருவது தேறும். மீதிய எங்கயாவது பொரட்டித்தான் ஆகணும்."

நமசிவாயம் மாமா சொந்தம் அல்ல, சாதி சனமும் அல்ல. குழந்தைப் பருவத்திலிருந்து எனக்கு நமசிவாயத்தை மாமா என்று அழைத்துப் பழக்கம். அவரும் என்னை 'மாப்பிள்ளை' வரிசை வைப்பார். பெரிதான பிறகும் அது மாறவில்லை. அப்பாவுக்கு பால்ய சிநேகிதர்.




என்னுடைய மூன்று நான்கு வயதுகளின்போது தின்பண்டங்கள் இருப்பின் யாருக்கும் கொடுக்காத குணம் கொண்டிருந்தேனாம். நமசிவாயம் மாமா எனக்கு செட்டியார் கடையில் பிஸ்கட்டோ, பிச்சனூரிலிருந்து சைக்கிளில் கொண்டு வந்து விற்கிற பலகாரக்காரரிடம் ஜிலேபியோ வாங்கிக் கொடுப்பாராம். ஐஸ்காரன் வந்தால் பாலைஸ், பம்பாய் மிட்டாய்க்காரன் வந்தால் அவனிடமிருந்து கைக்கு ஜவ்வு மிட்டாயில் வாட்ச்.

பிறகு அதில் சிறிதளவேனும் என்னிடமிருந்து பெற கெஞ்சியும் கொஞ்சியும் முயல்வாராம் அவர். வாங்கிக் கொடுத்தவரே ஆனாலும் நானாவது, திருப்பித் தருவதாவது? அப்பா அதைச் சொல்லிச் சிரிப்பார் இன்னும்.

அவர் தரையில் முழந்தாளிட்டு யானையாகி என்னை முதுகில் அம்பாரி சுமந்த நாட்கள்.... ராமர் கோவில் திருவிழாவில் கூட்டம் மறைக்கிறது என்று தோளில் தூக்கி வைத்து உரியடிப்பதையும் வழுக்காமரம் ஏறுவதையும் பார்க்க வைத்த சம்பவம்... சைக்கிள் பழகும்போது எதிரே வந்த லாரியில் அடிபட்ட என்னை ஆஸ்பத்திரிக்குக் கூட்டிப் போனது...

இதுபோல நினைக்க எத்தனையோ இருக்கிறது. அவற்றை நினைத்துப் பார்க்கவும் செய்தேன், அவர் பணம் கேட்டபோது.

அப்பாவிடம் பணம் இல்லை எனத் தெரிந்ததும் என்னைப் பிடித்துக் கொண்டார். "மாப்பளதான் மாச சம்பளக்காரனாச்சே. அவங்கிட்ட இருக்கும். பேங்குல போட்டு வெச்சிருப்பான்."

"அவன் சம்பாத்யத்துலதான்டா இப்ப குடும்பச் செலவே. இதுல பேங்குல எங்க போட்டு வெக்கறது, பேங்குல?"

"பொங்கலுக்கு போனஸ் குடுத்திருப்பாங்களே."

"இல்ல மாமா. அது கவர்மென்ட் ஸ்டாஃப்களுக்குத்தான். எங்களுக்கு தீபாவளியப்பத்தான் வரும்."

"என்னமோ மாப்பள. நான் உங்கப்பன நம்புல. அவன்தான் இப்ப வேலைக்குப் போறதில்லன்னு தெரியுமே. அதனால உன்னத்தான் நம்பி வந்திருக்கறேன்."

அப்பாவின் முன்னிலையில் அவர் இப்படிச் சொன்னதில் எனக்கு உள்ளூரப் பெருமை. அப்பா அதை ஒரு சிரிப்பில் வெளிக்காட்டியும் விட்டார். என்றாலும், இல்லாத பணத்துக்கு எங்கே போக? நமசிவாயம் மாமாவும் பாவம், சொந்த பந்தங்களின் சமீபத்திய நடவடிக்கைகளால் வெறுத்து, அவர்களிடம் போகாமல் இங்கே வந்திருக்கிறார். உதவிகள் என்று எங்கள் குடும்பத்துக்கு அவர் எதையும் செய்யாவிட்டாலும் அவரது பழக்கத்துக்கு இந்த நேரத்தில் நாம் உதவத்தான் வேண்டும்.

அவ்வளவு நேரம் சாதாரணமாகப் பேசிக் கொண்டிருந்தவர் சீரியஸானார். "இது என் குடும்ப கௌரவப் பிரச்சனை மாப்பள. நகை போட்டு அனுப்பலன்னா புள்ளைய விட்டுட்டுப் போயிருவாங்க. நாலு நாளுன்னாலும் புள்ளை வீட்டோட இருந்துது, இந்தக் காரணத்துனாலன்னு வெளிய பேசிட்டாங்கன்னா நம்ம மானம் மருகேதிக்கு அர்த்தமே இல்லாத போயிரும்."



"நான் முன்னுக்கு வந்ததுக்குக் காரணமே உங்க பத்திரிகைதான்...."
"அப்படியா?"
"ஆமா. உங்க பத்திரிகையோட வாரா வாரம் கொடுக்கிற இலவசப் பொருட்களை வச்சு ஒரு பெட்டிக் கடை ஆரம்பிச்சு பிழைப்பு நடத்தறேன்!"

– பா. ஜெயக்குமார்

"என்ன மாமா, இதுக்குப் போயி நீங்க இவ்வளவு கவலைப்படறீங்க. அப்படியெல்லாம் ஒண்ணும் ஆகாது."

"பொண்ணப் பெத்தவம் மாப்பள நானு. இன்னும் ஒரு புள்ளை இருக்குது. அதுக்கும் காரியத்தப் பாக்கணும். பொட்டப் புள்ளைகளைப் பெத்துட்டா ஒரு செலவா ரெண்டு செலவா. காலம் பூரா செலவுதான்."

"செல்லப்பங்கிட்ட கேட்டுப் பாத்தா குடுப்பானாடா?" என்றார் என்னிடம் அப்பா.

அவருக்கு நமசிவாயம் மாமா மாதிரி, எனக்கு அவன். கோழிப்பாறை ஹைஸ்கூல் காலத்திலிருந்து பழக்கம். பின்பு ஊர் சுற்றிக் கொண்டிருந்த நாட்களிலும் கூடத் தொடர்ந்தது.

ஒழலப்பதியில் குடிசைத் தொழில் எனும் படியாகப் பெருகிவிட்ட ஃபைனான்ஸ் மற்றும் சிட் ஃபண்ட்ஸ்களில் செல்லப்பனும் ஒன்றைத் தொடங்கியிருந்தான். கேரளாவில் இவை நடத்த சட்டபூர்வ அனுமதி கிடையாது. இது தமிழக எல்லைப்புறத்தை ஒட்டிய பகுதிதானே. அதனால் பக்கத்திலிருக்கும் ரங்கே கவுண்டன்புதூர், பாலார்பதி, நாய்க்கனூர் என ஏதாவது ஒரு ஊர்ப் பெயரை சிட்டுகளில் முகவரியாக அச்சிட்டு, ஒழலப்பதியிலேயே கம்பெனிகளை நடத்தி வருகிறவர்கள் இவர்கள் அனைவரும்.

செல்லப்பன் 'ஐஸ்வர்யா சிட் ஃபண்ட்ஸ்'ஸைத் துவக்கியதுமே நான் அவனிடமிருந்து விலகி விட்டேன். புதிதாக வேறு நண்பர்கள் அவனைச் சூழ்ந்து கொண்டிருக்கிறார்கள். வழியில் பார்த்தால் சம்பிரதாயமாக ரெண்டொரு வார்த்தைகள் பேசுவதோடு சரி. மற்றபடி எந்தத் தொடர்புகளும் கிடையாது.

அவனை யாரென்று கேட்டார் நமசிவாயம் மாமா. அப்பா அவனது தாத்தாவின் பெயரைச் சொல்லவும், "ஓ... அவரோட பேரனா?" என்றார்.

"முன்ன ஒரு சலக்கா அவரு கூட நமக்கு சின்ன மனஸ்தாபம் இருந்தது. ஆனா நல்ல மனுசன். அவரும் போயி நாலஞ்சு வருசம் இருக்குமல்லொ ராசு?"

"ம்... இருக்கும்."

"கெடைக்குமாடா?"

"கேட்டாக் குடுப்பான்" என்றேன் அப்பாவிடம்.

"கேட்டுப் பாரேன்."

"இப்ப இருக்க மாட்டானுங்கப்பா. கலெக்‌ஷனுக்குப் போயிருப்பான். சாயந்திரமோ ராத்திரியோதான் வருவான்."

நமசிவாயம் மாமா மணி பார்த்தார். நாலரை ஆகியிருந்தது. "இன்னும் கொஞ்ச நேரம் கழிச்சுப் பாத்தாப் போகுது."

**கொ**ஞ்ச நேரம் என்பது அதிகமாகி விட்டது. இரண்டு தடவை அவனது அலுவலக வாடகை அறைக்குப் போய் மூடின கதவைப் பார்த்துவிட்டு வந்தேன். ஏழேகால் சமீபத்துக்கு அவன் வந்திருந்தான். நமசிவாயம் மாமாவையும் அழைத்துச் சென்றேன் அங்கே.

"இப்பப் பணம் இல்லீங்களே..."

"ரெண்டு மூணு நாள் கிருமிச்சு கெடச்சாலும் தேவுலீங்க தம்பீ."

செல்லப்பா என்னை வெளியில் தனியே அழைத்துச் சென்று பேசினான். நான் சாட்சிக் கையெழுத்துப் போடுகிறேன் என்றும் பணம் தொந்தரவில்லாமல் திரும்பக் கிடைக்கும் என்றும் உறுதியளித்த பிறகே உள்ளே வந்தோம்.

"தெரியாத ஆளுகளுக்கு நான் பணம் தர்றதே இல்லீங்க..." என்றவனை இடைமறித்தார் நமசிவாயம் மாமா.

"உங்க அப்பாற நமக்கு நல்ல பழக்கமுங்க தம்பி. உங்கப்பாவுக்குக் கூட என்னைத் தெரியும். உங்களயெல்லாம் கொழந்தையா இருக்கில பாத்தது."

"இவன்" என்னைக் கைகாட்டி, "சொன்னதுனால தர்றேன். அஞ்சு வட்டிதான். வெளி ஆளுககிட்ட ஏழு வட்டி வாங்கறேன். உங்களுக்குங்கறதுனால கம்மி. சொன்ன டயத்துக்குப் பணத்தக் கொண்டு வந்து குடுத்தறணும். ஏன்னா, இதுல பணம் தங்கிருச்சன்னா தொழில் நடத்த முடியாது."

"நல்லா நல்லா." ஆமோதித்தார் அவர்.

"அப்படீன்னா நீங்க நாளானைக்கு நைட்டு இன்னேரம் வாங்க. நீயும் வந்துருடா. இன்னொரு ஆள் கையெழுத்தும் வேணும் சாட்சிக்கு."

மூன்றாம் நாளும் வீட்டுக்கு சாயந்திரமே வந்திருந்தார் நமசிவாயம் மாமா. செல்லப்பன் குறிப்பிட்ட நேரத்துக்கு அவருடன் போய் நானும் அப்பாவும் சாட்சிக் கையெழுத்திட்டு ஐயாயிரம் வாங்கிக் கொடுத்தோம்.

நமசிவாயம் மாமா அன்றைக்குப் போனவர்தான். இரண்டாவது மாதம் பணத்தோடு வருவார் என எதிர்பார்த்தோம். பணமும் வரக் காணோம், ஆளும் வரவில்லை.

செல்லப்பன் தவணை முடிந்ததுமே கேட்டான். சொல்லிச் சமாளித்தேன். நாட்கள், வாரங்கள் என நகர்ந்து மேலும் இரண்டு மாதங்களாகி விட்டன.

"ஃப்ரண்ட்ஷிப்ங்கறது வேற, பிஸினஸ்ங்கறது வேற. அதனாலதான் நான் ஃப்ரண்ட்ஸுகளுக்கே பணம் குடுக்கறதில்லை" என்றான் செல்லப்பன், என்னவோ கடனை நான் வாங்கியது போல.

"தந்துருவாரு செல்லப்பா."

"இதையேதான்டா சொல்லிட்டிருக்கற. இன்னை வரைக்கும் வட்டியாவது வந்திருந்தாப் பரவால்ல. இனியும் லேட்டாச்சன்னா கூட்டு வட்டி போட்டு வசூல் பண்ண வேண்டியதுதான். உங்கிட்ட கேட்டுட்டுத்தான் குடுத்தேன். அத மனசுல வெச்சுக்க."

அடுத்த முறை, "நீயும் வா. அவர நேர்லயே பாத்துக் கேட்டுட்டு வரலாம்" என்று அழைத்தான். கஸூகியின் சாவியை எடுத்தபடியே. அது வேண்டாம் என மறுத்து விட்டேன். அவரது மரியாதையைக் கெடுப்பதாக இந்த சாதாரண விஷயத்தை வளர்த்த நான் விரும்பவில்லை.

"நீங்க போயி அவரப் பாத்துட்டு வாங்கப்பா" என அப்பாவை மட்டும் அனுப்பி வைத்தேன். சைக்கிளில் சென்று வந்தார்.

"நமசிவாயம் வீட்ல இல்ல. எருச்சாம்பதி போயிருந்தான். வர்ற வரைக்கும் இருந்து பாத்துட்டு வர்றேன். ரெண்டு கெடு தக்காளி வித்து அந்தப் பணத்துல வட்டியோட சேத்தி இன்னும் பத்தே நாள்ல தர்றதா சொன்னான்."

அந்தத் தவணையும் மீறியது.

செல்லப்பன் பார்க்கிறபோதெல்லாம் கேட்டான். கேட்டுக் கொண்டிருக்கிறான். எந்த இடம், உடன் யார் என்று சட்டை செய்யாமல். ஆரம்பத்தில் 'எப்பக் கெடைக்கும்?' என வந்த கேள்வி, இப்போது 'கெடைக்குமா கெடைக்காதா?' என மாறி விட்டது. குரலும் உயர்கிறது.

"உன்னை நம்பிக் குடுத்துட்டு நான் அல்லாட வேண்டியிருக்குதுடா. வட்டியே இப்ப ரெண்டாயிரத்து ஐநூறு ஆகுது. பணத்த வட்டியோட அவர்கிட்ட வாங்கிக் குடுக்கறதுன்னா குடு. இல்லீன்னா வட்டியில்லன்னாலும் பரவால்ல, அசலயாவது நீயே குடு. ஏன்னா, யாரோ ஒருத்தருக்காக நான் நஷ்டப்பட முடியாது. உனக்கு வேண்டியவருங்கறதுனால நீ குடுக்கலாம்."

"அதெப்படி செல்லப்பா? அவரு எனக்கு சொந்தமா பந்தமா? ஏதோ அப்பாவோட பழக்கத்துக்காக சாட்சிக் கையெழுத்துப் போட்டோம். அவ்வளவுதான்."

"உங்கப்பாகிட்டயே பேசலாம்னு பாத்தேன். நல்லாருக்காதுன்னு விட்டுட்டேன்."

என் பேரில அவனுக்கு அனுதாபம். அல்லது அப்பாவிடம் மரியாதை. வேறொருத்தனாக இருந்தால் என்னைக் காலரைப் பிடித்திருப்பான். இவனும் மற்றவர்களிடம் அப்படிச் செய்யக்கூடிய ஆள்தான். அதையே சொல்லவும் செய்தான்.

"உன்னால முடியலன்னா சொல்லிடு. நான் வேற வழில பாத்துக்கறேன். அதுக்கும் நம்மகிட்ட ஆள் இருக்குது."

"அதெல்லாம் வேண்டாம் செல்லப்பா" என்று விட்டேன். மறுநாளே சைக்கிளை எடுத்துக் கொண்டு கிளம்பினேன். ஐந்து கிலோ மீட்டர் தூரமிருக்கும். ரேஷன் கடையைக் கடந்து மேற்கே இருக்கிறதாம் நமசிவாயம் மாமாவின் வீடு. அவரது மாமனாரின் வீட்டுக்குப் பக்கமாக. விசாரித்துப்

**"தலைவர் தொகுதிக்குப் போய் வசமா மாட்டிக்கிட்டாரா? அப்புறம் என்ன ஆச்சு?"**

**"நல்லவேளை, மக்களுக்குத் தலைவரோட முகம் மறந்து போய் விட்டதால், 'நான் எம்.எல்.ஏ. இல்ல; அவரோட பி.ஏ.'ன்னு சொல்லித் தப்பிச்சு வந்துட்டார்."**

**— ஜெ. கண்ணன்**



## போட்டி – 7 முடிவு

நமது நிருபர்களைத் 'தலைவரே' என்று அழைத்த அரசியல்வாதி : தாமரைக்கனி.

பலர் சரியாக எழுதியுள்ளனர். எனவே குலுக்கலில் தேர்வாகி, பட்டுப் புடைவைப் பரிசை வெல்பவர் :

எம். ஜெபா,
125 C, அரிதாஸ் நாயுடு தெரு,
கொளத்தூர்,
சென்னை - 99

***வாழ்த்துக்கள்!***

போய்ச் சேர்ந்தேன்.

படிக்கட்டில் நிறைய செருப்புகள். வாசலில் குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தன. திறந்திருந்த கதவின் முன் நின்று, "மாமா.... மாமா..." என அழைக்கும்போதே உள்ளிருந்து பேச்சுக் குரல்களும் சிரிப்பொலிகளும் கேட்டன.

"அடடே... மாப்பள! வா, வா... தனா, ஆரு வந்திருக்கறான்னு பாரு."

கை வைத்த பனியனில் துண்டும் போர்த்தியிருந்த நமசிவாயம் மாமா உள்ளே அழைத்துப் போனார். நாற்காலிகளும் பெஞ்சும் நிறைந்திருந்தன. போதாததற்குத் தரையில் பெண்கள் சிலர். ஓரிரு கிழங்களும் இருந்தன.

"தனா வகைல சொந்தக்காரங்க. நெம்ப நாளைக்கப்பறம் வந்திருக்கறாங்க" என்றார். தனம் அத்தையும் அவர்களது இரண்டாவது பெண்ணும் வந்து என்னை நலம் கேட்டு, குடும்பத்தையும் விசாரித்துச் சென்றனர். "அப்பறம்... என்ன அப்புடியே இந்தப் பக்கம்?"

எதற்கு வந்திருப்பேன் என்று தெரியாதோ? கேட்கிற கேள்வியைப் பாரேன். எனக்கு எரிச்சல் உண்டானது.

"கொஞ்சம் வெளியே போயிப் பேசலாமா?"

வந்தார். வாசல் தாண்டி கிணற்றோரம் மாமரத்தடிக்கு அழைத்துப் போனார். மர நிழலில் சவாரி வண்டி அவிழ்த்து விடப் பட்டிருந்தது.

நான் வந்த காரியத்தைச் சொன்னேன். அவரிடம் கறாராகவே பேச வேண்டும் என்ற முடிவோடு.

"ஓ... அந்த சமாசாரமா?"

"என்னங்க மாமா இவ்வளவு சாதாரணமா கேக்கறீங்க. கடன் குடுத்தவன் இப்ப என்னை நச்சரிச்சிட்டு இருக்கறான். கழுத்தப் புடிக்காத கொறை. அப்பாகிட்ட சொல்லி அனுப்பிச்சதுக்கப்புறமாவது கொண்டு வந்து குடுத்திருக்கணும்ல. நானும் இப்ப வரும், பெறகு வரும்னு பாத்துட்டே இருக்கறன். எங்க வருது?"

"தந்தர்லாம் மாப்ள. பணத்தோட பொறப்பட்டு வர ரெடியா இருந்தப்ப ஈஸ்வரிக்குக் கொளந்த பொறந்துருச்சு. கைல வெச்சிருந்ததுக்கு மேல செலவு. போன மாசந்தான் அவளயும் கொளந்தயோட அனுப்பிச்சுட்டோம்."

"இப்படியே ஏதாவது காரணம் சொல் லீட்டே இருந்தாப் போதுமா மாமா?"

"நான் இப்ப என்ன தர மாட்டேன்னா சொல்றன்?" விட்டேத்தியாக பதில் வந்தது. 'உன்னத்தான் நம்பி வந்திருக்கறன் மாப்ள' என்று சொன்னவரா இவர்?

"எப்பத் தர்றீங்க? தவணை சொல்லாம சீக்கிரமா தந்தா நல்லது."

"இந்த மாசம் கரும்பு வித்ததுமே வட்டியும் மொதலுமா பணம் வந்துரும். நீ வரோணும்ங்கறதில்ல. பணம் ரெடியானதும் நானே வந்து குடுத்தர்றன் மாப்பள. அகத்திப்ப கவுண்டரு பேரங்கிட்ட சொல்லு."

வார்த்தைகளோடு சேர்ந்து ஒத்துழைக்காமல் அவரது முகம் மனத்தில் உள்ளதைக் காட்டியது போலும்.

இருளடைந்து விட்டது. வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தோம். தனம் அத்தை எதிர்வந்தாள்.

"ஏனுங்கோ? அவுங்கள அங்கயே உட்டுப் போட்டு நீங்க இங்க வந்துட்டீங்கொ. பெரிய மச்சாண்டாரு... எங்கம்மா சகலையக் காணமுன்னு தேடீட்டிருந்தாரு."

"இல்ல தனா... நம்ம மாப்பளைக்கு ஏதோ பண மொடையாமா. ஒரு அஞ்சாயிரு ருவா கைமாத்து வேணுங்கறாப்புல. அதப் பேசத்தான் வந்தோம்."

நமசிவாயம் மாமா வீட்டுக்குள் நுழைந்தார். தனம் அத்தையும் பின்னாலேயே.

நமசிவாயம் மாமாதானா இது என நம்ப முடியாதவனாக சற்று நேரம் நின்றிருந்தேன். யாரிடமும் சொல்லாமல் வாசலிலிருந்த சைக்கிளை ஸ்டாண்ட் தட்டிவிட்டு, ஏறி மிதிக்கத் தொடங்கினேன்.

• படப்பிடிப்பில்: மகேந்திரனுடன் கௌதமி



**முழுக்க முழுக்க, செட்டி நாட்டு சமூகத்தைப் பற்றிய ஒரு படத்தை NFDCக்காகத் தயாரித்து வருகிறார் டைரக்டர் மகேந்திரன். பெயர் — சாசனம். மகேந்திரனுடன் ஒரு சந்திப்பு:**

**"பல வருட இடைவெளிக்குப் பின் நீங்கள் இயக்கும் படம் 'சாசனம்'. இந்த இடைவெளியில் உங்களுக்குள் மாற்றம் எதுவும் நிகழ்ந்திருப்பதாக நீங்கள் உணர்ந்திருக்கிறீர்களா?"**

"ஆமாம்! அப்போ சினிமாவின் இலக்கணம் தெரியாம படம் எடுத்துக்கிட்டிருந்தேன். எனக்குப் பிடிச்ச அழகான விஷயங்களை எனக்குப் படித்த மாதிரி விஷுவல் பண்ணினேன். இடையில் நிறைய வெளிநாட்டுப் படங்கள் பார்க்கப் பார்க்க, நிறைய படிக்கப் படிக்க, இலக்கணம் தெரிஞ்சு போய் ஒரு ஷாட் எடுக்க, இப்ப பயப்பட வேண்டியிருக்கு!"

**"செட்டி நாட்டுக் கதையொன்றைப் படமாக்க வேண்டுமென்று எப்படித் தோன்றியது?"**

"திரைப்பட விழாவில் சில வெளிநாட்டுக்காரங்களைச் சந்திச்சப்போ, 'வெளிநாட்டுப் படங்களைப் பார்த்து நீங்க ஏன் படம் பண்றீங்க? உங்களோட கலாசாரத்தை ஏன் சொல்லக் கூடாது'ன்னு கேட்டாங்க. அப்ப தோணினது இது. நகரத்தார் வாழ்க்கையைப் படமாக்கலாம்னு மூணு வருஷமா ரிசர்ச் பண்ணினேன். காரைக்குடியைச் சுத்தி 96 கிராமங்கள் இருந்துச்சு. ஆனா, இப்போ 73 கிராமங்கள் தான் இருக்கு. நகரத்தாரோட அருமை பெருமைகள், வாழ்ந்து அழிந்து



• கௌதமி

# சாசனம் - ஒரு சமூகத்தின் கதை!

போனவைகளைப் பற்றிப் பதிவு செய்திருக்கிறேன்."

**"'சாசனம்' படத்தின் கதை, கந்தர்வன் எழுதிய சிறுகதைதானே?"**

"அது ஒரு மூணு பக்க கதை. 'உதிரிப் பூக்கள்' படம் பண்ணினேன். புதுமைப்பித்தனின் 'சிற்றன்னை'க்கும் படத்துக்கும் சம்பந்தமே இல்லை! அதைப் படிச்சதுனால எனக்கொரு 'இன்ஸ்பிரேஷன்' கிடைச்சது. ஒரு தீக்குச்சி கொளுத்தற மாதிரி. புதுமைப்பித்தன் பேரை வைச்சு, பணம் பண்றேன்ட்டு விமர்சனங்களெல்லாம் வந்தது. மூலக்கதை புதுமைப்பித்தன்னு டைட்டில் கார்டு போட்டேன். இதே மாதிரிதான் இப்பவும். கந்தர்வனின் கதை, நவீன ஓவியம் மாதிரி. ஒன்னும் புரிஞ்சுக்க முடியாது. நான் அதை உன் வாங்கிட்டு, என் பாணில திரைக்கதை எழுதினேன். கந்தர்வன், "சார் கதையில வர்ற புளியமரமாவது படத்துல வருமான்னு"- கேட்டார். "படத்துல புளியமரம் வருதோ, புளியங்கன்னு வருதோ - உங்க பேர் வரும் வரும் கந்தர்வன்"-னு சொன்னேன். கதைக்கான பெயர் கந்தர்வனுக்குச் சேரும்!"



• அரவிந்தசாமி: வாழ்ந்திருக்கிறார்!

**"'சாசனம்' கதை எதைச் சுற்றி நிகழ்கிறது?"**

"செட்டி நாட்டுக் கலாசாரத்துல, சொல்ல முடியாத சங்கதிகள் எவ்வளவோ இருக்கு. அதெல்லாம் இப்ப புதுசாத் தெரியும். கல்யாணம்கறதுகூட ஒரு




**படிப் பதிவு செய்திருக்கிறீர்கள்? அதற்கே யுரிய அரண்மனை வீடுகள் – வாழ்க்கை முறை இவற்றை...?''**

''பன்னிரெண்டாயிர அடிக்குள்ள செட்டிநாட்டுக் கலாசாரத்தை அடக்கிட முடியாது. சத்யஜித்ரே செஞ்சா மாதிரி ஒரு 'Triology' செஞ்சாத்தான் முடியும். சாசனமும் மூணு பாகம் வர்ற படம் தான்! அடுத்தப் படத்திலும் இதே அரவிந்தசாமிதான் நடிக்கிறார். வயசு வித்தியாசம் படத்துல தெரியும்.''

**''தத்துப் பிள்ளை பற்றின கதை என்பதால் பிரச்னைக்குரிய கதையா இது? எந்தக் கால கட்டத்தில் கதை நகர் கிறது?''**

''ஒரு பிரச்னையும் இல்லை. உணர்வுகளைத்தான் நான் சொல்லியிருக்கிறேன். எண்பதுகளில் ஆரம்பிச்சு தொண்ணூறுல முடியுற மாதிரி இருக்கும். எந்த பார்ட்டியையோ கவர்ன்மென்ட்டையோ அடையாளப் படுத்துல. பின்னணிக்கு கால கட்டத்தை எடுத்துக்கலை.''

**'''சாசனம்' – படத்தின் கதை என்ன?''**

''ராமநாதன் செட்டியார் (அர்விந்த்சாமி). தத்துப் போன அப்புறம் இந்தப் பெயர். அதுக்கு முன்ன அர்விந்த்சாமியோட பேர் மெய்யப்பன். கௌதமி, அர்விந்த்சாமியோட மனைவி விசாலாட்சி ஆச்சியாய். புருஷன் மனசுக்குள்ள ஓடற வேதனை. பெற்ற தாய் தகப்பனைப் பார்க்க முடியலேங்கற உணர்வு. இந்த கேரக்டர்தான் அர்விந்த்சாமி. சோகத்திலிருந்து புருஷன் மீள – புருஷனுடைய சந்தோஷத்திற்காக எதையும் செய்யும் விசாலாட்சி ஆச்சி. இதையும் மீறி அவர்கள் வாழ்க்கையில புதுப் பிரச்னை ஏற்படுது. அதைச் சொல்ல வேண்டாம்ன்ட்டு நினைக்கிறேன். கதையையும்கூட! சபீதா ஆனந்த் ஒரு கேரக்டர் பண்றாங்க. அந்த கேரக்டர் தான் இந்த கதைக்கான ஐடியாவே! செட்டிநாட்டுக் கலாசாரம் எப்படி அழியுது. அதுக்கு எதிர்ப்பா ஒரு பொண்ணு. வீட்டோட ஒரு போர்ஷனை பிரிச்சு வித்தாத்தான் மகளோட கல்யாணத்தை நடத்த முடியும். இப்ப காரைக்குடியில என்ன நடக்குதுன்னா – செட்டி நாட்டிற்கேயுரிய அந்த வீடுகள் – சில பல தேவைகளுக்காக விலை

பெரிய விஷயம். நகரத்தாருக்குன்னு ஒன்பது கோயில் இருக்கு. அதுல அவங்கவங்களோட கோயில்லேருந்து மாலை வந்தாத்தான் கல்யாணம். இப்படி நிறைய. செட்டிநாட்ல தத்தெடுக்கிறது, சர்வசாதாரணம். ஏழையோ – பணக்காரனோ, பையனை வெளிநாட்டுல படிக்க வச்சிருப்பாங்க. பெரிய இடத்துல இருந்து தத்து எடுப்பாங்க. இப்பல்லாம் இருபது வயது – இல்லன்னா பெரிய படிப்பு படிச்ச பசங்களைத் தத்து எடுக்கிறாங்க.''

**''தத்து எடுப்பதுதான் கதையின் முக்கியத் தளமா?''**

''ஆமா! அர்விந்த்சாமி ஒரு தத்தெடுக்கப்பட்ட மகன். தத்துக்கு அப்புறம் இனிஷியலே மாறிடுது! பெத்த தாய் தந்தைக்குக் கூடக் கொள்ளி வைக்க முடியாது. சுப்ரீம் கோர்ட்டுக்குப் போனாக்கூட கொள்ளி வைக்க முடியாது! தத்து அப்ப அரைஞான் கயிரை அறுப்பாங்க. அதோட பெத்தவங்க உறவு அறுந்து போச்சுன்ட்டு. இப்படி விஷயம் அதிகம். அடாப்ஷன்ல இருக்கிற சந்தோஷத்தின் இன்னொரு பக்கமா இருக்கிற சோகம்தான் கதையோட தளம்.''

**''செட்டிநாட்டுக் கலாசாரத்தை எப்**

போய்க்கிட்டிருக்கு. வீடுகள் போறது கலாசாரம் சிதைஞ்சு போறது மாதிரி தானே!"

**"அர்விந்த்சாமியின் மனைவியாக கௌதமி. எனில் என்ன பாத்திரத்தில் ரஞ்சிதா?"**

"ஸாரி. ரஞ்சிதாவின் கேரக்டரைப் பத்திச் சொன்னா முழுக் கதையையும் சொல்லிடறமாதிரி வந்து விடும்."

**"'சாசனத்திற்கு ஒளிப்பதிவு செய்யும் நம்பியாத்ரிக்கு இதுதான் முதல் படமா?"**

"இல்லை. அவர் ஏற்கனவே நம்பி என்கிற பெயரில் கேயாரின் 'ஈரமான ரோஜா' விற்கும் – இன்னும் ஒன்றிரண்டு படங்களிலும் தமிழில் ஒர்க் பண்ணியிருக்கிறார்."

**"இளையராஜா உங்களின் ஃபேவரிட் இசையமைப்பாளர் ஆச்சே. ஆனா இந்தப் படத்திற்கு ஏன் பாலபாரதியைப் போட்டிருக்கீங்க?"**

"ராஜாவுடைய பட்ஜெட் அடங்கலை! பாலபாரதியோட ம்யூஸிக் கேட்டப்ப, திருப்தியா இருந்தது. அவரை ஃபிக்ஸ் பண்ணிட்டேன்."

**"NFDC தயாரித்த 'கருவேலம் பூக்கள்' படத்திற்கு இளையராஜாதானே ம்யூசிக் பண்ணியிருக்கிறார்? அதுவும் பட்ஜெட் படம்தானே?"**

"ராஜாவோட ரெண்டு மூணு ஸிட்டிங் உட்கார்ந்து பார்த்தேன். NFDC - படம் என்பதால் தயாரிப்பாளரும் நான்தான். ஒவ்வொரு பைசா செலவையும் கணக்குப் பார்க்கிற புது எக்ஸ்பீரியன்ஸ் வேறு. மூணு ஸிட்டிங்ல பட்ஜெட் எங்கேயோ போயிடும்னு தோணிச்சு. 'ராஜா நான் வேறு ம்யூசிக் டைரக்டரை வச்சு பண்ணிக்கிறேன்'ட்டு சந்தோஷமா வந்துட்டேன். ஆனா, இப்ப பாலபாரதியால 'சாசனம்' சப்ஜெக்டை உள் வாங்கி, ரீ ரெகார்டிங் பண்ண முடியுமான்ட்டு தெரியலை. எடிட்டர் லெனின் மூலம் ரீ-ரெகார்டிங்கை மட்டும் ராஜாவை வைச்சு பண்ணலாம்ன்ட்டு ஐடியா இருக்கு."

**"படப்பிடிப்பு முழுதும் முடிஞ்சிடுச்சா? 'சாசனம்' அனுபவங்கள் எப்படி?"**

"பத்து நாள் ஷூட்டிங் பாக்கி இருக்கு. பர்ஸ்ட் ஷெட்யூல் போனப்போ மழையும் புயலுமா இருந்துச்சு. காரைக்குடி வீடுகளெல்லாம், ரொம்ப உயரத்துல கட்டியிருப்பாங்க. புயல் அபாயம் கருதி. காரணம் பூம்புகார் அழிஞ்சப்போ அங்கே இருந்து தெக்கு பக்கமா வந்து குடியேறினவங்கதான் நகரத்தார்கள். அந்தப் புயல்லயும் கவலை இல்லாம படப்பிடிப்பு நடத்தினோம். எனக்கும் அர்விந்தசாமிக்கும் என்ன ஒற்றுமைன்னா ரெண்டு பேரும் செயின் ஸ்மோக்கர்ஸ்! அர்விந்த்சாமி செட்டிநாட்டுல ஒரு பணக்கார செட்டியாரா கேரக்டர் பண்றதால பேண்ட் கிடையாது. ஒயிட் அண்ட் ஒயிட்லதான் இருப்பார். அந்த கேரக்டராகவே வாழ்ந்தார்னு சொல்லணும். அவரால மத்தவங்களும் படு சின்ஸியரா பண்ணாங்க. அர்விந்த்சாமியோட நடிப்பு முறையைப் பார்த்துட்டு கௌதமி, ரஞ்சிதா எல்லாருமே இன்வால்வாகி, அர்விந்த்சாமியோட ஆக்டிங்கிற்கு 'ட்யூன்' ஆயிட்டாங்க."

**"காரைக்குடியில எங்கெங்கே ஷூட் பண்ணினீங்க?"**

"கண்டனூர்ங்கற ஊர்ல ஒரு வீடுதான் லொகேஷன். படம் முழுதும் அங்கேதான் எடுத்துட்டிருக்கோம். இதுவரைக்கும் அந்த வீட்ல யாரும் ஷூட் பண்ணினது கிடையாது. நான் அங்க ஷூட் பண்ணினதுக்கப்புறம் இப்ப நிறைய பேர் அந்த வீட்டைத் தேடிப் போறாங்க."

**"காரைக்குடிக்கும் உங்களுக்கும் தொடர்புகள் ஏதேனும்?"**

"எங்கம்மா கவர்ன்மென்ட் ஆஸ்பத்திரியில கம்பவுண்டரா இருந்ததால, பல ஊர்கள்ல நான் வாழ்ந்திருக்கேன். அப்படித்தான் காரைக்குடியிலயும்!"

சந்திப்பு: **ரெவித்தம்பி**

---

**"நேத்திக்கு கண்டிப்பா ஆபரேஷன் பண்ணணும்னு சொன்ன டாக்டர் இன்னிக்கு ஆபரேஷனே வேண்டாம்னு திருப்பி அனுப்பிட்டார்!"**

**"அதெப்படி...?"**

**"எங்கே வேலை பார்க்குறீங்கன்னு கேட்டார்; கன்ஸ்யூமர் கோர்ட்டுல டைப்பிஸ்டா இருக்கேன்னு சொன்னேன்!"**

**— சீர்காழி வி. ரேவதி**





# சொர்ணமுகி

இரு நாயகர்களில் யார் பக்கம் சாய்வது என்று தவிக்கும் நாயகி. பிரபல நடன மணியாக தேவயானி. கொஞ்சம் சிரமப்பட்டு சில பரத அசைவுகளை யாவது அழகாகக் கற்றுக் கொண்டிருந்தால், நடனக் காட்சியில் நாம் சிரமப்பட்டிருக்க வேண்டாம். என்றாலும் பிரகாஷ்ராஜின் காதலுக்கு ஓ.கே. சொன்னபிறகு, வரமாட்டான் என்று நினைத்த முன்னாள் காதலன் பார்த்திபன் வந்து விட, அதன்பின் நடிப்பில் சிரத்தை தெரிகிறது.

இடைவேளைக்கு முன் பார்த்திபன் குறைவாகவே வந்தாலும் கலகலப்பான நிறைவைத் தருகிறார். ஆனால் பின் பாதியில் இவரது ஆக்கிரமிப்புக்காக பிரகாஷ்ராஜ் பாத்திரம் கம்மியாக மட்டுமல்ல; டம்மியாகவே ஆக்கப் படுகிறது. லொடலொட வென்று பேசி, அதுவும் முன்வரிசை கைதட்டலுக்காக "இந்தப் பொம்பளைங்களே...." முதல் தனது டிரேட் மார்க்கான 'இன்னாங்கடி' வரை – பார்த்திபன் படுத்துவதால் பாத்திரத்தின் தன்மை சிதைவதுடன், கடைசியில் வெளிப்படும் அவர் தியாகத்தையும் மனத்தில் பதிய விட மறுக்கிறது.

"சும்மானாச்சும் ஒரு டிராமா" என்ற போர்வையில் பெண்களை மிகக் கேவலப்படுத்துகின்றன பார்த்திபன் பேசும் வசனங்கள். அதுவும் அவர் ஆள் வைத்து பிரகாஷ்ராஜின் கை காலை உடைக்கிறார். மருத்துவமனைக்குப் போய் அவரை ஆவேசமாகத் தாக்குகிறார். இதிலெல்லாம் பிரகாஷ்ராஜ் இறந்து விடலாம் அல்லது அந்த வெறுப்பில் பார்த்திபனைக் கொலை செய்துவிட்டு சிறைக்குப் போகலாம் என்ற பின்னணியில், காதலி தேவயானி, பிரகாஷ்ராஜோடு நிம்மதியான திருமண வாழ்வு காணத்தான் இந்த டிராமா என்பது அபத்தமாக இருக்கிறது.

வசனத்தில், எக்கச்சக்க 'நாய்'கள். (இத்தனைக்கும் படத்தில் கவுண்டமணி இல்லை). ஏதோ மாநகராட்சி நாய் வண்டியில் இரண்டு மணி நேரம் உட்கார்ந்து விட்டு வந்த உணர்வு. ●

— ஜி

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1600/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 800/- (Air Mail)

# தொண்டைக் கரகரப்பா?





**கிர்ர்ர்ர்ர்** **முழுங்கணும்.**




ஆம். நன்கு கொப்பளித்து, பின்பு முழுங்கவும்.

அறிமுகம் ஸ்மைல். இது ஒப்பற்ற ஆயுர்வேத இரட்டை ஆற்றல் கொண்ட ஸோர் த்ரோட் ரிலீவர். இது கொப்பளித்து, விழுங்கிய உடனேயே சிறந்த ஆற்றல் அளிக்கும்.

ஸ்மைலைக் கொப்பளிப்பதால் உங்கள் தொண்டை இளகுவதோடு எரிச்சலைக் குறைத்து மற்றும் தொற்று நோய் பாதிப்பு உள்ளதா-வென்றும் சோதிக்கிறது. ஸ்மைலை விழுங்குவதால், உங்களுடைய அடித் தொண்டைக்கு இதமும், நீண்ட நேர பாதுகாப்பும், சுகமும் அளிக்கிறது. வேறெதுவும் தர முடியாத தொண்டைக் கரகரப்பிலிருந்து விடுதலையை, ஸ்மைல் இரட்டை ஆற்றலுடன் செயல்பட்டு ஆறுதல் அளிக்கிறது. ஸ்மைல், உடனடி நீடித்த ஆறுதலுக்கு.

Sore Throat Reliever
Smyle

Kopran

ஸ்மைல் பிரபல மருந்துக் கடைகளில் கிடைக்கிறது.

தொண்டைக்கரகரப்பிலிருந்து விடுதலையுடன் இதமளிக்கும்.

